# கல்கி

KALKI 7.6.98 ரூ. 4.50

கலைஞரின் முற்றிலும் மாறுபட்ட பேட்டி!

# கலைஞர்-75

இருள் விலகட்டும்; ஞானச் சுடரொளி எங்கும் பரவட்டும்!

இந்துமதத்தைப் புரிந்துகொள்ள;
வாழ்க்கைத் தத்துவம் அறிந்துகொள்ள

விற்பனையில் ...



விலை ரூ.10/-

ஒளிவிடும்

# ஞானச் சுடர்

முழுமையான ஆன்மிக மாத இதழ்

இந்த இதழில் ....

## எல்லோருக்கும் எளிய ஒரு மந்திரம்!

ஸ்ரீ சிருங்கேரி மகாசுவாமிகள்

## இறைவனுக்கு ஆயிரம் நாமங்கள் ஏன்?

உடுப்பி ஸ்ரீவித்யாதீச தீர்த்த சுவாமிகள்

## சரணக் கமலாலயம்!

கவியரசு. சொக்கு சுப்பிரமணியன்

## எல்லோருக்கும் எளியவரான எம்பெருமானார்!

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

## திருவக்கரை தேவன்தாள் போற்றி!

எஸ். கண்ணன் கோபாலன்

இலவச இணைப்பாக ...

மகான் ஸ்ரீராகவேந்திரர் - வண்ணப்படம்
மங்கலம் யாவும் சேர்க்கும் குங்குமப் பிரசாதம்

விவரங்களுக்கு...

லக்ஷ்மி பப்ளிகேஷன்ஸ், த.பெ. எண். 7010
விருகம்பாக்கம், சென்னை - 600 092.
P.P. போன் : 4720050

ஏஜெண்டுகள் இல்லாத ஊர்களில் முன்பணம் கட்டி விண்ணப்பிக்கக்கூடிய ஆர்வமுள்ள ஏஜெண்டுகள் தொடர்பு கொள்ளலாம்.




# "ஜெயலலிதாவிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம் என்ன?"

முதல்வர் கலைஞரை இதுவரை நாம் எத்தனையோ முறை சந்தித்துப் பேட்டி கண்டிருக்கிறோம். அத்தனை முறையும் அரசியல் பற்றித்தான் கேள்விகள் கேட்டிருக்கிறோம். பவள விழாக் காணும் அவரிடம் இந்த முறை அரசியல் தவிர்த்த கேள்விகளைக் கேட்டால் என்ன என்று தோன்றியது. அரசியல் தொடர்பான பேட்டிகளுக்கு, நாம் முன்கூட்டியே கேள்விகளைத் தயாரித்து அவரிடம் கொடுப்பதில்லை. என்றாலும் இப்போது தனிப்பட்ட முறையிலான கேள்விகள் என்பதால் கேள்விகளை முன் கூட்டியே தயார் செய்து கொண்டு போய்க் கொடுத்தோம். "கேள்விகளை நானே படித்துப் பதில் சொல்வதை விட நீங்களாகவே கேட்டால்தான் எனக்குப் பதில் சொல்வது சுலபமாக இருக்கும். கேளுங்கள்!" என்ற

*கல்கி இன்டர்நெட் முகவரி:* www.kalkiweekly.com *ஈ மெயில்:* kalki@md2.vsnl.net.in

## கலைஞர் – 75

"**க**லைஞர் ஒரு வெற்றிகரமான அரசியல்வாதியா என்ற கேள்வி எழுப்பப்படுமானால், அதற்கு பதில் 'இல்லை' என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும். இதற்குப் பல காரணங்கள் இருந்தாலும் முக்கியமான காரணம், பல சந்தர்ப்பங் களில் செய்யாத தவறுகளுக்கு அவர் குற்றவாளி ஆக்கப்பட்டி ருக்கிறார். அதன் காரணமாக அவருக்கு



அரசியல் வீழ்ச்சி வந்திருக்கிறது. வரலாற்றில் அவர் பெயர் நிற்க வேண்டுமானால், 'குடும்பத்தாருக்கு முன்னுரிமை கொடுக்கிறார்' என்ற குற்றச்சாட்டை பொய்யாக்கும் வகையில் கொள்கை-லட்சியக் கொடிகளைத் தூக்கிப் பிடிக்க வேண்டும்.

– கே.பி. சுனில்
(ராஜ் நியூஸ் எடிட்டர்)

## கலைஞர் – 75



**எ**னக்கு கலை ஞரை ரொம்ப நாளாகத் தெரியும். 'முத்தமிழ்ப் பேரவை' அமைப்பிற்கு என்னை அழைத்து சன்மானம் வழங்கி யுள்ளார். எதிர் கருத்துக்கள் அவர் மீது இருந்தாலும் கலைஞர்களைக் கௌரவிக்கத் தெரிந்தவர் அவர் மட்டுமே. அன்பு மயமானவர்.

– பாலமுரளிகிருஷ்ணா

கலைஞர், "டேப்பில் சரியாக ரெகார்ட் ஆகிறதல்லவா?" என்று வழக்கமான கவனத்துடனும் உற்சாகத்துடனும் பேச ஆரம்பித்தார்....

**கல்கி** : உங்களுடைய எத்தனையாவது பிறந்த நாள் பிரபலமாக, பெரிய அளவில் முதன் முதலாக கொண் டாடப்பட்டது? அப்போது யாரெல்லாம் உங்களை வாழ்த்தி னார்கள்?

**கலைஞர் மு. கருணாநிதி** : என்னுடைய 44-வது பிறந்த நாளின் போதுதான் சென்னையிலுள்ள கழகத் தோழர்கள், தொண்டர்கள் எல்லாம் எனது பிறந்த நாளைக் கொண்டாட வேண்டும் என்று ஆரம்பித்தார்கள். நான் சென்னையிலேயே இல்லாமல் மன்னைக்கு ஓடி விட்டேன்!

**கல்கி** : ஏன்?

**கலைஞர்** : பிறந்த நாள் கொண்டாடப்படக்கூடாது என்றுதான். ஆனாலும் கலைவாணர் அரங்கத்தில் அண்ணா தலைமையில் எனது பிறந்த நாள் கொண்டாடப்பட்டது. நான் இல்லாமலேயே கொண்டாடப்பட்டது! அந்த விழாவில் அண்ணா சொன்னதுதான், 'தண்டவாளத்தில் தலைவைத்துப் படு என்றாலும் அமைச்சர் பதவியை ஏற்றுக் கொள் என் றாலும் இரண்டையும் ஒன்றாகக் கருதுபவன் என் தம்பி கருணாநிதி' என்பது. அண்ணாவின் அந்த 'வாழ்த்தைத்தான் நான் முக்கியமாகக் கருதுகிறேன்.

**கல்கி** : இன்றளவும் மறக்க முடியாத பள்ளிக்கூட அனு பவம் ஒன்றைச் சொல்லுங்களேன்!

**கலைஞர்** : நான் பள்ளிக்கூடத்தில் சேர்ந்ததே பெரிய அனுபவம்தான். திருக்குவளை கிராமத்தில் படித்துக் கொண் டிருந்தேன். படிக்கும்போது எனக்கு டியூஷன் சொல்லிக் கொடுத்த ஆசிரியர், என்னை எட்டாம் வகுப்பில் சேர்ப்ப தாகச் சொல்லி திருவாரூருக்கு அழைத்துக் கொண்டு வந்தார். ஆனாலும் நான் ஐந்தாம் வகுப்பில்தான் சேர்க்கப்பட்டேன். அதில் சேருவதற்குப் போதுமான அளவு மதிப்பெண்ணைக் கூட நான் பெறவில்லை என்பதால் அதில் சேர்ந்ததும் ஒரு கதை. அப்போது கஸ்தூரிரங்க ஐயங்கார் என்பவர் ஹெட் மாஸ்டர். அவர் ரூமுக்கு ஓடிப் போய், 'என்னைப் பள்ளிக் கூடத்தில் சேர்த்துக் கொள்ளப் போகிறீர்களா, இல்லை எதிரில் உள்ள கமலாலயம் குளத்தில் போய் விழவா?' என்று சொல்லி விட்டு ஓடி வந்தேன். ஹெட் மாஸ்டரே ஓடிவந்து என் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய் எனக்கு ஐந்தாம் வகுப்பில் அட்மிஷன் கொடுத்தார்.

**கல்கி** : மறக்க முடியாத உங்கள் இளம் வயது நண்பர் யார்?

**கலைஞர்** : திருவாரூர் தென்னன்தான்.

**கல்கி** : உங்களைக் கட்சியின் தலைவராகவோ அல்லது முதல்வராகவோ நினைத்துப் பழகாமல், மு. கருணாநிதி என்கிற அளவில் மட்டுமே பழகிக் கொண்டிருக்கிற நண்பர் கள் யாராவது இருக்கிறார்களா?

**கலைஞர்** : சி. டி. மூர்த்தி என்பவர். அவரை சி.டி.எம். என்று அழைப்போம். சென்னையில்தான் இருக்கிறார்.

**கல்கி** : எல்லோருக்குமே 'வாடா போடா' என்று அழைக் கிற அளவுக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். அப்படி உங்களை

அழைக்கிற அளவுக்கு நண்பர்கள் இருக்கிறார்களா?

**கலைஞர்** : சி.டி. மூர்த்திதான். அவரை நான் 'வாங்க, போங்க' என்றுதான் சொல்லுவேன். என்றாலும் அவர் என்னை 'வா, போ' என்றுதான் அழைப்பார்.

**கல்கி** : நீங்கள் முதன் முதலில் சந்தித்த திராவிட இயக்கப் பிரமுகர் அல்லது தலைவர் யார்?

**கலைஞர்** : பட்டுக்கோட்டை அழகிரிசாமி. 1938- இந்தி எதிர்ப்புப் போராட்ட நேரம். அப்போது எனக்குப் பதினாறு வயது இருக்கும்.

**கல்கி** : கல்லூரியில் படிக்க முடியவில்லையே என்கிற ஏக்கம் உங்களுக்கு எப்போதாவது ஏற்பட்டதுண்டா?

**கலைஞர்** : அரசியல் துறையில் நான் நம்பிய நண்பர்களால் ஏற்படுகின்ற ஏமாற்றங்களைச் சந்திக்கும்பொழுது, 'ஐயோ கல்லூரியில் படித்திருந்தால் அரசியலுக்கு வந்திருக்க மாட்டோமே' என்று நினைத்திருக்கிறேன். கல்லூரியில் படித்திருந்தால் ஏதாவதொரு வேலைக்கல்லவா போயிருப்பேன்!

**கல்கி** : பெரியாரிடம் உங்களுக்கு மிகவும் பிடித்த அம்சம் என்ன?

**கலைஞர்** : அவருடைய அயராத உழைப்புத்தான்.

**கல்கி** : உங்களைப் பற்றிப் பிறர் குறிப்பிடும்போதும் உங்களுடைய உழைப்பைப் பற்றித்தான் குறிப்பிடுகிறார்கள்.

**கலைஞர்** : பெரியாரின் மாணவன்தானே நான்!

**கல்கி** : பெரியாரின் அயராத உழைப்புக்கு ஓர் உதாரணம் சொல்லுங்களேன்!

**கலைஞர்** : பெரியார் அவர்கள் சிறுநீரக நோய்க்கு ஆட்பட்டிருந்தார். ஒரு டியூபின் மூலமாகத்தான் அவரது சிறுநீர் வெளியேற்றப்படும். அதற்காக எப்போதும் அவருடன் ஒரு வாளி இருக்கும். உட்கார்ந்து பேசும்போதும் அந்த வாளி கூடவே இருக்கும். இந்த நிலையிலும் அவர், தமது சுற்றுப் பயணங்களைக் குறைத்துக் கொண்டது கிடையாது. அதனால்தான் அவர் மறைந்த போது நான், 'பெரியார் தமது சுற்றுப்பயணத்தை நிறுத்திக் கொண்டார்' என்று சொன்னேன். அப்படியோர் அயராத உழைப்பு அவருடையது.

**கல்கி** : அண்ணாவிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம்?

**கலைஞர்** : அவரது எளிமை. அவர், தாம் போட்டுக் கொண்டிருக்கிற சொக்காயைப் பற்றிக் கூட கவலைப்பட மாட்டார். அதில் எத்தனை பொத்தான்கள் இருக்கிறதென்பது கூட அவருக்குத் தெரியாது. பல நேரங்களில் பொத்தான்கள் ஒன்றுக்கொன்று மாறுதலாகப் போடப்பட்டிருக்கும். சில நேரங்களில் நாங்கள் இதைப் பொதுக் கூட்ட மேடைகளில் பார்த்து விட்டுச் சொன்னாலும் கவலைப்பட மாட்டார். கட்டாயப்படுத்தித்தான் அவரை தலை வாரிக் கொள்ளச் செய்வோம். ஷேவ் செய்து கொள்வது பற்றியும் கவலைப்பட மாட்டார். அவர் முதல்வரான பிறகுதான் தொடர்ந்து ஷேவ் செய்து கொண்டார். அதோ... ஹாரி மில்லர் எடுத்த அண்ணாவின் படத்தைப் பாருங்களேன்... (கலைஞரது அறையில் உள்ள ஷேவ் செய்யப்படாத, அண்ணா படத்தைக் காட்டுகிறார்)

**கல்கி** : உங்கள் சமகாலத்திய இயக்கத் தோழர்களில் யாரைக் கண்டு பெருமைப்படுகிறீர்கள்? யாரைக் கண்டு வருத்தப்படுகிறீர்கள்?

## கலைஞர் – 75

**வி**யக்கத்தக்க நினைவாற்றல், நல்ல நிர்வாகத் திறன், உடனுக்குடன் புகார்களுக்குத் தக்க உதாரணத்தோடு பதில் கூறி விளக்கும் அவரின் ஆற்றல் அலாதியானது.



ஆரம்பக் காலங்களில் தொழிலாளர்களின்பால் நல்ல ஈடுபாடு காட்டியவர். இப்போது பஞ்சாலைத் தொழிலாளர்கள் படு நெருக்கடியில் உள்ள நிலையில் கொஞ்சம் கவனித்துக் கனிந்தால் எங்கள் நெஞ்சில் நிம்மதி நிறையும்.

– ஏ. சுப்பிரமணியம்
(கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர்)

## கலைஞர் – 75

*விரைந்து தொழில் கேட்கும் ஞாலம், நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்*

–'கருத்துக்களை ஒழுங்காகக் கோத்து இனிமையாகச் சொல்ல வல்லவரைப் பெற்றால், உலகம் விரைந்து அவருடைய ஏவலைக் கேட்டு நடக்கும்' என்பது இந்தக் குறளின் பொருள்.



இந்தக் குறளைப் போலவே தமது அரசியல் வாழ்க்கையைப் பெற்றவர் கலைஞர். அதனாலேயே ஆட்சியைத் தக்க வைத்துக் கொண்டவர்.

– பண்ருட்டி எஸ். ராமச்சந்திரன்

## கலைஞர் – 75

தமிழக முதல்வர் ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் 1996-97ஆம் ஆண்டுக்கான தமது முதல் வரவு-செலவுத் திட்டத்தில் நலிந்தோரின் வறுமையைப் போக்கும் வகையில் பசிப்பிணி ஒழிப்புத் திட்டத்தை நாட்டிலேயே முதலாவதாக அறிவித்துள்ளார்.



இத்திட்டம் தற்பொழுது தேசிய அளவில் வரவேற்பைப் பெற்றுள்ளது. எதிர்கால இந்தியாவை வளமாக்கும் இத்திட்டத்திற்கு இந்த அரசு முன்னோடியாக இருப்பது பெருமை அளிக்கக் கூடிய ஒன்றாகும். மேன்மேலும் இப்படிப்பட்ட நலத்திட்டங்களைச் செயல்படுத்தி வரும் இந்த அரசின் தலைமை அமைச்சரான கலைஞர் மு. கருணாநிதி பவள விழா கடந்து மேலும் பல விழாக்களுக்கு வாழ்த்துகிறேன்.

— எம்.எஸ். சுவாமிநாதன்

## கலைஞர் – 75

இவரது இலக்கியப் பங்களிப்புக்கு உரிய அங்கீகாரம் இவரது இயக்கம் சார்ந்த நடவடிக்கைகளால் கிடைக்கப் பெறாமல் போயின. அவர் அது பற்றிக் கவலைப்படவில்லை. எனினும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு இவர் இன்னமும் செய்ய வேண்டும் என்ற நம்பிக்கையான எதிர்பார்ப்பைத் தூண்டிவிடும் இவரது ஆற்றலே நிகழ்கால சரித்திரமாகும்.



—அகிலன் கண்ணன்

**கலைஞர் :** பேராசிரியர் அன்பழகனைக் கண்டு பெருமைப்படுகிறேன். நாவலர் நெடுஞ்செழியனைக் கண்டு வருத்தப்படுகிறேன். ஏனெனில் நாவலர் இலக்கியம் படித்தவர். சங்க இலக்கியங்களையெல்லாம் ஆராய்ந்தவர். நல்ல பேச்சாளர். அண்ணாவே அவரைப் பார்த்து, 'தம்பி வா! தலைமை ஏற்க வா! ஆணை கேட்டு நடக்கக் காத்திருக்கிறோம் வா!' என்று அழைத்தார். அப்படிப்பட்ட நாவலர் இந்த நிலைமைக்குப் போய் விட்டாரே என்கிற வருத்தம் எனக்கு.

**கல்கி :** பேராசிரியரைக் கண்டு நீங்கள் பெருமைப்படுவதற்கான விஷயம் என்ன?

**கலைஞர் :** அண்ணா சென்னைக்கு வந்தால் பெரும்பாலும் பேராசிரியர் வீட்டில்தான் தங்குவார். நான், நாவலர், சம்பத் எல்லோரும் அங்குதான் அண்ணாவிடமிருந்து பல விஷயங்களைக் கற்றுக் கொண்டோம். கட்சிக்கு எத்தனையோ சோதனைகள் வந்தபோதும் கூட கட்சி, கொள்கை என்பதில் சிறிதளவும் மாறுதல் இல்லாமல் இருப்பவர். எம்.ஜி.ஆர். காலத்தில் அவரை அழைத்தார்கள். அவர் விரும்பியிருந்தால் அவர் அங்கு சென்று பதவி வகித்திருக்கலாம். ஆனாலும் இம்மியும் மாறாமல் இருந்தார். என்னோடு கூட அவருக்குச் சில அபிப்பிராய பேதங்கள் இருந்தாலும் அவர் எனக்காக அல்லாமல் கட்சிக்காக என்னோடு இருக்கிறார். அதனால் தான் அவரை நினைத்துப் பெருமைப்படுகிறேன்.

**கல்கி :** எப்போதாவது உங்கள் குடும்பத்தாரோடு ஷாப்பிங் போயிருக்கிறீர்களா?

**கலைஞர் :** இப்படியொரு விஷயம் நடக்கவேயில்லை! (பலமாகச் சிரிக்கிறார்!)

**கல்கி :** இப்போது சாத்தியமில்லைதான். ஆனாலும் உங்களுக்குக் கல்யாணமான புதிதில் கூடவா அப்படிப் போனதில்லை?

**கலைஞர் :** அப்போதும் நான் போனது கிடையாது.

**கல்கி :** உங்கள் குடும்பத்தாருக்குப் பிடித்தமான உடைகளை நீங்களாகவே கடைக்குப் போய் வாங்கிக் கொடுத்திருக்கிறீர்களா?

**கலைஞர் :** டெல்லி போன்ற வெளியூர்களுக்குச் செல்லும் போதும் வெளிநாடுகளுக்குச் செல்கிற போதும், குடும்பத்தாருக்குப் பிடித்தமான உடைகள் பற்றி அவர்களிடமே கேட்டறிந்து, அதுவும் நான் போய் வாங்குவதில்லை; வேறு யாரையாவது போய் வாங்கி வரச் செய்து கொடுப்பதுண்டு.

**கல்கி :** உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் வீட்டுப் பாடம் சொல்லிக் கொடுத்ததுண்டா?

**கலைஞர் :** முரசொலி மாறன் குழந்தையாக இருந்தபோது சொல்லிக் கொடுத்திருக்கிறேன். இதில் வேடிக்கை என்னவென்றால், என்னை எட்டாவதில் கொண்டு போய்ச் சேர்ப்பதாகச் சொல்லி ஐந்தாவதில் கூட சேர்ப்பதற்குச் சிரமம் ஏற்பட்டது. மாறனைத் திருக்குவளையில் மூன்றாவது வரை படிக்க வைத்து, திருவாரூரில் கொண்டு போய் ஐந்தாவதில் சேர்த்து விட்டேன். அந்த அளவுக்கு நான் நன்றாகச் சொல்லிக் கொடுத்தேன் மாறனுக்கு.

**கல்கி :** நீங்கள் ஒரு கெட்டிக்கார ஆசிரியராக இருந்திருக்கிறீர்கள்...

**கலைஞர் :** ஆம்; ஆனால் நான் கெட்டிக்கார மாண

வனாக இல்லை! (சிரிப்பு).

**கல்கி** : ஸ்டாலின், அழகிரி போன்றோருக்கெல்லாம் நீங்கள் சொல்லித் தந்ததில்லையா?

**கலைஞர்** : இல்லை. முரசொலி சொர்ணத்துக்கும் சொல்லிக் கொடுத்திருக்கிறேன்.

**கல்கி** : திரைப்படத் துறையில் உங்கள் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தவர் யார்?

**கலைஞர்** : திரைப்படத்துறையில் நான் நுழைவதற்குக் காரணமாக இருந்தவர் காலஞ்சென்ற தபேலா முத்துக்கிருஷ்ணன். திருச்சி வானொலி நிலையத்தில் வேலை பார்த்தார்; சக்தி நாடக சபாவில் இருந்தவர். அடுத்தவர் கவி கா.மு.ஷெரீப். அவர்தாம் எனது மந்திரிகுமாரி நாடகத்தைப் பார்த்துவிட்டு, அதுபற்றி டி.ஆர். சுந்தரத்திடம் சொல்லி, அதைப் படமாக்கச் செய்தவர். அந்தத் துறையிலுள்ள நீக்குப் போக்குகளை நான் அறிகிற அளவுக்கு வாய்ப்புத் தந்தவர், டைரக்டர் ஏ.எஸ்.ஏ. சாமி.

**கல்கி** : எந்தப் படத்தின் வசனத்தை எழுத நீங்கள் நீண்ட நாட்கள் எடுத்துக் கொண்டீர்கள்?

**கலைஞர்** : எந்தப் படத்துக்குமே நான் நீண்ட நாள் எடுத்துக் கொண்டதில்லை. சில படங்களுக்கு ஒருவார காலத்திலும் எழுதியிருக்கிறேன். இடையில் வேறு வேலைகள் இருக்கிறபோது, ஒரு மாத காலம் எடுத்துக் கொண்டும் எழுதியிருக்கிறேன். முதலில் டைரக்டர்களோடு உட்கார்ந்து பேசி, திரைக்கதையை முடிவு செய்து கொண்டு விடுவதால், வசனத்தை மளமளவென்று எழுதி விடுவேன்.

**கல்கி** : 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு' என்பதால் இந்தக் கேள்வி... அரசியல்வாதி ஜெயலலிதாவிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம் என்ன?

## கலைஞர் – 75



எழுபதுகளில் எழுந்த தொழிலாளர் பிரச்னையில் துணிச்சலோடு சங்கத்தின் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள வைத்தவர்; போனஸ் பிரச்னையை உடனுக்குடன் தீர்க்கவில்லையென்றால் 'போலீஸ் பந்தோபஸ்து தரமாட்டேன்' என முதலாளிகளுக்கு அழுத்தமாகச் சொல்லியவர்... 'நிர்வாகம் நடத்த முடியவில்லையென்றால் சாவியைக் கொண்டு வந்து வையுங்கள், நாங்கள் நடத்திக் கொள்கிறோம்' எனத் துணிச்சலாகச் சொல்லியவர்... இப்போதும் கூட விவசாயத்திற்கு இலவச மின்சாரம் ரத்து செய்யச் சொல்லி மத்திய அரசு நிர்ப்பந்திக்கும் நிலையிலும் 'முடியாது' என மறுக்கிறாரே... தான் நஷ்டமடைந்தாலும் அதை நடைமுறைப்படுத்தியே தீருவேன் என்கிறாரே... அதுதான் அன்றும் இன்றும் இவருக்குள்ள தனி துணிச்சல்...!

**– செங்காளியப்பன் (தொழிற்சங்கவாதி)**

இந்தக் கேள்விக்குக் கலைஞர் சொன்ன பதிலால் அந்த அறையே வெடிச் சிரிப்பில் அதிர்கிறது. எந்தவிதமான உணர்ச்சியையும் சுலபத்தில் வெளிக் காட்டிவிடாத கலைஞரின் உதவியாளர் சண்முகநாதன் கூட தம்மை மறந்து சிரித்து விட்டார்!

கலைஞர் சொன்ன அந்த பதில்தான் என்ன?

அது அடுத்த வாரம்!

வண்ணப்படம்: **ரவிசங்கரன்**

அட்டை வண்ணப்படம்: **யோகா**

## கலைஞர் – 75



நெருப்பில் நின்றும் சிரிக்கத் தெரிந்தவர். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்னும் வள்ளுவர் வாக்கைப் பின்பற்றிக் கொண்டிருப்பவர். உதாரணமாக ஒன்று: நெருக்கடி நிலை பிரகடனப்படுத்தப்பட்டபோது முரசொலியில் அவர் எழுத்துக்கள் எல்லாவற்றையும் தடை செய்தனர். அப்போது அவர், 'விளக்கெண்ணெய் உடம்புக்கு நல்லது! டாக்டர் வேதாந்தம் அறிவிப்பு' என்று முரசொலியில் தலைப்புச் செய்தியாகப் போட்டார்.

**– பெரியார்தாசன்**

எல்லாம் வல்ல விநாயகப் பெருமான் திருவருளால், தேசப் பணியும் தெய்வப் பணியும் செய்வதற்காகப் பல்லாண்டு காலம் வாழ, எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.



**– இராம. கோபாலன் (இந்து முன்னணி)**



# குஷி 'மூடி'ல் குமரி & கோ!

● புதிய தமிழகம் கிருஷ்ண சாமியின் மீது கலைஞர் மிகவும் கோபமாக இருக்கிறாராம். ஒரு பத்திரிகையில் 'ஜெ.வுக்கும் கலைஞருக்கும் என்ன வித்தியாசம்?' என்ற கேள்விக்கு 'ஒரே வித்தியாசம் தான்; அவர் சேலை கட்டியிருக்கிறார்; இவர் வேட்டி அணிந்திருக்கிறார். மற்ற படி இருவருக்கும் வித்தியாசம் கிடையாது' என்று கிருஷ்ணசாமி பதில் சொன்னதுதான் கோபத்துக்குக் காரணம். இதன் காரணமாக, பவள விழா பொதுக் கூட்டத்தில் பேசும் அழைப்பும் கட் ஆகி விட்டது. ஆனால் கிருஷ்ணசாமி இதைப் பற்றியெல்லாம் கவலைப்படுவது போல் தெரியவில்லை. "இதுவரை முஸ்லிம்களின் வோட்டு வங்கியை அபகரித்து பயன் பெற்ற கட்சிகள், இப்போது அந்த சமுதாயத்தில் ஒரு சிலர் செய்த தவறுக்காக, மொத்தமாக வெறுத்து ஒதுக்குகின்றன. இது எந்த விதத்தில் நியாயம்? அதனால் தான் நாங்கள் தமிழக முஸ்லிம் முன்னேற்றக் கழகத்தோடு இணைந்து செயல்பட முடிவு செய்திருக்கிறோம்" என்கிறார் கிருஷ்ணசாமி.

● குமரி அனந்தன் வட்டாரம் மகிழ்ச்சியாக இருக்கிறது. காரணம், சமீபத்தில் தில்லியில் நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்குச் சிறப்பு அழைப்பாளராக சோனியாவால் அழைக்கப்பட்டதுதான்! அடுத்த தமிழக காங்கிரஸ் தலைவர் பதவிக்கு குமரியார், திண்டிவனம் ராமமூர்த்தி மற்றும் பிரபு ஆகியோர் பெயர் அடிபடுகிறதாம். இதில் குமரியாருக்குப் பிரகாசமான வாய்ப்பு இருக்கிறதாம். ஆனால் தங்கபாலு வட்டாரத்தில் இந்தச் செய்திகளை மறுக்கிறார்கள்.

"காங்கிரஸிலிருந்து மூப்பனார் தனியாகப் பிரிந்து த.மா.கா அமைத்தபோது கடைசி நிமிடத்தில் அவரது காலை வாரி விட்டவர் குமரி. கூடவே இருந்து கடைசியில் ராவுடனே ஒன்றி விட்டவர். இதன் காரணமாகத் த.மா.கா வட்டாரம் குமரியார் மீது கோபமாக இருந்தது. அதனால் காங்கிரஸ் – த.மா.கா இணைந்து செயல்

---



## கலைஞர் - 75

கலைஞர் அவர்களின் பொதுவாழ்வில் அரசியலில்லாத பல கூட்டங்களில் கலந்து கொண்ட அனுபவம் எனக்கு உண்டு.

ஆனந்தவிகடன் வைர விழாவிலிருந்து துவங்கி, பல இலக்கிய விழாக்களில் கலைஞருடன் ஒரே மேடையில் தோன்றும்போது முதன் முதல் நான் தெரிந்து கொண்டது: எல்லோரும் 'அவர் பேசுவதைக் கேட்கத்தான் வந்திருக்கிறார்கள்' என்பதே. அதனால் நம் முறை வரும்போது வளவளவென்று பேசிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை என்று அந்தக் கூட்டங்களில் கலைஞர் கவனிக்க வேண்டிய விஷயங்களை எழுதி வைத்துப் படித்து விடுவேன்.

பொதுவாகவே அந்தக் கூட்டங்களில் ஒருவிதமான பரபரப்பும் பொறுமையின்மையும் நிலவும்.

கலைஞர் பேச ஆரம்பித்ததும் அது அடங்கி விடும்.

எத்தனை பேசினாலும் இரவு எத்தனை மணி நேரமானாலும் இறுதி வரை காத்திருந்து விட்டு, அவர் பேச்சு முடிந்த உடனே கலைவார்கள். இதனாலேயே கலைஞரின் பேச்சை விழா ஏற்பாடர்கள் கட்டக் கடைசியில் வைப்

படும் இந்தக் கட்டத்தில் குமரியாருக்கு நோ சான்ஸ்" என்கிறார்கள் அவர்கள்.

● கலைஞரின் பவள விழா பொதுக் கூட்டத்திற்கு சந்திரபாபு நாயுடு அழைக்கப்படாததன் காரணம் என்ன? சேலம் தி.மு.க மாநாடு மட்டுமல்ல; வேறு பல நிகழ்ச்சிகளில் பேசும்போதுகூட, நாயுடு கலைஞரைத் தனது குரு என்று பேசி, பெருமைப் பட்டுக் கொண்டுள்ளார். "கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டு பவள விழாக் கொண்டாட்டம் நடக்க வேண்டும். பா.ஜ.க.வுக்கு ஆதரவு கொடுக்கிறார் என்ற ஒரே காரணத்திற்காக நாயுடுவை ஒதுக்கக் கூடாது" என்றார் மூத்த கழகப் பிரமுகர் ஒருவர். ஆனால் நாயுடுவைத் தொடர்பு கொள்ள முயற்சித்ததாகவும் அவர் மாட்டிக் கொள்ளாமல் நழுவி விட்டதாகவும் ஒரு தகவல் சொல்கிறது. குறைந்த பட்சம் பிறந்த நாள் அன்று தொலைபேசியிலாவது நாயுடு கலைஞரை வாழ்த்துவாரா என்பதுதான் கண்மணிகளின் எதிர்பார்ப்பு.

● சன் ப்ளஸ் அல்லது சன் கோல்டு என்ற இரண்டாம் சேனலைத் துவங்க இருந்த சன் தொலைக்காட்சியின் ஆசைக்கு 'தடா' போடப்பட்டிருக்கிறதாம். மத்திய தகவல் துறை இதற்கு அனுமதிக்கவே கூடாது என்று சுஷ்மாவுக்கு, ஜெ அன்புக் கட்டளை போட்டிருக்கிறாராம். எனவே 'சன்'னின் விண்ணப்பம் கோப்புகளில் தூங்கிக் கொண்டிருக்கிறது.

— தில்லப்பா



பார்கள். இந்தக் கூட்டங்களில் அவருடன் நேராகப் பேச எனக்கு வாய்ப்புக் கிடைத்ததில்லை. அதிமுக அரசோச்சும்போது ஒரு முறை முரசொலி அலுவலகத்தில் கொஞ்சம் நிதானமாக அவரைச் சந்தித்துப் பல விஷயங்களைப் பேச முடிந்தது.

அப்போது திமுக அரசு திரும்ப வரும் என்கிற நம்பிக்கையின் ஆரம்பங்கள் துளிர்க்கவில்லை. ஒரு சரித்திர ப்ரசித்தி பெற்ற திருமணத்திற்கு நான் நண்பர் ராம்குமார் அவர்களின் அழைப்பின் பேரில் போயிருந்ததைச் சொன்னேன். அந்தத் திருமணத்தின் ஆடம்பரமே மீண்டும் அவர் பதவிக்கு வர வழி வகுக்கும் என்று எனக்குத் தெரிந்தது. அதைச் சொன்னபோது, எதும் பரபரப்பில்லாமல் கேட்டுக் கொண்டிருந்தார். "பதவிக்கு வரதும் அது போறதும் எனக்கு பழக்கப்பட்ட விஷயங்க" என்றார்.

பவள விழாக் காணும் கலைஞரின் சேவை தமிழ்நாட்டுக்கு ஆளுங்கட்சியாகவோ எதிர்க் கட்சியாகவோ எப்போதும் தேவைப்பட்டாலும் இடையிடையே 'குறளோவியமும்', 'சங்கத் தமிழும்' 'பொன்னர் சங்கரும்' 'தென்பாண்டிச் சிங்க'மும் எழுதும் கலைஞரின் பங்குதான் அதிகமாக வேண்டும். அதற்காக, அவருக்கு நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் நல்குமாறு ஸ்ரீரங்கநாதனைப் பிரார்த்திக்கிறேன்.

— சுஜாதா

ஜீன்ஸுக்குப் பிறகு ஷங்கர்,
ஜீன்ஸுக்குப் பிறகு பிரசாந்த்
என்று நிறைய படித்தாகி விட்டது.
ஒரு மாறுதலுக்கு ஜீன்ஸுக்குப்
பிறகு ஐஸ்வர்யாராயைச்
சந்திக்கலாமே என்று மும்பைக்குச்
சென்றோம். ஆனால் ஜீன்ஸ் பற்றிப்
பேசியது ரொம்பக் குறைவு. உலக
அழகி என்ற பந்தா இல்லாமல் மிக
அடக்கமாகப் பேசினார்
ஐஸ்வர்யா ராய்.
இனி பேட்டி :

"வெற்றிகரமான மாடலிங் அழகி. பிரபல இயக்குநர்கள் விரும்பித் தேர்ந்தெடுக்கும் நடிகை, எல்லாவற்றிற்கும் மேலாக உலக அழகிப் புகழ்... நீங்கள் நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்ப்பீர்களா எப்போதாவது?"

"கட்டாயமாக! எனக்கு எல்லாமே வெற்றிகரமாக அமைவதற்குக் கடவுள் அருள்தான் காரணம். பிறகு, விமர்சகர்கள், பத்திரிகையாளர்கள், ரசிகர்களின் ஆதரவு. விளம்பர மாடல்களும் பிரபல சினிமா நட்சத்திரங்களாக ஆகி, வெற்றிகரமாக வலம்வர முடியும் என்பது தெய்வாதீனமாக என்னால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இனி வேறு பல மாடல்களும் தைரிய



மாக சினிமாவுக்கு வருவார்கள்."

"மிஸ் வேர்ல்ட் பட்டம் உங்களுக்கு எந்தெந்த வகையில் உதவி புரிந்தது என்று கூற முடியுமா?"

"என் வாழ்வில் அந்த டைட்டில் மூலம் பல படிகளை ஒரே 'ஜம்ப்'பில் தாண்ட முடிந்தது. அதுவும் வேகமாக, வெற்றிகரமாக! எங்கு, எப்படி நடந்து கொள்ள வேண்டும், யாரிடம் எப்படிப் பேசுவது, பழகுவது – இவையெல்லாமே அந்தப் பட்டம் பெறுவதற்கான பயிற்சியின் போது நான் கற்றுக் கொண்டவைதாம்."

"உங்கள் அழகு, கவர்ச்சிக்காகத்தானே படங்கள் கிடைக்கின்றன? ஐஸ்வர்யா நல்ல நடிகை என்பதற்காக வாய்ப்புத் தருவதாக நினைக்கிறீர்களா?"

"அது எனக்கு நன்றாகவே தெரியும். என் பெயர், கவர்ச்சி, புகழ் இதை வைத்துத்தான் பிஸினஸ் பண்ணுகிறார்கள். ஆனால் இது எனக்கு மட்டும் நடப்பதில்லையே? சினிமாவில் இது சாதாரணம். உலக அழகிப் புகழால் ஒரே சமயத்தில் மூன்று படங்களில் ஒப்பந்தமானவள் நான்! நான் நடித்த படம் ஒன்று கூட வெளிவராத நிலையில் அடுத்தடுத்து, படங்கள் கிடைத்ததும் இதனால் தான்!"

"இரண்டு தமிழ்ப் படங்களில் நடித்து விட்டீர்கள். மொழி தெரியாமல் நடித்த அனுபவம் பற்றி...?"

"இப்போதுள்ள நடிகைகளில் யாருக்குத் தான் எந்த மொழி தெரிந்திருக்கிறது? டப்பிங் இருக்கும்போது மொழி ஒரு பிரச்னையே அல்ல!"

> **கலைஞர் - 75**
>
> சொன்னதைச் செய்வோம்; செய்வதைச் சொல்வோம் என்பார். ஆனால் செய்யாததைச் சொல்வதும், சொல்லாததைச் செய்வதும் அவரது வாடிக்கையாக இருந்தாலும் பேச்சால் வசியம் செய்வதில் வல்லவர். மனோகரா, மந்திரிகுமாரி, பராசக்தி வசனங்களை மறக்க முடியுமா?
>
> — தாமரைக்கனி



"மணிரத்னம் இயக்கத்தில் நடித்த அனுபவம் பற்றிக் கூறுங்கள்."

"இருவர் படத்தில்தான் நான் சினிமாவின் அரிச்சுவடியைக் கற்றுக் கொண்டேன். அவர் என்னைப் புதுமுகமாக நடத்தவேயில்லை. ஆரம்பத்திலேயே சொல்லி விட்டார் : 'நீ ஏற்கெனவே புகழ் மிக்கவள். எனவே, நான் உன்னை அறிமுகப்படுத்துகிறேன் என்று நினைக்கவில்லை. நீயும் அப்படி நினைக்காதே!' என்று. நான் 'இருவரி'ல் நடிக்க ஆரம்பித்த பிறகுதான் பாலிவுட் கதாநாயகிகள் தைரியமாகத் தமிழுக்கு வர ஆரம்பித்தார்கள் என்று நினைக்கிறேன்."

"மாதுரி தீட்சித்துக்கு நீங்கள்தான் போட்டி என்று பாலிவுட்டில் பேசுகிறார்களே?"

"நான் யாரையும் போட்டியாக நினைக்கவில்லை. இந்த உலகில் யாருக்கு எது கிடைக்க வேண்டும் என்று இருக்கிறதோ அது கட்டாயம் கிடைக்

# கீதை படிக்கும் ஐஸ்வர்யாராய்!

கும். எது கிடைக்காதோ, அது என்ன முயன்றாலும் கிடைக்காது! கிதை படித்து நான் பெற்ற தெளிவு இது! எனவே, என் வாய்ப்புக்களை யாரும் தட்டிப் பறிக்க முடியாது! வேறு யாருடைய புகழையும் நான் மறைக்க இயலாது."

"இங்கே மும்பையில் நடக்கும் பார்ட்டிகளுக்கு நீங்கள் போவீர்களா?"

"முக்கியமானவர்கள் கூப்பிட்டால், அவசியமானால் போவேன். ஏன் கேட்கிறீர்கள்?"

"இல்லை.... இங்கே பார்ட்டிகளின் போதுதான் சினிமா வாய்ப்புகள் தர - பெறப்படுகின்றன என்று கேள்விப்பட்டோம்..."

"ஸாரி. எனக்கு அது போல வாய்ப்புத் தேட வேண்டிய அவசியம் எப்போதும் கிடையாது."

"இப்போது புதிதாக ஏதாவது பொருளுக்கு மாடலிங் செய்கிறீர்களா?"

"உண்மையைச் சொல்வதென்றால் கைவசம் ஏதும் இல்லை! வருகிற எல்லா வாய்ப்புகளையும் நான் ஏற்க விரும்பாதது தான் காரணம்."

"இருவரிலும் ஜீன்ஸிலும் நன்றாக டான்ஸ் ஆடியிருக்கிறீர்கள். கற்றுக் கொண்டீர்களா?"

"பாராட்டுக்கு நன்றி. பரதநாட்டியமும் இசையும் என் உயிர். கற்றுக் கொண்டிருக்கிறேன். பிரமாதமாக டான்ஸ் ஆடுவேன் என்று சொல்ல மாட்டேன். ஆனால் அடிப்படை தெரியும்."

"சரி, ஜீன்ஸ் அனுபவங்கள்..."

"ஓ... மறக்க முடியுமா? ஷங்கர் உபயத்தில் உலகம் முழுக்கச் சுற்றி வந்து விட்டேன்! உண்மையைச் சொல்கிறேன். ஷங்கர் இங்கிருக்க வேண்டிய ஆளே இல்லை. அவர் ஹாலிவுட் மூளைக்காரர். எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அவர் கட்டாயம் ஒருநாள் ஆஸ்கார் வாங்குவார்."

"காதல் பற்றிக் கேட்டால் ஒரேயடியாக மறுப்பீர்கள். போகட்டும், உங்கள் வருங்காலக் கணவர் எப்படி இருக்கவேண்டும் என்று விரும்புகிறீர்கள்?"

"உலக அழகியாக, பிரபல நடிகையாக, புகழ்மிக்கவளாக என்னைப் பார்க்கக் கூடாது! நானும் ஒரு சராசரி இந்தியப் பெண் என்கிற உணர்வுடன் என் நிறை குறைகளைச் சமமாக ஏற்கிற பக்குவம் உள்ளவரைக் கணவராக அடைய விரும்புகிறேன். இதுவரை யாரையும் நான் காதலிக்கவில்லை என்பதை நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும். சில காலம் கழித்து எப்படியும் என் திருமணம் நடக்கத்தானே போகிறது! கட்டாயம் உங்களுக்குப் பத்திரிகை அனுப்புவேன். தவறாமல் வாருங்கள்!"

பேட்டி : நீலா

# ஸ்ரீ காஞ்சி மஹா பெரியவாள் 105–வது ஜயந்தி (9.6.98) வெளியீடுகள்

**ரா. கணபதி**யின் காணிக்கைகள்

மா கடலாக விரிந்த மாருதியின் சரிதை, மகிமைகளை ஏராளமான ஆதாரங்களிலிருந்து தொகுத்து மனம் கவர் காவியமாகப் படைக்கும்




## ஜய ஹநுமான்

(முதற் பகுதி)

விலை ரூ. 40.00 (தபாலில் பெறக் கட்டணம் தனி)



பல்துறை வித்தகரான காஞ்சி மாமுனிவர் அபூர்வமான கருத்துக்களை அமிர்தமான வாக்கில் அள்ளிப் பொழிந்த அருமையை விருந்தாக்கும்

## சொல்லின் செல்வர் ஸ்ரீ காஞ்சி முனிவர்

விலை ரூ. 30.00. (தபாலில் பெறக் கட்டணம் தனி)




**முந்தைய வெளியீடுகள்:** காஞ்சி முனிவர் குறித்தவை: மஹா பெரியவாள் விருந்து (ரூ.18.00), காஞ்சி முனிவர் நினைவுக் கதம்பம் (ரூ.25.00), கருணைக் காஞ்சி–கனகதாரை (ரூ.20.00), 'மைத்ரீம் பஜத!' (ரூ.20.00), சங்கரர் என்ற சங்கீதம் (ரூ.22.00)

ஜய ஜய சங்கர (ஆதி சங்கரர் சரிதை) (ரூ.36.00)

ஸ்ரீ ஸத்ய ஸாயி பாபா குறித்தவை: ஸ்வாமி–பகுதி–I (ரூ.70.00), பகுதி–II (ரூ.80.00), லீலா நாடக ஸாயி (ரூ.45.00), தீராத விளையாட்டு ஸாயி (ரூ.20.00), அன்பு அறுபது (ரூ.30.00), அறிவு அறுபது (ரூ.24.00), அற்புதம் அறுபது (ரூ.20.00) **BABA: SATYA SAI-PART-I (Rs.75.00), PART-II (Rs.80.00).**

ஸ்ரீ மாதா (லலிதாம்பிகை சரிதை) (ரூ. 18.00), நவராத்திரி நாயகி (துர்க்காம்பிகை சரிதை) (ரூ.45.00), அம்மா (சாரதா தேவியார் சரிதை) (ரூ.80.00)

**கிடைக்குமிடம்:** ஹிக்கின்பாதம்ஸ், 814, அண்ணா சாலை, சென்னை - 2; கிரி டிரேடிங் ஏஜென்ஸீஸ், 10, சந்நிதித் தெரு, மயிலை, சென்னை - 4; ஸாயி சுதா, 4, அலமேலு மங்காபுரம், மயிலை, சென்னை - 4.

பதிப்பாளர்: திவ்ய வித்யா டிரஸ்ட், 106/1, ஹபிபுல்லா சாலை, சென்னை - 600 017.



**காதல் டைரிக் குறிப்பு :**

**உன்னைப் பார்க்கும்போது மட்டும்**
**என் கண்கள் சுவாசிக்கின்றன.**
**உன் குரல் கேட்கும்போது மட்டும்**
**என் காதுகள் சுவாசிக்கின்றன.**

"நீ ஒரு முட்டாள்டா!" என்றான் சந்துரு.

எந்த பதிலும் சொல்லாமல் தன் சிகரெட்டின் நெருப்பு முனையை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தான் அரவிந்த்.

"எதை எப்படிப் பேசறதுன்னு உனக்குப் புரியமாட்டேங்குது. உன் பேச்சே சமயத்தில உனக்கு வில்லனாகுதுன்னு உணர மாட்டேங்கறே நீ!"

மொட்டை மாடியின் கைப்பிடிச் சுவரில் ஒரு காலை உதைத்துக் கொண்டு நின்ற சந்துரு மெதுவாக நடந்து வந்து அரவிந்தின் அருகில் அமர்ந்தான்.

"ஏங்க! அரவிந்துக்கு காப்பியா, டீயான்னு கேளுங்க" என்று கீழேயிருந்து குரல்கொடுத்தாள் விமலா.

"எனக்கு எதுவும் வேணாம்னு சொல்விடு சந்துரு."

"ஏன் வேணாம்? சும்மாரு, விமலா! ரெண்டு பேருக்கும் டீயே எடுத்துட்டு வந்துடு" என்றான்.

"அப்படி நான் என்னடா சொல்விட்டேன்? எதுக்கு அவ அவ்வளவு சென்சிடிவா பிஹேவ் பண்ணணும்? அயிட்டம்ஸ் எல்லாம் ஆர்டர் செஞ்சதுக்கப்புறம் சட்டுன்னு எந்திரிச்சிப் போய்ட்டா என்ன அர்த்தம்? எனக்கு எவ்வளவு அவமானமா இருக்கும்! ஆர்டர் செஞ்சதையெல்லாம் கேன்சல் செய்யச் சொல்லிட்டு எவ்வளவு தர்மசங்கடமா நெளிய வேண்டியிருந்திச்சி தெரியுமா?"

# நான் உன்னை சுவாசிக்கிறேன்

**22**

"வேலை கிடைச்ச சந்தோஷத்தைப் பகிர்ந்துக்கத்தானே அந்த பார்ட்டி? அப்பப் போய் எதுக்கு தேவையில்லாம குத்தலாப் பேசணும்?

"என் அவஸ்தை எனக்குத்தான் சந்துரு தெரியும். நான் அவளை சின்சியரா லவ் பண்றேன். ஆனா என்னால உண்மையா இருக்க முடியலை. என் மனசுல அவ ஒரு வேலி போட்டு வெச்சிட்டா. அந்த வேலி என்னை வதைக்குது. அதை வெளிப் படையாப் பேசக் கூடாதா?"

"அதைப் பேசினதில தப்பில்லை. உன்னால அவளை வெச்சி குடும்பம் நடத்த முடியுமாங்கிற பயம்தான் அவ தயக்கத்துக்குக் காரணம்னு அவ எதுவும் சொன்னாளா? அது நீயா கற்பனை செஞ்ச ஒரு யூகம். நீயா கற்பிச்சிக்கிட்ட காரணம். அதை அவகிட்டயே சொல்றது அவளைக் காயப்படுத்தும்னு நீ யோசிச்சிருக்க வேண்டாமா?"

"உணர்ச்சிகள் கொந்தளிச்சிட்டிருக்கிறப்ப அதெல்லாம் உக்காந்து யோசிக்க முடியாது சந்துரு. நான் சொன்னது தப்பு. ஆனா அவ மூஞ்சில அடிச்ச மாதிரி எந்திரிச்சிப் போனது மட்டும் சரி. அப்படித்தானே?"

"அதுவும் தப்புதான். அதிகப்படியான ரியாக்ஷன்தான். நீங்க நினைக்கிற மாதிரி இல்லை, என் தயக்கத்துக்குக் காரணம் அது இல்லைன்னு பொறுமையா எடுத்துச் சொல்லிருக்கலாம். அதை விட்டுட்டு பொது இடத்தில ஒரு சீன் கிரியேட் பண்ணியிருக்க வேண்டாம்தான்."

அரவிந்த் சில விநாடிகள் நட்சத்திரங்களைப் பார்த்தான்.

"சந்துரு, எல்லாரும் ஒரே நேரத்தில என்னை நோகடிக்கிறாங்க. நீ சொன்ன வார்த்தைக்கு மதிப்பு கொடுத்து வீட்டுக்குப் போனேன். அப்பா என் முகத்தையே பார்க்கலை. நெருப்புத் துண்டு மாதிரி வார்த்தை வந்து விழுந்துச்சு. நான் பொறுமையா ஒரு வார்த்தை கூட எதிர்த்துப் பேசாம வந்துட்டேன். இளங்கோவுக்கும் யாமினிக்கும் போன் செஞ்சி அவங்களும் கலந்துக்கக் கூடாதுன்னு உத்தரவு போட்டிருக்கார் சந்துரு. மீறி கலந்துக்கிட்டா வீட்டுக்கு வராதீங்கன்னு பிளாக்மெயில் செய்யற மாதிரி பேசியிருக்கார். எதுக்கு

பட்டுக்கோட்டை பிரபாகர்





## கலைஞர் - 75

முதிர்ந்த அனுபவமும் நுட்பமான அறிவாற்றலும் நிர்வாகத் திறமையும் படைத்தவர் கலைஞர். கலைஞரின் பேச்சு, இசை நிகழ்ச்சி போல் கேட்பவரை வசப்படுத்தி விடும். கலைஞர் நடத்தும் கவியரங்கம் கேட்டு, ரசித்து மலைத்தவர்களில் நானும் ஒருவன்.

- லால்குடி ஜெயராமன்

சந்துரு இவ்வளவு கோபம்? நான் என்ன எதிரியா?"

கண் கலங்கின அரவிந்த் தோளை ஆறுதலாகத் தட்டினான் சந்துரு.

"சரி, விடு. தைரியமா இரு. எல்லாம் போகப் போக சரியாப் போயிடும். என்னதான் கோபமா இருந்தாலும் உங்கப்பா நடந்துக்கறது சரியில்லைதான். நான் வேணும்னா அவரைப் பார்த்து சமாதானப் படுத்திப் பார்க்கட்டுமா?"

"வேணாம். அவமானப்படுவே. எனக்காக நீ சமாதானத்துக்குப் போகத் தயாரா இருந்தா பிருந்தாவைப் போய்ப் பார்த்துப் பேசு சந்துரு. உன்னைப் பத்தி, உனக்கும் எனக்கும் உள்ள ஃப்பிரெண்ட்ஷிப் பத்தி நிறைய சொல்லிருக்கேன். அவளும் உன்னோட படங்கள் பார்த்திருக்கா. ஒருநாள் அறிமுகப்படுத்தி வைங்கன்னும் சொல்லிருக்கா. சரியான சந்தர்ப்பம் அமையலை. இதையே சந்தர்ப்பமா வெச்சுக்கோ. போய்ப் பேசு."

"தாராளமாப் பேசறேன். என்ன பேசணும்?"

"அவ மனசுல என்ன இருக்குன்னு எனக்குத் தெளிவா தெரியணும் சந்துரு. நான் ரொம்ப சின்சியரா அவளை விரும்பறதைப் புரிய வை. என்கிட்ட திறமை இருக்கு. ஓகோன்னு வருவேன்னு எடுத்துச் சொல்லு. நேத்து ராத்திரி பூரா நான் தூங்கவே இல்லைன்னு சொல்லு. அவ மேல எனக்குக் கோபம் வந்தாக்கூட நீர்க்குமிழி ஆயுசோட உடனே அந்தக் கோபம் செத்துப் போயிடுதுன்னு சொல்லு. இன்னிக்குப் பூரா அவ போன் செய்வான்னு நான் காத்திருந்தேங்கறதைச் சொல்லு. அவளோட பரிபூரணமான அன்பு எனக்குக் கிடைச்சா அது எனக்கு பலம் சேர்க்கும்னு சொல்லு. உறவுகள் விலகி இருக்கிற இந்தச் சூழ்நிலையில என் மனசு அன்புக்காகவும், ஆறுதலுக்காகவும் ஏங்கித் தவிக்குதுங்கறதை எடுத்துச் சொல்லு."

"சொல்றேன் அரவிந்த். கண்டிப்பா சொல்றேன். கலக்கப்படாதே. நாளைக்கு பிரஸ் துவங்கறே. இந்த நிலைமையில உன் மனசு சந்தோஷமா இருக்கணும். யார் வந்தாலும் சரி, வரலைன்னாலும் சரி, தைரியத்தை விட்டுடாதே! நீ மனசு நொந்துட்டா தொழில்ல ஆர்வம் குறைஞ்சிடும் அரவிந்த்."

"புரியுது."

"சுயமா யார் தயவுமில்லாம முன்னேறிக் காட்டணுங்கறதுதானே உன் லட்சியம்? அது சரியோ, தப்போ இறங்கியாச்சு. வட்டிக்கு பணம் வாங்கி மெஷின் போட்டு, ஆபீஸ் போட்டு, ஸ்டாஃப் எல்லாம் சேர்த்து எவ்வளவு ஏற்பாடுகள் செஞ்சி வெச்சிருக்கே! இப்போ உன் கவனம் எல்லாம் பிசினஸ் பத்தி மட்டும்தான் இருக்கணும். கடன்லேர்ந்து நீ விடுபடற வரைக்கும் வேற சிந்தனை இல்லாம கடுமையா உழைச்சாகணும் அரவிந்த். உன் பர்சனல் பிராப்ளம்ஸ் பிசினஸைப் பாதிச்சிடக் கூடாது."

ஒரு பெருமூச்சை வெளியேற்றிய அரவிந்த், "யு ஆர் ரைட்" என்றான்.

"ஆர்டர்ஸ் எல்லாம் பிடிச்சி வெச்சிருக்கியா? நாளைக்கு முதல்ல மெஷின்ல எந்த ஆர்டர் வொர்க் பண்றே?"

"எனக்கு சென்டிமெண்ட்ஸ்ல நம்பிக்கை இல்லை. ஆனா மேனேஜரும், மெஷின்மேனும் முதல்ல பிள்ளையார் படம் பிரிண்ட் செய்யலாம்னு சொன்னாங்க. அவங்களுக்காக சரின்னு சொல்லிருக்கேன். ஒரு வாரத்துக்கு மெஷினுக்கு வேலை கொடுக்கற அளவுக்கு ஆர்டர்ஸ் வாங்கியிருக்கேன். கேன்வாசிங் போகணும். மகேந்திரனைப் போய்ப் பார்க்கணும். அவன் மூலமா ஒரு லம்ப் ஆர்டர் பிடிச்சிட்டா மாசக் கணக்கில மிஷினுக்கு வேலை தர முடியும். லாபமும் நிறைய பார்க்கலாம்."

"மகேந்திரனா? யாரது?"

"சொல்லிருக்கேனே. மினிஸ்டர்கிட்ட பி.ஏ.வா இருந்தவன். இப்ப பி.ஆர்.ஓ.வா இருக்கான். என் கிளாஸ்மேட். அவனுக்கு கவர்ன்மெண்ட்ல எல்லா டிபார்ட்மெண்ட்லயும் பழக்கம் இருக்கு. எனக்கு நிறைய ஹெல்ப் பண்றேன்னு சொல்லிருக்கான்."

"வெரிகுட்."

"நீ வேணும்னா பாரு. இந்த ஒரு மிஷின் பத்தாது. அடுத்த வருஷமே இன்னொரு புது மிஷின் போட்டுடுவேன்."

"எனக்கு நம்பிக்கை இருக்கு அரவிந்த்" என்றான் சந்துரு.

**வ**ந்ததும் பிரமுகர்கள் கூடியிருக்க, பூஜை போடப்பட்டு எல்லோருக்கும் குளிர் பானங்கள் விநியோகிக்கப்பட்டது. இடத்தின் ஓனரையே குத்து விளக்கேற்றச் சொல்லி சீனியர் மெஷின்மேனை விட்டு இயந்திரத்தை முடுக்கச் சொல்லி மஞ்சள் நிறத்தில் பிள்ளையார் படம் அச்சடிக்கப்பட்டபோது எல்லாரும் கைதட்டினார்கள்.

அரவிந்தின் கையை அழுத்தமாகப் பற்றிக் குலுக்கினான் சந்துரு.

"நீ அமோகமா வருவேடா."

"தேங்க்ஸ்"

சில குடும்ப நண்பர்கள் மட்டும், "என்ன அரவிந்த், உங்க ஃபேமிலி மெம்பர்ஸ் யாரையும் காணோம்?" என்றார்கள்.

"அதிகாலையில ஹோமம் வளர்த்து ஒரு பூஜை நடந்திச்சி. அதில கலந்துக்கிட்டாங்க. இதே முகூர்த்தத்தில முக்கியமான ஒரு சொந்தக்காரங்க வீட்டுக் கல்யாணம் அமைஞ்சிட்டதால எல்லாரும் அதுக்குப் போயிருக்காங்க" என்று ஒரே பொய்யை மறுபடி மறுபடி சொல்ல வேண்டியிருந்தது.

லால்சந்த் தன் உதவியாளர் மூலமாக மலர்க்கொத்து அனுப்பி வைத்திருந்தார்.

அரவிந்தின் கண்கள் வாசலில் அவ்வப்போது தேடிச் சலித்துக் கொண்டிருப்பதை கவனித்த சந்துரு, "யாரை எதிர்பார்க்கறே?" என்றான் காதருகில்.

"உனக்கே தெரியும்."

"பிருந்தா வர மாட்டாங்க."

"ஏன்?"

"தந்தி வந்திருக்கு."

மேஜை மீது வாங்கி வைக்கப்பட்ட தந்திகளில் ஒன்றை எடுத்து நீட்டினான்.

'விழா வெற்றிகரமாக நிகழ என் வாழ்த்துக்கள் – பிருந்தா' என்கிற செய்தியைப் பார்த்ததும் உதடுகளில் புன்னகை பிறந்தது.

"அப்படின்னா என் மேல கோபம் இல்லைன்னுதானே அர்த்தம்?"

"ஆமாம். உன்னோட நட்பே வேண்டாம்னு வெறுத்துடலை. நேர்ல வர்றதுக்கு தன்மானம் இடம்கொடுக்கலை. அதே சமயம் நினைவா வாழ்த்து அனுப்ப வேண்டிய நாகரிகத்தையும் தவற விடலை. பிருந்தா ஒரு கலவையான பொண்ணுன்னு நினைக்கிறேன்" என்றான் சந்துரு.

அதற்குள் இரண்டு பிரமுகர்கள் வந்து விட அரவிந்த், "வாங்க சார்" என்று சந்தனக் கிண்ணம் எடுத்து நீட்டி வரவேற்றான்.

தந்தி பார்த்த பிறகு அவன் முகத்தில் ஓர் உற்சாகம் சேர்ந்திருப்பதை கவனித்தான் சந்துரு.

அடுத்த ஒரு மணி நேரத்தில் வந்தவர்கள் எல்லாம் சென்று விட, பணியாளர்கள் காலி குளிர்பானங்களை கிரேடில் அடுக்கத் துவங்கினார்கள்.

தனது அலுவலக மேஜையில் அமர்ந்து சந்துருவுக்கு புதிதாக அடிக்கப்பட்ட பில் புத்தகங்கள், ரசீது புத்தகங்களை எல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டினான் அரவிந்த்.

டெலிபோன் ஒலிக்க, எழுந்தான்.

"ஹலோ அரவிந்த் ஆஃப்செட்" என்றான்.

"அரவிந்த், நான் மகேந்திரன் பேசறேன்."

"என்னப்பா இது, நேர்ல வருவேன்னு எதிர்பார்த்துட்டிருந்தா, இப்படி போன்ல பேசறே?"

"ஸாரிம்மா. நான் இப்ப கோவை யிலேர்ந்து பேசறேன். அஃபிஷியலா வந்திருக்கேன். திறப்பு விழாவுக்கு நேர்ல வர முடியலை. ஸாரி, என்னோட மனப்பூர்வமான வாழ்த்துக்கள் அரவிந்த்."

"வெளியூர்லேர்ந்து கூட ஞாபகமாப் பேசறியே, ரொம்ப தேங்க்ஸ். ரொம்ப சந்தோஷம். எப்போ மெட்ராஸ் வர்றே?"

"இன்னும் ரெண்டு நாளாகும்."

## கலைஞர் - 75



**த**மிழகம் கிரிக்கெட்டிலும் சரி, டென்னிஸிலும் சரி சாதனை புரிகின்ற போது, பதவியில் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, பாராட்டும் முதல் குரல் அவருடையது. வாழ்க அவர்தம் பணி!

– எம். வெங்கட்ரமணா (இந்திய கிரிக்கெட் வீரர்)

## கலைஞர் -75



**க**லைஞர் ஜூன் 3-ஆம் தேதி 75-ல் அடியெடுத்து வைக்கிறார் என்றால், நான் ஜூன் 18-ல் அடியெடுத்து வைக்கிறேன். 15 நாட்கள்தான் எங்களுக்குள் வித்தியாசம் என்றாலும் நான் சுவாமிமலை; அவரோ இமயமலை. குறளோவியம், சங்கத் தமிழ், பொன்னர் – சங்கர், பாயும் புலி பண்டாரக வன்னியன் போன்ற ஒப்பிட முடியாத அவரது எழுத்தோவியங்களுக்கு நானும் ஓவியங்கள் வரைந்து பக்கவாத்தியம் வாசித்திருக்கிறேன்! நான் அரசியல் கார்ட்டூன்கள் வரைவதை நிறுத்திய பிறகுதான் அவர் அரசியலின் உச்சத்துக்கு வந்தார் என்பதால், எனது கார்ட்டூன்களுக்குள் அவர் சிக்கியதில்லை.

— கோபுலு

"நான் உன்னைப் பார்க்கணுமே மகேந்திரா. நிறைய பேசணும்."

"ஷ்யூர். வர்ற ஸண்டே என் வீட்டுக்கு வர்றியா?"

"வர்றேன், எப்போ?"

"மார்னிங் நைன்! ஒரு போன் அடிச்சுட்டு வந்துடு."

"கண்டிப்பா வர்றேன். உன்னோட உதவி நிறைய வேணும்ப்பா."

"ஊர், பேர் தெரியாதவனுக்கெல்லாம் பண்ணிட்டிருக்கேன். உனக்கு பண்றதுக்கு என்ன? ஜமாய்ச்சிடலாம், வா."

உற்சாகமாக போனை வைத்தான் அரவிந்த்.

**வா**சலில் கார் சப்தம் கேட்டு திரும்பியவன், யாமினி இறங்கி உள்ளே வரு வதைப் பார்த்து ஆச்சரியப்பட்டான்.

"வாக்கா" என்று அருகில் சென்று அழைத்தான்.

"என்ன அரவிந்த் அப்படிப் பார்க்கறே? வர மாட்டேன்னு சொல்லிட்டு, வந்துட்டாளேன்னு ஆச்சரியமா இருக்கா? யோசிச்சுப் பார்த்தேன். அப்பாவோட உத்தரவில நியாய மில்லைன்னு பட்டுது. உள்ளூர்ல இருந்துக்கிட்டு வராம இருக்கிறது தப்புன்னு பட்டுச்சி. வந்துட்டேன்."

"ரொம்ப சந்தோஷம். கூல்டிரிங் சாப்பிடறியா?"

"வேணாம்" என்றவள் சந்துருவைப் பார்த்து புன்னகைத்து விட்டு, "இதான் மெஷினா?" என்று மெஷினை நோக்கி நடந்தாள்.

அரவிந்த அவளுக்கு அந்த இயந்திரம் எப்படி இயங்குகிறது என்பதை விளக்கி, ஓட்டிக் காட்டினான். அவள் சந்தேகங் களுக்கு விளக்கம் சொன்னான். அலுவலகப் பகுதியைச் சுற்றிக் காட்டினான்.

"நான் பணமாக் கொடுத்தா நீ வாங்க மாட்டே. இது இந்த மேஜையில இருக்கட்டும்" என்று ஒரு அழகான பல வகை வசதிகள் கொண்ட பென் ஸ்டாண்ட் ஒன்றை டப்பாவிலிருந்து பிரித்து எடுத்து மேஜை மேல் வைத்தாள்.

"சரியோ, தப்போ ஒரு தொழில்ல இறங்கிட்டே. முழு மூச்சா உழைச்சி நல்லா முன்னுக்கு வரணும் அரவிந்த்" என்று அவன் கரம் பற்றிக் குலுக்கி, "நான் வரட்டுமா?" என்று புறப்பட்டாள்.

கார் வரைக்கும் சென்று வழியனுப்பி விட்டு வந்தான் அரவிந்த்.

"அரவிந்த், உங்கக்காவைப் பத்தி எப்பவும் நீ நல்லவிதமா சொன்னதே இல்லை. அவங்க பாரு, உன் மேல எவ்வளவு பாசம் இருந்தா அப்பா சொன்ன வார்த்தையையும் மீறி இப்படி வந்து வாழ்த்திட்டுப் போவாங்க!"

"உனக்கு அவளைப் பத்தி தெரிஞ்சது அவ்வளவுதான். நான் பிரஸ் ஆரம்பிக்கிறேன்னா அது என்ன மாதிரி பிரஸ், எத்தனை மிஷின், எவ்வளவு இன்வெஸ்ட்மெண்ட் இதெல்லாம் தெரிஞ்சுக்கலைன்னா அவளுக்கு மண்டை வெடிச்சிடும். துப்பறிஞ்சிட்டுப் போறா சந்துரு" என்றான் அரவிந்த்.

"ஏண்டா உனக்கு பாசிடிவாப் பார்க்கத் தெரியாதா?" என்ற சந்துருவின் கேள்விக்கு புன்னகைத்துக் கொண்டான் அரவிந்த்.

(தொடரும்)

டாலர்

எப்படியாவது சரிவை தடுத்து நிறுத்திடலாம்னு பார்த்தா....

ரிசர்வ் பேங்க்




1998 ஜூன் 7
வெகுதான்ய வைகாசி 24
மலர் : 56
இதழ் : 45

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## போக்ரானின் எதிரொலி பாகிஸ்தானில்!...

**போ**க்ரான் அணுகுண்டு அமர்க்களத்தின் தூசு அடங்குவதற்குள் பாகிஸ்தான் தனது அணுகுண்டுப் பரிசோதனையை வெற்றிகரமாக நடத்திக் காட்டியிருக்கிறது. உலகமே கவலையுடன் கண்டிக்கிற இந்த இரு நிகழ்வுகளும் இந்த நூற்றாண்டின் தலைகுனிவுகள் என்றே சொல்ல வேண்டும்.

அணுகுண்டு பரிசோதனையை நிகழ்த்தியதோடு நில்லாமல் பி.ஜே.பி. அமைச்சர்கள் வார்த்தை அணுகுண்டுகளையும் சரமாரியாகப் பொழிந்து தள்ளி பாகிஸ்தானைச் சீண்டியிருக்கிறார்கள்.

டீ.வி. பேட்டியில் சிக்கலான கேள்விகள் கேட்கப்பட்டால் சமாளிக்கத் தெரியாத கத்துக் குட்டி அமைச்சர் அல்ல ஜார்ஜ் பெர்னான்டஸ். 'பாதுகாப்பு/ராணுவ ரகசியங்கள் குறித்து விரிவாகப் பேசுவதற்கில்லை' என்று ஒரே வரியில் அவர் பதில் கூறி முடித்திருக்கலாம்.

அப்படிச் செய்யாமல் விவகாரமான பதில்களை அகந்தை தொனிக்கக் கூறியிருக்கிறார் :

- "இனி அணு ஆயுதப் பரிசோதனைகள் செய்ய மாட்டோம் என்பதுதான் வாக்குறுதியே தவிர, இதுநாள் வரை கச்சிதப்படுத்திய அணு ஆயுதத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்த மாட்டோம் என்று அர்த்தமாகி விடாது."
- "அணு சக்தி ஆயுதங்கள் உற்பத்தியை மேற்கொள்வோம்...."
- "நமது ராணுவம் இந்த ஆயுதங்களைப் பயன்படுத்த முறையாகப் பழகிக்

கொள்ளும்...'' — என்றெல்லாம் ஒரு விரிவான செயல் திட்டத்தையே வகுத்து விவரித்தார் பெர்னான்டஸ்!

ராணுவத் திட்டங்களை இப்படி பகிரங்கப்படுத்துவதே தவறு என்பது ஒருபுறமிருக்க, இந்த அறிவிப்புகள் எத்தகைய மோசமான விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை அமைச்சர் யோசித்துப் பார்க்கவில்லை. போக்ரான் பரிசோதனைக்குப் பிறகு பொறுப்பற்றுப் பேசிய இதர அமைச்சர்களும் உணரவில்லை.

நமது அணுகுண்டு சோதனைக்கும் இந்த வார்த்தை சீண்டல்களுக்கும் பதிலாகத்தான் பாகிஸ்தான் தனது அணுகுண்டு சோதனையை நிகழ்த்தியிருக்கிறது என்பதைக் கூறத் தேவையில்லை. அந்நாட்டில் அவசர நிலை பிரகடனம் செய்யப்பட்டு, 'எந்நேரமும் இந்தியாவின் தாக்குதலைச் சந்திக்கத் தயார்' என்று தலைமையிடமிருந்து அறிவிப்பு வேறு வந்திருக்கிறது!

அணு ஆயுதங்கள் விளைவிக்கக்கூடிய சேதமும் சோகமும் குலைநடுங்கச் செய்பவை. இதைச் சுட்டிக் காட்டியபோது, ''அந்த ஆயுதங்களை நாம் பயன்படுத்துவோம் என்று நான் கூறவில்லை; அவை நம்மிடம் இருப்பதால் மற்ற நாடுகள் நம்மிடம் வாலாட்டாமல் இருக்கும் என்பதால்தான் இந்தத் திட்டம்...'' என்று நியாயப்படுத்த முயன்றார் பெர்னான்டஸ்.

அவருடைய இந்த வாதம் அமோகமாகத் தோல்வியுற்றுப் போயிருக்கிறது! பாகிஸ்தான் அணு ஆயுத ஆயத்த நிலையை எய்தி இருப்பதுடன், 'அந்த இறுதி நிலைக்குத் தான் தள்ளப்பட்டது இந்தியாவின் அபாயகரமான நடவடிக்கைகளால்தான்' என்று இப்போது அடித்துக் கூறவும் இடமளிக்கப்பட்டு விட்டது!

''உலக நாடுகளும் சர்வதேசப் பொருளாதார அமைப்புகளும் நம் மீது விதிக்கும் பொருளாதாரத் தடைகள் ஒரு பக்கம்... இன்னொரு பக்கத்தில் பாகிஸ்தானின் பகிரங்க மிரட்டல்...

மூன்றாவது அபாயமாக அமையக்கூடியது பாகிஸ்தானின் ரகசிய ஊடுருவல். பயங்கர வாதம் என்கிற குறுக்கு வழி ஆயுதத்தை பாகிஸ்தான் ஏற்கெனவே பிரயோகித்து வரு




கிறது. முன்பு மும்பையிலும் சமீபத்தில் கோவையிலும் நடந்த குண்டு வெடிப்புச் சம்பவங்களின் பின்னணியில் இருப்பது 'பாக்'கின் ஐ.எஸ்.ஐ. தான் என்பது உலகறிந்த உண்மை.

சவால்களாலும் சவடால் பேச்சாலும் தூண்டிவிடப்படும்போது பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ. வலைப் பின்னல் இன்னும் வேகமாக ஊடுருவி கற்பனை செய்ய முடியாத நாச, சதி வேலைகளில் ஈடுபடும். ஆயிரம் அணு ஆயுதங்கள் இருந்தாலும் இத்தகைய திட்டமிட்ட சதிகளை முறியடிப்பது மிகக் கடினம்.

பாக் ஊடுருவல் இங்கே சாத்தியமாவதற்கு உள்ளூர்வாசிகளின் ஒத்துழைப்பும் உதவியிருக்கிறது என்பதையும் நாம் கண்டறிந்திருக்கிறோம்... உணர்வு பூர்வமாக அணுகி, தேச துரோகத்துக்குக் கூடத் தூண்டும் ஐ.எஸ்.ஐ. சதிவேலை அதிகரிக்க அதிகரிக்க, பயங்கரவாதமும் உள்நாட்டு அபாயமும் மிகப் பெரிய பிரச்னையாகிப் போகும்.

நிலைமையை மேலும் மோசமாக்க இன்னொரு மாபெரும் அணுகுண்டு வெடித்திருக்கிறது! எல்லாவற்றையும் விடப் பெரிய குண்டு! பப்ரி மஸ்ஜித் இருந்த தலத்தில் ராமர் கோயிலைக் கட்டியே தீருவோம் என்கிற பிடிவாதத்தில் தூண்களைச் செதுக்க ஆரம்பித்து விட்டது விச்வ ஹிந்து பரிஷத். வெவ்வேறு இடங்களில் பாகம் பாகமாக அமைத்து, அயோத்தியில் கொண்டு சேர்த்து, எதிர்ப்பு வலுக்கும் முன்னர் கோயிலை நிர்மாணித்து முடித்துவிடலாம் என்பது 'ரகசிய'த் திட்டம்!

இந்த 'ரகசிய'த் திட்டம் செயல்படுத்தப்பட்டால் ஆட்சிக்கே வேட்டு வைக்கும் விபரீதமாகத்தான் முடியும். பப்ரி மஸ்ஜித் தகர்ப்பினால் புண்பட்டுப் போன உணர்வுகள் இன்னும் ஆறவில்லை. அங்கு ராமர் கோவில் அமைப்பதென்பது மிகப் பெரிய உள்நாட்டுக் கலவரத்துக்கே கூட வழிவகுக்கக்கூடும். உலகின் பார்வையில் இந்தியா 'மத வெறியர்களின் இருப்பிடம்' என்று முத்திரை குத்தப்படும்!

அவப் பெயரும் தலைகுனிவும் ஒருபுறமிருக்க, உள்நாட்டுக் கலவரத்தையோ, தீவிரவாத ஊடுருவலையோ ஒடுக்க எந்த அணு ஆயுதம் கைகொடுக்கும்...? ஜார்ஜ் பெர்னான்டஸுடன் பிரதமரும் யோசித்துப் பார்க்கட்டும்! ○

# "வேறெந்த அரசுக்கு இந்த தைரியம் இருந்தது?"

மத்திய தகவல் ஒலிபரப்புத்துறை அமைச்சர் சுஷ்மா ஸ்வராஜை சமீபத்தில் அவர் பெங்களூர் வந்திருந்தபோது சந்தித்தோம். படு போல்டாகப் பேசுகிறார். பிசிறு தட்டாத வாக்கியக் கோர்வை, அசாத்தியமான தன்னம்பிக்கை. அவரது விறுவிறுப்பான பேட்டி இதோ :

**கல்கி** : பா.ஜ.க. அரசுக்கு நித்ய கண்டம் என்கிற நிலை இருப்பதால் எந்த முடிவும் எடுக்க முடியாமல் திணறுகிறது என்று எல்லா கட்சியினரும் விமர்சிப்பது பற்றித் தங்கள் கருத்து...?

**சுஷ்மா** (ஆவேசமாக) : முழு மெஜாரிடி வைத்திருந்த அரசோ, மூன்றில் இரண்டு பங்கு மெஜாரிடி வைத்திருந்த அரசோ நடத்த முன்வராத அணுகுண்டு பரிசோதனையை நாங்கள் செய்யவில்லையா? பிரசார் பாரதி பற்றிப் பத்து வருஷங்களாகப் பேசி வந்தார்கள். நடைமுறைக்குக் கொண்டு வர, பா.ஜ.க. தவிர வேறு யாரால் முடிந்தது? ஆட்சிக்கு வந்த ஐம்பதே நாட்களில் இதையெல்லாம் செய்திருப்பது ஒரு பொருட்டாகத் தெரியவில்லையா?

**கல்கி** : அணுகுண்டு சோதனை முழுக்க முழுக்க விஞ்ஞானிகளின் வெற்றி. இதற்கு நீங்கள் அனுமதி தந்தது தவிர, வெற்றிக்கு உரிமை கொண்டாட எப்படி முடியும்?

**சுஷ்மா** : அதில் சந்தேகமில்லை. அது முழுக்க முழுக்க விஞ்ஞானிகளின் வெற்றிதான். ஆனால் பின் விளைவுகளான பல நாட்டு எதிர்ப்பு, பொருளாதாரத் தடைகள் இவற்றை எதிர்கொள்ளப் போவது நாங்கள்தானே? முன்னிருந்த எந்த அரசுக்கு இந்த தைரியம் இருந்தது? மேலும் நமது விஞ்ஞானிகளின் திறமையை நம் நாட்டு மக்களுக்கும் உலகுக்கும் வெளிச்சம்



போட்டுக் காட்டியது பெருமைக்குரிய விஷயம் இல்லையா? இங்குள்ள இளம் விஞ்ஞானிகளும் பொறியியல் வல்லுநர்களும் இனி தங்களை நிரூபிக்க, மேல் நாடுகளுக்குத்தான் செல்ல வேண்டும் என்று நினைக்க மாட்டார்களே! நமது அறிவுச் செல்வம் நம் நாட்டிலேயே உபயோகப்படும் என்பதற்கு இச்சம்பவம் ஒரு கிரியா ஊக்கியாக விளங்குமே!

**கல்கி** : பிரசார் பாரதி சட்டத்தை அமுல்படுத்தியதாகச் சொன்னாலும்

— சுஷ்மா ஸ்வராஜ் பேட்டி

இன்னும் அது ஏட்டளவில்தானே உள்ளது?

**சுஷ்மா** : நம்புங்கள். இந்தப் பாராளு மன்றக் கூட்டத் தொடரில் அது 'பாஸ்' ஆகி இரண்டே மாதத்தில் நடைமுறைக்கு வந்து விடும். இதில் சந்தேகமே வேண்டாம்.

**கல்கி** : சினிமாத் துறையை ஒரு தொழி லாக அங்கீகரிப்பதை மும்பைப் பட உலகம் எதிர்க்கிறதே, என்ன செய்யப் போகிறீர்கள்?

**சுஷ்மா** : அப்படியா? எனக்குத் தெரி யாது. பாலிவுட் பிரமுகர்கள் பலர் கடந்த வாரம் என்னைச் சந்தித்துப் பேசினார்கள். அப்போது கூட இது பற்றி ஏதும் கூறவில் லையே? எந்த ஒரு சட்டத்தைப் புதி தாக அறிமுகப்படுத்தினாலும் யாரா வது சிலர் எதிர்க்கவே செய்வார்கள். எல்லாரும் எல்லாவற்றையும் ஆதரிப் பார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

**கல்கி** : தனியார் தொலைக் காட்சிகளுக்கு சட்டதிட்ட வரை முறைகள் ஏதும் வைத்திருக்கிறீர் களா?

**சுஷ்மா** : தனியார் டீவிக்கள் நமது இந்தியப் பண்பாடு கெடாத நிகழ்ச்சிகளையே ஒளிபரப்ப வேண் டும். ஆடைக் குறைப்பு, ஆபாசங்களை அனுமதிக்க முடியாது. மேலும் மது பான விளம்பரங்களும் நிறைய இடம் பெறுகின்றன. இதையெல்லாம் கட்டுப்படுத்த ஒரு சட்டம் அவசியம் தேவை என்றுதான் நினைக்கிறேன்.

**கல்கி** : நம் நாட்டில் வருஷம் முழுக்க கிரிக்கெட் மேட்ச் நடக்கிறது. பிற விளையாட்டுக்களும் எப்போதும் நடக்கிறது. ரசிகர்களும் ஏராளம். இந் நிலையில் நமக்கென ஒரு 'ஸ்போர்ட்ஸ் சானல்' திறக்கலாமே? ஏராளமாய்ப் பணம் செலவழித்து. ஈயெஸ்பிஎன்னையும் ஸ்டார் ஸ்போர்ட்ஸை யும் ஏன் அண்டியிருக்க வேண்டும்?

**சுஷ்மா** : அட, பிரமாதமான யோசனை! இதுவரை யாருமே இதை என்னிடம் பேசிய தில்லை. கவனிக்கப்பட வேண்டிய விஷயம் தான். இதன் மூலம் வடகோடி மாநில குக் கிராமங்களிலுள்ள இளைஞர்களையும் கூட விளையாட்டில் ஈடுபடச் செய்யலாம். கணிச மாக நம் பணம் வெளியே போவதைத் தடுக்கலாம். யோசனைக்கு நன்றி. நான் இது பற்றி ஆலோசிக்கிறேன்.

பேட்டி : **நந்தினி**

## கலைஞர் - 75

அரசியலில் அதிகம் வளைந்து கொடுக்காதவர். ஆயினும் நட்புக்காக வளைந்து கொடுப்பார். தமது தலைமை யின் சக்தியை அவர் அறிந்திருந்தாலும் தொண்டர்களை அரவணைத்துச் செல் லும் பாணி, ஒவ்வோர் அரசியல்வாதியும் அவரிடம் தெரிந்து கொள்ள வேண்டிய சிறப்பு அம்சம். தோல்வி அவரைத் தளர் வடையச் செய்ததில்லை. ஆனாலும் சில தடவை வெற்றி அவரை நிதான மிழக்கச் செய்துள்ளது. தமிழ கத்தின் சிறந்த அரசியல் தலைவர்களில் அவரும் ஒருவர் என்பதை அவருடன் கருத்து மாறுபாடு கொண்ட வர்களும் மறுக்க இயலாது. அவருக்கு எனது பாராட்டுக் கள், வாழ்த்துக்கள்.



— ஜனா. கிருஷ்ணமூர்த்தி



## கலைஞர் - 75

அரசியலை அவரின் பிற ஈடுபாடுகளில் சம் பந்தப்படுத்தி குழப்பிக் கொள்ளாமல் - அது வேறு இது வேறு என்று பிரித்து எதையும் நிதானமாய் யோசிக்கிற அவரின் திறன் கண்டு வியந் திருக்கிறேன். பி.ஜே.பி. அரசு பதவியேற்ற டென்ஷனான சூழலிலும் கூட்டத்தில் ஒருவனாய் நின்ற என்னைப் பார்த்து 'தென்பாண்டிச் சிங்கத்தில்' நடித்திருப் பது நீங்கள்தானே என்று விசாரித்துப் பாராட்டியது பெரும் பாக்கியமாய் இருந்தது. கலைஞர்களைக் கூப்பிட்டுப் பாராட்டக்கூடிய அந்தப் பெருந்தன்மை கலைஞரிடம்தான் இருக்கிறது.

— பாலாசிங் (நடிகர்)



'ஆர்த்ரோஸ்கோபி' சிகிச்சை

# டீ.வியைப் பார்த்தபடி ஒரு ஆபரேஷன்!

முட்டிக்காலில் இளம் எலும்புகள் உண்டு. குருத்தெலும்பு எனப்படும் இவற்றில் ஒன்று கிழிந்து போனால் ('உடைந்து போனால்' என்று குறிப்பிட முடியாத அளவுக்கு மெல்லியது!) என்னாகும்? அதுவும் ஒரு சின்ன அடி கூட இப்படிப்பட்ட விளைவை ஏற்படுத்தலாம் எனும் போது? அடிபட்டுக் கொண்டவர் விளையாட்டு வீரராக இருந்தால் அவர் இனித் தன் 'வருங்கால விளையாட்டு சாதனை' கனவு களையே மறந்து விடலாம் என்கிற அளவுக்கு இதன் விளைவு இருக்கலாம்!

டென்னிஸோ, கிரிக்கெட்டோ, கால் பந்தோ, ஓடியாடித்தான் வெற்றிகளைப் பெற வேண்டும் எனும் நிலையில் உள்ள விளையாட்டு வீரர்களுக்கு, முட்டிகளில் அடிபட்டுக் கொள்ளும் வாய்ப்பு கிட்டத் தட்ட தினமுமே உண்டு. ஒரு பதினைந்து வருடங்களுக்கு முன் குருத்தெலும்பு மற்றும் முட்டிக்காலில் உள்ள தசைநார் நரம்பு (லிகமன்ட்) ஆகியவற்றில் பாதிப்பு ஏற்பட்ட விளையாட்டு வீரர்களில் கணிசமானவர்கள் அதற்குப் பிறகு 'அடக்கியே வாசிக்க வேண்டிய' கட்டாயமும், அதனால் குறிப்பிட்ட விளையாட்டில் தாங்கள் அடைந்த உயர்ந்த இடத்தைப் பறிகொடுக்க வேண்டிய அவலத்தையும் சந்தித்தார்கள்.

இப்போது அந்தக் கவலையில்லை. காரணம் 'ஆர்த்ரோஸ்கோபி'. மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்புகளைச் சீராக்கும் மருத்துவத் தொழில்நுட்பத்தில் இன்று முன்னணியில் இருக்கிறது ஆர்த்ரோஸ்கோபி.

ஜப்பானில் தோன்றியதுதான் இந்தத் தொழில்நுட்பம். என்றாலும் அமெரிக்காவில்தான் இது பல சிறப்பான முன்னேற்றங்களைக் கண்டது.

இந்த முறையில் பயன்படுத்தப்படும் கருவியான 'ஆர்த்ரோஸ்கோப்' எனப்படுவது, உண்மையில் ஒரு டெலஸ்கோப்தான். முனையில் ஊசி செருகப்பட்ட ஒரு

நீளமான ட்யூப் இதில் இணைக்கப்பட்டிருக்கும். இதன் அகலம் இரண்டு மில்லி மீட்டரில் இருந்து நாலரை மில்லி மீட்டர் வரை மட்டுமே. மணிக்கட்டு, விரல்கள் போன்றவற்றில் ஏற்பட்ட பாதிப்பை அறிய வேண்டுமானால் இரண்டிலிருந்து மூன்று மில்லி மீட்டர் வரை அகலம் கொண்ட ட்யூபையும், முட்டிக்கால் போன்ற பகுதி என்றால் நாலரை மில்லி மீட்டர் அகலம் கொண்ட ட்யூபையும் பயன்படுத்துவார்கள்.

இந்தக் கருவியை, குறிப்பிட்ட பகுதியில் செலுத்தியவுடன், பாதிப்பு எந்த அளவில் இருக்கிறது என்பதை காமிரா போன்ற தொரு இணைப்பின் மூலம் துல்லியமாக அறியலாம். இந்தக் கருவி ஆப்டிகல் ஃபைபரினால் உருவாக்கப்பட்டுள்ளது என்பதால் இதைச் சுலபமாக உட்செலுத்த முடிகிறது; அதே சமயம் உள்ளே ஒளியையும் இது செலுத்துவதால், பாதிப்பைப்




பளிச்சென்று உணர முடியும். பிறகு நவீன தொழில்நுட்பத்தின் உதவியுடன் இதில் பதிவாகும் உருவங்கள் (அதாவது பாதிக்கப்பட்ட எலும்பு மட்டும் தசைநார் பல்வேறு கோணங்களில்) டி.வி. திரையில் தோன்ற வைக்கப்படுகின்றன. பாதிப்பை அறிவதோடு, இதே கருவியின் மூலம் ஆபரேஷன் செய்து, குறைபாட்டை சரிசெய்யவும் முடிகிறது.

ஆர்த்ரோஸ்கோப் சர்ஜரியை நோயாளிக்கு மயக்கம் அளித்துதான் நடத்த வேண்டும் என்பதில்லை. பாதிக்கப்பட்ட பகுதியை மட்டும் மரத்துப் போகச் செய்யும் மருந்தை ஊசியின் மூலம் செலுத்தி விட்டுக் கூடச் செய்ய முடியும்.

பொதுவாக, முட்டிக்காலில் பாதிப்பு என்றால், அதற்கு ('knee cap'ற்கு) மேலே ஒரு துளையும் கீழ்ப் பகுதியில் இரு துளைகளும் போடுவார்கள். ஒரு துளையின் வழியாக தொடர்ந்து உப்பு நீர் செலுத்தப்படும். இன்னொன்றின் மூலமாக ஆர்த்ரோஸ்கோப் கருவி இணைக்கப்படும். மூன்றாவதின் மூலம் நுண்ணிய ஆபரேஷன் கருவிகள் செலுத்தப்படும்.

மற்ற பலவகை மூட்டு ஆபரேஷன்களில் ஏற்படுவது போன்ற சிக்கல்களும், பக்கவிளைவுகளும் ஆர்த்ரோஸ்கோப் உதவியுடன் செய்யப்படும் ஆபரேஷனிலும் உண்டு. ஆனால் இதன் மூலம் தொற்று நோய்கள் உண்டாகும் வாய்ப்பு குறைவு. காரணம் இதற்காகப் போடப்படும் துளைகள் அவ்வளவு சிறியவை. அதனால் தையல் அவசியமாக இருப்பதில்லை. எனவே தையல் தழும்புகளும் கிடையாது. பெரும்பாலான நோயாளிகள் ஆபரேஷன் செய்த அன்றோ, அல்லது அதற்கு அடுத்த நாளோ எழுந்து நடக்க ஆரம்பிக்கலாம்.

தோள் மூட்டு நழுவுதல், கணுக்கால் பாதிப்பு ஆகியவற்றிற்கெல்லாம் தீர்வு காண்பதில் கூட இந்த ஆர்த்ரோஸ்கோப் தொழில்நுட்பம் வெகு வேகமாக முன்னேறியிருக்கிறது. ○

— ஜி.எஸ்.எஸ்.

**கலைஞர் - 75**



நாலே வரிகளில் சொல்லவோ நாலடியார் போல் ரத்தினச் சுருக்கமாய்? நமது சிஎஸ்ஸுக்கு அடுத்து ரத்தினமான பாரத விருதினைப் பெறப் போகும் தகுதி நமது முத்தமிழ் அறிஞரைத் தவிர வேறு எவர்க்கு உளது?

– கே. பாலசந்தர்

# இந்த இதழ் முழுவதிலுமாக இடம் பெற்றிருக்க வேண்டிய ஜோக்ஸ்!



''யாரது படகு மறைவுல இருந்து அடிக்கடி நம்மை எட்டிப் பாக்குறது?''

''எங்கப்பாதான். அவர் சொல்லிக் கொடுத்த டயலாக்கெல்லாம் ஒழுங்கா பேசறேனான்னு கண்காணிக்கிறாரு.''

— மகாராம் திருப்பதி



''ஆனாலும் அந்தக் கண்டக்டர் படு மோசம்.''

''என்ன பண்ணினார்?''

''எனக்கு லக்கேஜூம், என் மூட்டைக்கு டிக்கெட்டும் வாங்கிட்டாரு!''

— எம். அசோக்ராஜா



''இந்த படத்துல நீங்க ரொம்ப ரசிச்சது எது?''

''தயாரிப்பாளர் குடுத்த செக்!''

— அம்பை தேவா



''எதுக்கு உங்க கடையில புடைவை வாங்கினா ஒரு 'கர்ச்சீப்' இனாம் தரீங்க?''

''புருஷன்காரன் பணத்தைக் கொடுத்துட்டுக் கண்ணீரைத் துடைச்சுக்கத்தான்!''

— சம்பத் குமாரி

''இந்தப் படத்துல எதுக்காக ஒரு தபால்காரர் அடிக்கடி வந்து யாராவது ஒரு கேரக்டரிடம் லெட்டர் கொடுத்துட்டுப் போறமாதிரி சீன் வருது?''

''படத்துல எந்த மெசேஜூமே இல்லைன்னு விமர்சனம் வந்துடக் கூடாதேன்னுதான்!''

— வடபழனி பாலு







"ரவுடி கபாலியோட பந்தா தாங்க முடியல!"

"என்ன சேதி?"

"மாமூல் வழங்கும் நாள் பிரதி மாதம் ஐந்தாம் தேதின்னு வீட்டு வாசல்ல பெரிசா எழுதி வச்சுருக்கான்!"

— அம்பை தேவா



"ஆமாம்! நான் பெண்டாட்டிக்குத் தோப்புக் கரணம் போடற விஷயம் உங்களுக்கு எப்படித் தெரிஞ்சது?"

— வடபழனி பாலு



"தலைவர் சிலையை இப்படி அமைச்சதிலேர்ந்து அவர் தலைல காக்கா உட்கார்ந்து அசிங்கம் பண்ணறது அடியோட நின்னுபோச்சு!"

— வடபழனி பாலு



"நம்ம கட்சில மீசைக்கு டை அடிக்கற பேர்வழிகள் பெருத்துட்டாங்க!"

"எதை வச்சி சொல்றீங்க தலைவரே?"

"கால்ல விழுந்த கூட்டத்தால என் பாதம் பூரா கறுப்பா மாறிடுச்சு!"

— அம்பை தேவா



"என்னோட பையன் உங்க பொண்ணை இழுத்துகிட்டு ஓடிட்டான்?"

"அதுக்கு என் தலையை சொறியறீங்க?"

"உங்ககிட்ட வரதட்சணையை வசூல் பண்ணிக்க சொல்லிட்டு போனான்!"

— கொங்கணாபுரம் வே. செந்தில்

"உடம்பு இளைக்க டாக்டர் கிட்ட போனீங்களே, மருந்து கொடுத்தாரா?"

"ஓ! கொடுத்தாரே! இந்த பாட்டிலில் 300 மாத்திரைகள் இருக்கு. இந்த மாடியில் இருந்து கீழே கொட்டிட்டு, பிறகு கீழே வந்து பொறுக்கி எடுத்து எண்ணி பாட்டிலில் போடணும். இதே மாதிரி காலையில், மத்தியானம், மாலையில் ரெண்டு ரெண்டு தடவை செய்யணும்'னு சொன்னார்!"

— எம். அசோக்ராஜா

"உங்க ஆபீஸ்ல 'யோசனைகள்' பெட்டி வைச்சிருந்தீங்க, இப்பக் காணும்?"

"யோசனைகள் பெட்டியால ஒரு பலனும் இல்லை. எடுத்துடலாம்னு ஒருத்தர் யோசனை எழுதிப் போட்டிருந்தார்!"

— அம்பை தேவா



அயோத்தி நோக்கி ரத யாத்திரையை அறிவித்து விட்டார் அத்வானி. எந்த வாகனத்தில் செல்வது, எந்த வழியில் செல்வது என்றெல்லாம் திட்டமிடாத நிலை. மும்பையிலிருந்து ஒரு தகவல் வருகிறது: "ரத யாத்திரைக்கு இரண்டு டொயோட்டா வேன்கள் தயாராகின்றன."

தகவல் கொடுத்தவர்: பிரமோத் மகாஜன்.

வர்த்தகத் தலைநகரமான மும்பையில் உள்ள பா.ஜ.க.வின் தூண்.

அடுத்த சில நாட்களில் ஆர்.கே. ஸ்டுடியோ ஆர்ட் டைரக்டர் துணையுடன் டோயோட்டா வேன்கள் ரத யாத்திரைக்குத் தயாராகிவிட்டன. வேன்களில் செய்யப்பட்டிருந்த கலை வேலைப்பாடுகளைப் பார்த்து பிரமித்து விட்டார் அத்வானி!

இன்று பா.ஜ.க.வின் 21ம் நூற்றாண்டுத் தலைவராக உருவாகிக் கொண்டிருப்பவர், பிரதமரின் அரசியல் ஆலோசகர் பிரமோத். வெட்டி வா என்றால் கட்டிவரக் கூடிய சாமர்த்தியம். எந்தப் பணி ஆனாலும் விஞ்ஞான பூர்வமாக அணுகி, ஆராய்ந்து செய்யும் திறமை அவருக்கு உண்டு.

1980ம் ஆண்டு வாக்கில் நாடு முழுவதும் கட்சியின் செல்வாக்கு பற்றி தகவல்களைக் கேட்டிருந்தார் அத்வானி. பெரும்பான்மையான மாநிலங்களிலிருந்து, ஏனோ, தானோவென்று அறிக்கைகள் வந்திருந்தன. ஆனால் மகாராஷ்ட்ராவில் இருந்து வந்த அறிக்கை மட்டும் லேசரில் டைப் செய்யப்பட்டு ஒரு கம்பெனியின் பிராஜக்ட் ரிப்போர்ட் போல 'கெத்'தாக இருந்தது. காரணம்: பிரமோத்!

1970 காலகட்டத்தில் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தில் பிரச்சாரக் ஆகச் சேர்ந்தது முதல், இன்றைய கால கட்டம் வரை பிரமோத்தின் வளர்ச்சி, மேல் நோக்கித்தான். இதில் விநோதம் என்னவென்றால், சமீபத்தில் பாராளுமன்றத் தேர்தலில் மும்பை நகர்ப்புறத் தொகுதி ஒன்றில் தோற்றுப் போனாலும் வாஜ்பேயி-அத்வானி ஆகிய இருவராலும் உடனே டெல்லிக்கு வரும்படி அழைக்கப்பட்டவர் மகாஜன். கூட்டணிக் கட்சித் தலைவர்களுடன் பேசி, அமைச்சரவை அமைப்பதில் எந்த சிக்கலும் வராமல் பார்த்துக் கொண்டது மட்டுமல்லாமல், நம்பிக்கை வாக்கெடுப்பின் போது தெலுங்கு தேசம் அதிரடியாக ஆதரவு கொடுத்ததற்குப் பின்னால் மகாஜனின் உழைப்பும் இருந்தது என்பது பா.ஜ.க.வில் எல்லோருக்கும் தெரியும்!

பௌதீகத்தில் பட்டப் படிப்பிற்குப் பின் அரசியல் விஞ்ஞானத்தில் பட்ட மேற்படிப்பு முடித்து, இதழியலிலும் டிப்ளோமா வாங்கியவர் மகாஜன்.

ஆசிரியராகப் பணியைத் துவங்கியவர், மும்பையை அரசியல் தளமாக வைத்துச் செயல்பட்ட சுப்பிரமணிய சாமியின் சிஷ்யராக ஒரு காலத்தில் செயல்பட்டார். சாமியின் போக்கு மகாஜனுக்குப் பிடிக்காததால், ஒரு கட்டத்தில் அவருக்கு 'குட் பை' சொல்லி விட்டார்.



# மகாஜன் காட்டில் மழை!

## கலைஞர் - 75



மிகப் பிற்படுத்தப்பட்டோருக்குச் சாதகமானவராக மட்டுமல்ல; சாதனைகளைச் செய்பவராகவும் இருக்கிறார் கலைஞர். மொழிப்போர் தியாகிகளைப் போல, சமூக நீதிப் போர் தியாகிகள் குடும்பத்துக்கும் நிதியுதவியும் பென்ஷனும் அளித்திருப்பது சாதனை! முன்பு முதல்வராக இருந்த கலைஞருக்கும் இப்போது முதல்வராயிருக்கும் கலைஞருக்கும் வித்தியாசமும் இருக்கிறது. இன்று எதிர்க்கட்சியினரும் பாராட்டுகிற வகையில் கோரிக்கைகளை உடனடியாக நிறைவேற்றி வைக்கிறார் கலைஞர்.

— தீரன் (எம்.எல்.ஏ)

கட்சியின் மூத்த தலைவர்கள் பலர் எதிர்த்தும் சிவசேனையுடன் கூட்டணி வைத்துக் கொள்ள பா.ஜ.க. உடன்பட்டதற்குக் காரணம் மகாஜனின் வற்புறுத்தல்தான்! அந்தக் கூட்டணி மகாராஷ்ட்ராவில் ஆட்சியைப் பிடித்ததும் கட்சியில் மகாஜனின் செல்வாக்கு ஓஹோ வென்று உயர்ந்தது. 'ஆங்காங்கே மாநிலக் கட்சிகளுடன் கூட்டணி வைத்துக் கொண்டால், ஆட்சியைப் பிடிப்பது சுலபம், என்ற யுக்தி வகுக்கப்பட்டவுடன், மகாஜனின் திறமை முழு அளவில் செயல்பட்டது.

பிஜு ஜனதா தள், திரிணமூல் காங்கிரஸ் ஆகிய கட்சிகள் வளைத்துப் போடப்பட்டன. இன்றும் அனைத்துக் கூட்டணிக் கட்சிகளின் தலைவர்களுடன் தொடர்பை நிலை நிறுத்தி வருபவர் மகாஜன் தான்! மகாஜனின் செல்வாக்கு சகல இடங்களிலும் எடுபடுவதற்குத் தொழிலதிபர்களுடன் அவருக்கு உள்ள நட்பும் ஒரு காரணம்.

**கா**லையில் 45 நிமிடம் உடற் பயிற்சி செய்து விட்டு ஏழு மணிக்கு பிரதமரின் இல்லத்தை அடைகிறார் 50 வயது மகாஜன். அப்போது துவங்கும் பணி, நள்ளிரவு வரை நீடிக்கிறது. மகாஜனுக்கு உதவியாக கையில் செல்போனுடன் இளைஞர் படை ஒன்று இயங்கிக் கொண்டிருக்கிறது. ஜஸ்வந்த்சிங், ஷெகாவத் ஆகியோர் பிரதமர் அலுவலகத்தில் பொறுப்பேற்பார்கள் என்ற ஊகங்கள் பொய்யாக்கப்பட்டு, மகாஜன் அரசியல் ஆலோசகராக நியமிக்கப்பட்டது குறித்து கட்சியில் உள்ள பெரிசுகளுக்குக் கொஞ்சம் வருத்தம்!

பிரமோத்தின் புத்திக் கூர்மை, செயல்திறன் ஆகியன, பதினைந்து வருடங்களுக்கு முன்னரே வாஜ்பேயியைக் கவர்ந்தது. "எதிர்கால பா.ஜ.க.வின் நம்பிக்கையூட்டும் நபராக நான் மகாஜனைப் பார்க்கிறேன்" என்று அப்போதே சொன்னார் வாஜ்பேயி. அதனால்தானோ என்னவோ, அவரது முந்தைய 13 நாள் அரசில் பாதுகாப்புத்துறை அமைச்சராக நியமிக்கப்பட்டார் மகாஜன்.

பிரதமரின் வளர்ப்பு மகளின் கணவரான ரஞ்சன் பட்டாசார்யா, மகாஜனுக்கு தோஸ்த் என்பதால்தான், அரசியல் ஆலோசகர் பதவி அவருக்குக் கிடைத்துள்ளது என்று சொல்பவர்களும் உண்டு!

விஞ்ஞானக் கலவையுடன் கூடிய மகாஜனின் அதிரடி அரசியலும், கட்சியில் அவரது வளர்ச்சியும் பழமைவாதிகளான ஆர்.எஸ்.எஸ். தலைவர்களுக்குக் கொஞ்சம் கசப்புணர்வை ஏற்படுத்தினாலும் இயகத்தின் 'முகத்திரை' யான கட்சியில் இதுபோன்ற தலைவர்கள் தேவை என்பதால் அவர்கள் பொறுமையுடன் கண்காணித்துக் கொண்டிருக்கிறார்கள்.

'வாஜ்பேய் சிஷ்யனாக இருப்பதால் தான் இந்தப் பதவி' என்பதை மறுக்கிறார் மகாஜன்.

"நான் அத்வானிக்கு வேண்டியவன், பிரதமரைச் சுற்றி நடப்பதை அறிந்து கொள்ள அத்வானிதான் என்னை இங்கு அனுப்பியிருக்கிறார்' என்றும் சிலர் சொல்கிறார்களே, அதற்கென்ன சொல்கிறீர்கள்? உண்மை என்னவென்றால், கட்சியின் பெரிய தலைவர்களான இந்த இருவருக்கும் கட்சிப் பணியில் துணை செய்யும் சாதாரணத் தொண்டன் நான்" என்று அடக்கத்துடன் சொல்கிறார் மகாஜன்.

— கௌசி

## கலைஞர் - 75



1952-ல் தமிழ்நாட்டிற்கு வந்தேன். இந்த 46 ஆண்டுகளில் எந்த நேரத்தில் அவரை அணுகினாலும் அந்த சமயத்தில் புதிதாக ஒரு புத்தகத்தை எழுதியிருப்பார். தினமும் இப்படி மொழியைக் கையாண்ட தமிழ்ப் படைப்பாளி தமிழில் வேறு யாருமே இல்லை. இந்த இயக்கம் என்னை ஆச்சர்யப்பட வைக்கிறது.

— அசோகமித்திரன் (எழுத்தாளர்)

இந்தியாவின் 'டாப் பாப் க்வின்' அலிஷா சினாய் தனது புது ஆல்பமான "Om - The Inner Voice"ஐ அண்மையில் வெளியிட்டார். கோகோ கோலா, எம்.டி.வி., கமன் மோடல்ஸ் இணைந்து வழங்கிய இந்த நிகழ்ச்சிக்கு, வழக்கம் போல் ஏராளமான இளசுகளுடன், அதிசயமாய் நிறைய 'ஆன்ட்டீஸ் அன்ட் அங்கிள்ஸ்'ம் கூட! மும்பையின் கலாசார போலீசுக்கு அதிக வேலை வைக்காமல் – அலிஷா மேடையிலிருந்தே பொதுவாக அனைவருக்கும் "ஐ லவ் யூ" சொல்ல, கூட்டமும் "ஐ லவ் யூ டூ" என்று அடிக்கடி கத்தியவாறே டான்ஸ் ஆடியதைத் தவிர எந்த அசம்பாவிதமும் இல்லை! – நிகழ்ச்சியைப் பத்து மணிக்குப் பட்டென்று முடித்து விட்டார். உலகப் பிரபலங்களின் தற்போதைய ஃபாஷனான 'ஆன்மீக' அலை இவரையும் தாக்கியிருக்கிறது. இதோ அவருடைய இன்ன(ட)ர் வியூ!



# "என் மதம் இசைதான்!"

— அலிஷா

"புடைவை கட்டிய விசிறிகளைப் பார்ப்பது அதிசயமாயிருக்கிறதா?"

"என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? 'பர்தா' போட்ட விசிறிகளே கூட எனக்குப் பரிச்சயம் தான்!"

"உடலைப் போலவே குரலையும் இளமை யாக வைத்திருக்கிறீர்களே...?"

"இரண்டுக்கும் ஒரே ஃபார்முலாதான்! கொழுப்பில்லாத உணவு! அடிக்கடி பார்ட்டி கிர்ட்டி என்று சுற்றுவது கிடையாது! 'புகைச்ச லான இடங்களைத் தவிர்த்து விடுவேன்; நிறைய சாதகம் செய்வேன்... அப்புறம் இப்போதெல் லாம் மேடையில் கொஞ்சம் ஆடவும் செய் கிறேன்."

"EMI ஆல் ஒப்பந்திக்கப்பட்டிருக்கும் முதல் இந்தியக் கலைஞர் என்பது எப்படியிருக்கிறது?"

"ரொம்ப ரொம்ப சந்தோஷமாகவும் பெருமையாகவும் இருக்கிறது. இவர்கள் கலை ஞர்களுக்கு நல்ல 'ராயல்டி' கொடுப்பார்கள்; அதுவும் HMV ஆல்பத்தின் மார்கெட்டிங் பொறுப்பை ஏற்றிருப்பது இரட்டிப்பு மகிழ்ச்சி யாயிருக்கிறது!"

"புது ஆல்பத்தில் அப்படி என்ன விசேஷம்?"

"அதைப் பற்றிய எல்லாமே விசேஷம்தான்! முதலாவதாக, எனக்கொரு ஆன்மீக ரூபத்தை இது அளித்திருக்கிறது. அடுத்து, உலகின் பலதரப் பட்ட இசை வடிவங்களையும் குழைத்து, இதற் கொரு பிரத்யேக, புதிய, வடிவமைத்திருக்கிறேன். இந்தியாவின் நாட்டுப்புறப் பாடலிலிருந்து, ஆப்ரிக்க, ஐரோப்பிய, அமெரிக்க ஜாஸ் சங்கீதம்

வரை, எல்லாம் அதில் ஐக்கியமாகியிருக்கிறது. ஆல்பத்துக்கு இரண்டு பிரிவுகள். 'ரிதம்' பகுதியில் தாள லயமும், 'ஆன்மீக'ப் பகுதியில் கவிதை நயமும் மிளிர்கின்றன. 'ஓம்' என்ற பிரணவ மந்திரத்தின் அடிப்படையில்தான் 'டைட்டில் ட்ராக்' அமைந்துள்ளது! 'லைலா' பாடல் மிடில் ஈஸ்ட்காரர்களுக்கு! கடைசி பாடலான 'பாபுல் மோரா'விற்கு எல். சுப்பிரமணியம் வயலின் வாசித்திருக்கிறார். மொத்தத்தில் இது, இந்திய மணம் சற்று தூக்கலாக இருக்கும் ஒரு வர்ல்ட் ம்யூசிக் ஆல்பம்."



"புதிய ஆல்பத்திற்கு ஊருக்கு ஒரு பெயர் போலிருக்கிறதே?"

"ஆமாம்; இந்தியாவில் 'ஓம்'க்கு சக்தி அதிகம்; அதுவே மிடில் ஈஸ்ட்டில் 'லைலா' என்றால்தான் எடுபடும். எனக்கு மதம், இசைதான்! அனைவருக்கும் அப்படியே இருக்க வேண்டுமென்பது என் ஆழ் மனத்து ஆசை. ஆனாலும் அங்கங்கே இருக்கும் 'ரிலிஜியஸ் ஸெண்டிமெண்டு'களை ஒரேயடியாக உதாசீனப்படுத்த முடியாதல்லவா?"

"13 வருடங்களுக்கு முன் 'ஜாது'வில் ஆரம்பித்தபோது ஒரு குறும்புத்தனமான குமரி இமேஜ், அப்புறம் மடோனா ஆஃப் இந்தியா போன்றவற்றில் மடோனாத்தனமான இமேஜ், இப்போது 'ஓம்'மில் ஆன்மீக 'இமேஜ்'... இப்படி அடிக்கடி இமேஜ்களை மாற்றுவது கஷ்டமாக இல்லையா...?"

"காலத்தின் போக்கோடு நாமும் மாறுவது இயற்கைதானே? அந்தந்த காலகட்டத்திற்கேற்ப ஒரு கலைஞன் தன்னை மாற்றிக் கொண்டால்தான், மக்கள் மனத்தில் நிரந்தரமாக இடம் பிடிக்க முடியும். அதுவும் என்னுடைய 'மேட் இன் இண்டியா' ஸூப்பர் ஹிட்டான பிறகு, உலக அளவில் அங்கீகாரம் கிடைத்து விட்டது. அதனால் எனது அடுத்த நடவடிக்கை அதிக 'க்ளோப'லாக இருக்க வேண்டும் எனத் தோன்றியது. அதற்கு 'ஸ்பிரிட்சுவலிஸம்'தானே சிறந்தது?"

"மடோனா கூட தனது 'ரே ஆஃப் லை' ஆல்பத்தில், வேத மந்திரங்களை எல்லாம் ஓதி தான் ஒலிப்பியிருக்கிறாரே! உச்சரிப்பு சரியில்லை என்று வேறு சிலர் முணு முணுக்கிறார்கள்..."

"அதனால்தான் நான் அதிகமாக மந்திர உச்சாடனத்தை எல்லாம் மேற்கொள்ளவில்லை. மடோனாவும் ஆன்மீகத்தின் பக்கம் திரும்பியிருப்பது ஒரு 'கோயின்ஸிடன்ஸ்'தான். மற்றபடி நான் அவரைப் பின்பற்றுகிறேன் என்று அர்த்தமில்லை! ஒரு காலத்தில் என்னை இந்தியன் மடோனா என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அதற்கப்புறம் 'மேட் இன் இண்டியா' ஸூப்பர் ஹிட்டாகி என் இமேஜையே மாற்றிவிட்டது! இப்போது மறுபடியும் எங்கள் இருவர் பார்வையும் ஒரே கோணத்தில் திரும்பியுள்ளது; அவ்வளவே!"

"அனு மலிக் மீது தொடுத்த பாலியல் பலாத்கார வழக்கை நீங்கள் வாபஸ் வாங்கி விட்டதாக அவர் கூறுகிறாரே?"

"சுத்தப் பொய்; அது இன்னும் அப்படியே தானிருக்கிறது!"

"சினிமாவுக்குப் பின்னணி பாடுவதைக் குறைத்துக் கொண்டு விட்டீர்களா?"

"ஆமாம்; மிக நல்ல வாய்ப்பாய் இருந்தால் மட்டுமே ஏற்றுக் கொள்வது என முடிவு செய்து விட்டேன்." ●

— ஜெயஸ்ரீராஜ்

## கலைஞர் - 75

கட்சியைக் கட்டுப்பாட்டுடன் வளர்ப்பதில் இவர் ஒரு காமராஜர். நிர்வாகத் திறமையில் இவர் ஒரு ராஜாஜி. நட்புக்கு இலக்கணமாகத் திகழ்வதில் இவர் ஒரு பெரியார்.

— டி. டி. வாசு

## கலைஞர் - 75

அவருக்கு வேண்டுமானால் வயது எழுபத்தைந்து ஆகலாம். ஆனால் — அவர் அறிவிற்கு? அரசியல்வாதியாய் — இலக்கியவாதியாய் — திரைக் கலைஞனாய் — ஆழமாய் அவர் பதித்த சுவடுகளுக்கு வயது ஏது? இருநூறு வருடங்களைத் தாண்டி முன்னோக்கிச் செல்கிறது கலைஞரின் அறிவுத்திறன்.



— நாசர்

# கூட்டம் வராத ஆட்டம்!


• கென்யா வீரர்கள் (படம்: உமாமணி)

கென்யாவும் பங்களாதேஷும் சிதம்பரம் ஸ்டேடியத்தில் மோதிக் கொண்டால் யாருக்கு என்ன போச்சு என்று உள்ளூர் கிரிக்கெட் ரசிகர்கள் ஒட்டுமொத்தமாக 'பாய்காட்' பண்ணி விட்டார்கள். அத்தனை பெரிய ஸ்டேடியத்தில் மொத்தமாக ஐயாயிரம் பேர் இருந்திருப்பார்களா, சந்தேகம்!

அதிலும் கூட 100, 150, 200, 250 ரூபாய் டிக்கெட் பகுதிகளில் ஈ காக்காய் கிடையாது. ரூ. 25, 15 பகுதிகள்தான் கொஞ்சம் மானத்தைக் காப்பாற்றின. பேசாமல் கென்யாவும் பங்களாதேஷும் தத்தம் நாடுகளிலிருந்து ரசிகர்களையும் அழைத்து வந்திருக்கலாம்!

கூட்டம் வராது என்பது உறுதியாகத் தெரிந்தும் தமிழக கிரிக்கெட் அசோஸியேஷன் சென்னையில் இந்த மேட்சை நடத்த ஏன் முன் வந்தது?

காரணம் – 1 :

இந்த மேட்சை நடத்தினால்தான் பின்பு வரவிருக்கிற இந்தியா – பாகிஸ்தான் டெஸ்டை இங்கே நடத்த அனுமதி கிடைக்கும்.

காரணம் – 2 :

இந்த மேட்சை நடத்த கிரிக்கெட் போர்டே பத்து லட்சம் கொடுத்திருக்கிறது. பொதுவாக இப்படி போர்டு நிதி தருவதில்லை. அந்தந்த மாநில சங்கங்கள்தான் செலவுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும். (இது நலிந்தோர் நலத்திட்ட உதவி?)

மேட்சைக் கூர்ந்து கவனித்ததில் ஒரு விஷயம் புலனானது.

இன்னும் இரண்டு வருடங்களில் கென்யா அணி, வலுவான அணியாகி விடும். நல்ல கட்டுக் கோப்பு, போராடும் குணம், அண்டர்ஸ்டாண்டிங் இருக்கிறது அவர்களிடம். சரியான பயிற்சிதான் இனி தீவிரத் தேவை.

அதற்குப் பிரச்னை இல்லை. கென்யாவின் கோச்சாக நியமிக்கப்பட்டிருப்பவர், முன்னாள் கிரிக்கெட் சூப்பர் ஸ்டார் காளிசரண்!

## கலைஞர் – 75



அவர் பதவியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இத்தனை வருடங்களாகக் கட்சியை ஒரு கட்டுக் கோப்பில் வைத்திருப்பது பெரிய விஷயம். பல பிரச்னைகளைத் தாண்டி, ஒரு உறுதியான நிர்வாகத்தை எப்போதும் தர முடியுமெனில், அது கலைஞர் ஒருத்தரால்தான் முடியும்.

– பானுமதி

## கவலைப்பட்ட கூட்டம்

அ.தி.மு.க.வின் செயற்குழுக் கூட்டம் வழக்கம் போல் 'ஜேஜே'வென்று நடந்தது. ஆனால் ஜெ.தான் செமை கடுப்பில் இருந்தார். தமக்கு சாதகமாக இல்லாத வாஜ்பாயி அரசை 'மின்சார சாட்டை'யால் ஒரு விளாசு விளாசி விட்டார்!

ஆர்.கே. குமாரின் பதவிப் பறிப்புக்குப் பின் (அவர்கள் பாஷையில் ராஜினாமா) கடம்பூர் ஜனார்த்தனமும் தம்பிதுரையும் படு சோர்வாகக் காணப்பட்டனர்.

கடம்பூராரின் வலது, இடது கரங்களை ஓரம்கட்டிப் பேச்சு கொடுத்தபோது புலம்பித் தீர்த்து விட்டார்கள்.

"இந்தம்மாவுக்கு ரொம்ப அவசரங்க! ஒரே நாள்ல அத்தனை கேஸையும் இல்லாம ஆக்கிடணும்னா எப்படி? குமார் சின்ஸியராத்தான் 'ஒர்க்' பண்ணிட்டிருந்தாரு. ஆனா என்ன பிரயோஜனம்? நம்ம அண்ணன் கூட ரொம்ப பயப்படறாரு. காரியம் ஆற வரைக்கும் வெச்சிருந்து, பின்ன கப்புனு தூக்கிடுவாங்களோன்னு!"

இந்தச் சமயத்தில் – அணுகுண்டு சோதனை வெற்றியின் ஒளி வட்டம் வாஜ்பேயின் தலைக்குப் பின்னால் சுழன்று கொண்டிருக்கும்போது 'ஆதரவு வாபஸ்' மிரட்டலெல்லாம் எடுபடாது என்று பல அ.தி.மு.க. முக்கியப் புள்ளிகள் தீர்மானமாக நம்புகிறார்கள்.

ஆட்சியே கவிழ்ந்து, தேர்தலே வந்தாலும் அடுத்த முறை வாஜ்பேயிக்கு ஜெ.வின் தயவு தேவையிருக்காது என்று பேசிக் கொண்டார்கள்.

"ஆனால் இதையெல்லாம் அம்மாவிடம் யார் எடுத்துச் சொல்வது?" என்று பரிதாபமாகக் கேட்டார் ஒரு முன்னாள் வி.ஐ.பி.

தலித் எழில்மலை மூலம் எடுத்துச் சொல்ல வைக்கலாம் என்றும் பேசிக் கொண்டார்கள்.

## நெஞ்சோடு நெஞ்சம்

பெண்கள் உடல்நலப் பிரச்சனைகள் மற்றும் மருத்துவம் தொடர்பாக ஒரு டீவி நிகழ்ச்சி 'சன்'னில் தொடரப் போவதைப் (நெஞ்சோடு நெஞ்சம்) பத்திரிகையாளர்களைக் கூப்பிட்டுச் சொன்னார்கள். நிகழ்ச்சியைத் தொகுத்தளிக்கப் போகிறவர் ரேவதி.

'அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் கிராமத்துப் பெண்களுக்கு விழிப்புணர்ச்சி ஊட்டத்தானாம், இந் நிகழ்ச்சி.

பகல் 12:30க்கு அறியாமையில் மூழ்கிய எந்த கிராமத்துப் பெண் வயல் வேலை, வீட்டு வேலையை விட்டுவிட்டு சன் டீவி பார்க்கப் போகிறார் என்று தெரியவில்லை. ●

— சிக்கல் சிவராமன், சிம்மம்.



## சென்னை ரவுண்ட் அப்

# கலைஞர் – 75



தமிழகத்தில் வாழ்ந்த பெரியவர்கள் அத்தனை பேரையும் அரசியல் வேறுபாடு கருதாமல் போற்றிப் புகழ்வது கலைஞரிடத்தில் உள்ள ஒரு சீரிய பண்பு. தமது எழுத்தால், பேச்சால், கவிதையால், இலக்கியத்தால், நிர்வாகத் திறமையால் அழுத்தமான முத்திரையைப் பதித்தவர். அவருக்கு மலர் சொரிபவர்களும் இருக்கிறார்கள்; கடுமையாக விமர்சிப்பவர்களும் இருக்கிறார்கள். ஆக, தமிழகத்தில் என்றும் பேசப்படும் தலைவராக கலைஞர் உயர்ந்து நிற்கிறார்.

— அப்துஸ் சமது

# கலைஞர் – 75



20 – 25 ஆண்டு காலமாக அவரைப் படமெடுத்து வருகிறேன். நெஞ்சுக்கு நீதி மூன்று பாகங்களுக்கும் நான் எடுத்த புகைப் படங்கள்தாம் அட்டைப் படங்களாயின. அப்பாயின்மென்ட் தந்து விட்டால் போட்டோகிராபர்களுடன் ஒத்துழைப்பதில் அவருக்கு நிகர் அவரே. அவரைப் படமெடுத்த அனுபவங்களை பாக்கியமாகக் கருதுகிறேன்.

— யோகா

# வட்டமேஜை

✉ போக்ரான் சோதனை சம்பந்தமாக எல்லா பத்திரிகைகளும் பிரதமரையும், பாதுகாப்பு அமைச்சகத்தையும் புகழ்ந்து வரும் வேளையில், உண்மையைத் தலையங்கத்தில் உரத்த குரலில் சொல்லியிருப்பது பாராட்டுக்குரியது!

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ சர்வ கட்சியினரும் சரிநிகராக அணுகுண்டு சோதனையைப் பாராட்டியிருக்க, பிரதமருக்குத் தோல்வி என்று நொள்ளை கூறியிருக்கிறீரே... சே.. வெள்ளை மாளிகையில் ஆலோசகராய் இருக்க வேண்டிய உம்மை... கல்கியில் யாரய்யா சேர்த்தது?

கும்பகோணம், சித்ரா.

✉ தலையங்கம் கண்டு வருந்துகிறேன். உலகின் கண் முன் நோஞ்சானாய்த் தோற்றமளித்துக் கொண்டு அஹிம்மை உபதேசம் செய்வது பிறர் எள்ளி நகையாடவே உதவும். அணுகுண்டு சோதனை என்பது இப்போது அவசியமான ஒரு விசுவரூபம். இனி நாம் கொல்லாமை பற்றிப் பேசுவது தான் நம் ஆத்ம சக்திக்கு அடையாளம். போக்ரான் வெற்றி பாரத சாகசம்தான். கொஞ்சம் கண்ணாடியை மாற்றுங்கள்.

மதுரை – 1, சா. பாலசுப்ரமணியம்.

✉ காந்தி கோவில் கண்டிக்கப்பட வேண்டிய ஒன்று. மனிதரை தெய்வமாக்கி கோவில் கட்டியிருப்பது வருந்தத்தக்கது. விநாயகர் முதலான தெய்வங்களுடன் அவரை "பிரதிஷ்டை" செய்திருப்பது காந்தியின் கொள்கைக்கே விரோதமானது!

தூத்துக்குடி, கே. சுதர்சன்.

# எத்தனை உண்மை!

✉ டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தியின் எண்ணங்களைத் தொடர்ந்து படிக்கிறேன். வாழ்க்கை வரலாறு வழிகாட்டியாக அமைவது கோடியில் ஒருவருக்கே முடியும். உதயமூர்த்தியின் எண்ணங்கள் கோடிகளுக்கு வழிகாட்டியாக அமையும் சிறப்புடையன.

சென்னை – 83, தேவிமைந்தன்

✉ புகையிலைச் சனியனை பிடித்துக் கொண்டவர்கள் பிணி யூருக்குப் பெரும் சோகத்தோடு செல்வதுதானே நடக்கிறது. குத்கா பற்றிய கட்டுரை விழிப்புணர்வைத் தூண்டும் விதமாக அமைந்தது.

மதுரை – 9, இரா. கல்யாணசுந்தரம்.

✉ கம்ப்யூட்டர் ஆக்கிரமிப்பால் பணக்காரன் ஏழை இருவருக்கும் உள்ள இடைவெளி பெருகிக் கொண்டே போகும் என சுஜாதா கூறியது எத்தனை உண்மை!

திருமானூர், ஆர். மார்ட்டின்

✉ சினிமா, பாட்டு என்று பொழுதைக் கழிக்கும் இன்றைய இளைஞர்களிடையே, சமூக சேவை, பெண்கள் முன்னேற்றம் என்று பாடுபடும் இளைஞர் சந்தானராமன் பாராட்டுக்குரியவர் தான்.

நல்லத்துக்குடி, கே.வி. சூர்யா

✉ "சமி சூப்பர் மார்க்கெட் பகுதியில் "விண்ணுலகத்துக்குப் பேச செல்ஃபோன்" என்று தலைப்பிடுவதற்குப் பதிலாக "செல்ஃபேன்" என்று தவறாக அச்சாகியிருக்கிறதே!

சென்னை – 41, த. வந்தியக்குமாரன்.

# காப்பி, டிபன், காலை பேப்பர் மற்றும் பெட்ரோல்!

சென்னை தியாகராயநகர் வெங்கட் நாராயணா சாலையில் செல்பவர்கள் கவனத்திலிருந்து அந்த பெட்ரோல் பங்க் தப்ப முடியாது. அதுவும் இருள் கவியத் தொடங்கிய பிறகு அந்தப் பெட்ரோல் பங்க்கைப் பார்ப்பவர்கள் ஏதோ மேல்நாட்டுக்குச் சென்று விட்டதாகவே உணர்வார்கள் - அப்படி ஒரு நவீன அமைப்பு, கவர்ச்சிகரமான மேல்தளம், சீருடையோடு பணியாட்கள், பிரகாசமான என்றாலும் கண்ணை கூசச் செய்யாத ஒளி.

'New Generation Retail Outlet' என்ற வகையில் இந்தியா முழுவதுமாக பத்து பெட்ரோல் பங்க்குகளை ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டுள்ளது பாரத் பெட்ரோலியம் நிறுவனம். தமிழ்நாட்டைப் பொறுத்தவரை மேற்படி பெட்ரோல் பங்க். அதன் டீலர் சுந்தரவேலை சந்தித்தபோது மேல் விவரங்கள் கிடைத்தன.

1965லிருந்தே இங்கு இயங்கி வரும் பெட்ரோல் பங்க்கை சுமார் எட்டு மாதங்களுக்கு முழுவதுமாக சமீபத்தில் மூடி வைத்து, அதை இடித்து, புதுப்பித்து அழகுபடுத்தியிருக்கிறது பாரத் பெட்ரோலியம். கட்டுமானங்கள் எல்லாம் இவர்கள் செலவுதான்; பெட்ரோலை வாங்கி விற்பது மட்டும் டீலரின் பொறுப்பு. பெட்ரோல் பங்கின் மேற்புறம்





• இரவுத் தோற்றம் (படங்கள் : ஸ்ரீஹரி)

## கலைஞர்-75



கலைஞர் ஒரு சரித்திர நாயகர். முதல் நூற்றாண்டில் தோன்றிய வள்ளுவர்க்குக் கோட்டம் அமைத்தார்; இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் எம்.ஜி.ஆர். அவர்களுக்கு நினைவிடத்தையும் அமைத்தார். இப்படி தமிழகத்தில் யாரும் செய்யாத சாதனையைச் செய்து, தமிழகத்தின் பெருமையை நிலைநாட்டிய பெருமை கலைஞருக்கு மட்டும்தான் உண்டு. அவர் ஒரு சகாப்த கர்த்தா. எழுத்துலக வேந்தன்.

–வை.பாலசுந்தரம்:

**கலைஞர் - 75**



கலைஞர் ஒரு தாயின் வயிற்றில் பிறந்த முத்து. கடும் உழைப்பில் பிறந்த வைரம். அவர் ஓர் உதாரணம். உழைத்தால் மனிதன் உயர முடியும் என்பதற்குக் கலைஞர் ஓர் இலக்கியம்.

— ஆர்.எம். வீரப்பன்

உள்ள அழகான, எடை குறைந்த கானோபி ஷெல்டர் துபாயிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுள்ளது. மழை பெய்தால் துளியும் லீக் ஆகாது என்பதோடு, நவீனமாகப் பொருத்தப்பட்டுள்ள ஒளி விளக்குகளைத் தாங்கவும் இது மிகவும் ஏற்றதாம்.

பங்க் முழுவதும் (ஓரிடத்தில் பளீர் வெளிச்சம்; ஓரிடத்தில் இருட்டுத் திட்டு என்றில்லாமல்) ஒரே சீராக ஒளி பரவுமாறு வடிவமைத்திருப்பவர்கள் பிலிப்ஸ் நிறுவனத்தார்.

முதல் முறையாக ''ஒரே பம்ப்பில் பல்பொருள்'' என்பது அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது. அதாவது காரில் வருபவர்கள் நிரப்பிக் கொள்ள வேண்டியது வழக்கமான பெட்ரோலாக இருந்தாலும் சரி, டீசல் ஆனாலும் சரி, ஈயம் நீக்கப்பட்ட பெட்ரோல் ஆயினும் சரி, பங்கின் முன் வரிசையில் உள்ள மூன்று யூனிட்டுகளில் எதில் வேண்டுமானாலும் சென்று தங்கள் காருக்குத் தேவையான 'உணவை' நிரப்பிக் கொள்ளலாம்!

டீலரைத் தவிர இதற்கென்றே ஒரு தனி அதிகாரியையும் நியமித்திருக்கிறது பாரத் பெட்ரோலியம். தினமும் அரை நாள் இங்கே இருக்கிறார்.

''அடுத்த இருபது வருடங்களுக்கு எந்தவித மாறுதலும் தேவைப்படக்கூடாது'' எனும் லட்சியத்தோடு எழுப்பப்பட்டிருக்கும் இந்த பெட்ரோல் பங்க், 24 மணி நேரமும் திறந்திருக்கிறது. சிறு கடை ஒன்றும் இதில் உண்டு. காப்பி, குளிர்பானங்கள் தவிர ரெடிமேட் உணவுப் பொருட்களும் கிடைக்கும். (விரைவில் பீட்ஸாவும் விற்பனைக்கு வருகிறதாம்.)

''இப்படி எங்கள் பெட்ரோல் பங்க்கை நவீனமயமாக்கிய பிறகு விற்பனை இரு மடங்காக அதிகரித்திருக்கிறது. பெட்ரோல், டீசல் ஆகிய இரண்டும் சேர்ந்த மொத்த விற்பனையில் சென்னையிலேயே நாங்கள்தான் இப்போது நம்பர் ஒன். இத்தனைக்கும் கடனுக்கு விற்பனை செய்வதையும் நாங்கள் நிறுத்தி விட்டோம்.''

இதெல்லாம் சரி, வேறு சில சிறப்புகளை அவர் அடுக்கிய போதுதான் ஸ்கூட்டர் பயணியான நமக்குக் கொஞ்சம் எரிச்சல் வந்தது. ''காலையில் வரும் முதல் நூறு வாடிக்கையாளர்களுக்கு 'பிஸினஸ் லைன்' நாளிதழ் இலவசம். தவிர வடிகட்டிய குளிர் நீரை கையுறை அணிந்த எங்கள் பணியாளர் ஒருவர் டிஸ்போஸபிள் கப்பில் ஊற்றி தேவைப்படும் வாடிக்கையாளர்களுக்கு அளிப்பார். இப்படி ஒரு நாளைக்கு 1200 கப் நீர் விநியோகிக்கப்படுகிறது'' என்றார். இதில் என்ன எரிச்சல்? நல்லதுதானே என்பவர்களுக்கு - இந்த இரு சிறப்பு வசதிகளும் காரில் வரும் கனவான்களுக்கு மட்டும்தானாம்!

— ஜி.எஸ்.எஸ்.

**கலைஞர் - 75**



தமிழகத்தின் மூத்த அரசியல்வாதிகளில் ஒருவர் கலைஞர் கருணாநிதி அவர்கள். மிகச் சிறிய வயதிலிருந்தே பொது வாழ்க்கையில் ஈடுபட்டு, தமது உழைப்பாலும் திறமையாலும் தமிழகத்தின் முதல்வர் பொறுப்புக்கு உயர்ந்த பெருமைக்குரியவர். எழுத்தாற்றல் மூலமாக எழுச்சி உண்டாக்க முடியும் என்பதற்கு எமர்ஜென்சி காலத்தில் முரசொலியில் அவர் எழுதிய கலைஞர் கடிதமே சான்று. முதல்வர் பொறுப்பில் இருக்கும்போது காட்சிக்கு எளியவராக இருக்கிறார் என்பது இவரை வித்தியாசப்படுத்திக் காட்டுகிறது. பல்லாண்டு காலம் அவர் வாழ்ந்து, பொது வாழ்வில் அவர் தொடர்ந்து தொண்டாற்றத் தேவையான ஆரோக்கியத்தை அருளுமாறு ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

— இல. கணேசன்

ஸ்பீல்பெர்க் இயக்கிய இந்தப் படம் அவரது 'ஷிண்ட்லர்ஸ் லிஸ்ட்' போலவே மனத்தில் பாறாங்கல்லைத் தூக்கி வைக்கும் ஒரு முயற்சி.

அமிஸ்டாட் என்ற ஸ்பெயின் நாட்டுக் கப்பலில் சிறை வைக்கப்படும் 53 ஆப்ரிக்க அடிமைகள், திடீர் வேகத்தோடு கப்பல் பணியாளர்களைத் தாக்கி விட்டுத் தாங்களே கப்பலைச் செலுத்துகிறார்கள். ஆனால் இரு மாதங்கள் வழி தெரியாமல், கடலில் தொலைந்து போன பிறகு, அமெரிக்கப் போர்க் கப்பல் அதிகாரிகளால் சிறைப் பிடிக்கப்படுகிறார்கள். கடற்கொள்ளை, கொலை ஆகிய பழிகள் அவர்கள் மீது சுமத்தப்பட்டு, நீதி விசாரணை நடக்கிறது.

# அமிஸ்டாட்

தென் அமெரிக்கர்களைத் திருப்திப்படுத்த, இவர்களை அடிமைகளாகவே நடத்தத் தீர்மானிக்கிறார் அமெரிக்க ஜனாதிபதி. போதாக்குறைக்கு அமெரிக்காவோடு சமரச ஒப்பந்தத்தில் ஈடுபடச் சம்மதிக்கும் ஸ்பெயின் இளவரசி இசபெல்லா, அந்தக் கப்பல் அடிமைகளைத் தங்களுக்குத் தாரை வார்க்க வேண்டுமென்று 'டீல்' போடுகிறாள்.

இத்தனை அரசியல் சகுனிகளுக்கிடையே சிக்கித் தவிக்கும் அந்த அடிமைகளின் ஒரே நம்பிக்கை நட்சத்திரம், அவர்களுக்காக வாதாடும் முன்னாள் அமெரிக்க அதிபர் ஜான் ஆடம்ஸ்!

கப்பலில் அடிமைகளை விலங்கோடு வைத்திருப்பதும் உடல் நலமில்லாதவர்களுக்கு உணவு வேண்டாம் என்று தீர்மானிப்பதும் (ஆரோக்கியமான அடிமைகளுக்குதான் அதிக விலையாம்), பலவீனமானவர்களை மொத்தமாகக் கடலில் தள்ளுவதும் மனத்தை உலுக்குகிறது.

குறிப்பிட்ட கறுப்பர்கள் ஆப்ரிக்காவிலிருந்து வந்தவர்களா என்பது வழக்கின் முக்கியக் கேள்வி. அந்த நிலையில் ஜனாதிபதியின் வீட்டிலுள்ள (பல்வேறு நாடுகளிலிருந்து கொண்டு வந்த) செடிகளைப் பார்க்கும் அடிமைகளின் பிரதிநிதி, ஆப்ரிக்கச் செடியையும் அதன் மண்ணையும் பார்த்தும் முகர்ந்தும் புல்லரித்துப் போகும் காட்சி, கவிதை!

— ஜி

**கலைஞர் - 75**

கலைஞரை ஓர் இலக்கியவாதி என்று பெரும்பாலானவர்கள் அங்கீகரிக்காவிடினும் அவர் சலிப்புறாமல் கதை, கட்டுரைகள் எழுதிக் கொண்டேதான் இருக்கிறார். அவரது எழுத்தின்மேல் அவருக்குள்ள நம்பிக்கை ஒவ்வொரு எழுத்தாளனுக்கும் அவனது எழுத்துமேல் கட்டாயம் இருக்க வேண்டும்.

— சா. கந்தசாமி (எழுத்தாளர்)



**கலைஞர் - 75**

முதிர்ந்த, மூத்த அரசியல் தலைவர். பழைய நிலைமைகளை விட இப்போது மிகவும் பக்குவமடைந்து இருக்கிறார். பல்லாண்டு வாழ வாழ்த்துக்கள்.

— சோ. பால கிருஷ்ணன்

●●●●●●●●●●●●●●

தலை சிறந்த எழுத்தாளர். நிகரற்ற உழைப்பாளி. நினைவாற்றலின் சிகரம்!

— வைகோ.



**கலைஞர் - 75**

# கிழக்கும் மேற்கும்

டிராலியில் சூட்கேஸை வைத்து, தள்ளிக் கொண்டு வெளியே வந்தான் சுந்தர். சென்னையின் வெக்கையை உணர்ந்தான். கனடாவில் வெளியே போக வேண்டுமென்றால் ஜீன்ஸ், ஜாக்கெட், க்ளவ்ஸ், தொப்பி, பாதி கால் உயரத்திற்கு ஷூ போட வேண்டும். அப்போது தான் குளிர் தாங்கும். எனவே சுந்தருக்கு வெக்கை கஷ்டமாக இருந்தது. டிரைவர் ராஜன் மட்டும் வாசலில் நின்று கொண்டிருந்தான்.

"அம்மாவுக்கு வரமுடியவில்லை. அதான் என்னை அனுப்பினாங்க" என்றான். சுந்தர் காரில் ஏறி உட்கார்ந்தான்.

"என்னப்பா! தமிழ்நாட்டு ஜனங்க மாறி, மாறி வோட்டுப் போடறாங்க!"

"ஜனங்க ஒரே மாதிரிதான் வோட்டுப் போடறாங்க. அரசியல் வாதிங்கதான் மாறிக்கிட்டேயிருக்காங்க. அது வெளியேயிருந்து பார்க்கற உங்களுக்கு ஜனங்க மாறுவது போல தோணுது" என்றான்.

சுந்தர் சிரித்தான்.

"ஆமா! உங்க ஊரு கிளிண்டன் - மோனிகா லூவின்ஸ்கி விவகாரம் என்னானது?"

"அது எங்க ஊரு இல்ல. பக்கத்து ஊரு!"

"எங்களுக்கு கனடா, அமெரிக்கா எல்லாம் ஒண்ணுதான்" என்றான் ராஜன்.

சுந்தருக்கு இந்த விஷயம் படு ஆச்சரியமாக இருந்தது. இது நம்மூர் ஸ்பெஷாலிட்டி என்று சொல்லலாம். சென்னையில் பன்னிரண்டாம் கிளாஸ் படித்து விட்டு கார் ஓட்டும் ராஜனுக்கு, உலக விவரங்கள் ஓரளவு தெரிந்திருக்கிறது. கனடாவில் தன்னுடன் வேலை பார்க்கும் சிலருக்கே இந்தியாவிற்கும், பாகிஸ்தானிற்குமுள்ள வித்தியாசத்தை விளக்க வேண்டியிருந்தது. 'உலகப் பொது விஷயங்களில் இந்தியர்கள் ஆர்வமிக்கவர்கள்' என்று, கூட வேலை பார்க்கும் மர்ரே சொன்னது ஞாபகம் வந்தது.

வீட்டிற்கு வந்தவுடன் டெலிபோன் அடித்தது. எடுத்தால் சரவணன் மறுமுனையிலிருந்து.

"ஹாய் சுந்தர்! எப்படா வந்த?" என்றான்.

"இப்பத்தான் உள்ள நுழையறேன்."

"வீட்டிற்கு எப்ப வர்றே?"

"டயர்டா இருக்குது. அம்மா சொதி பண்ணியிருக்கா! சாப்பிட்டு ஒரு தூக்கம். சாயங்காலம் ஏழு மணிக்கு வருகிறேன்" என்று சொல்லி போனை வைத்தான்.

சரவணன், பெரியப்பா பையன். வீடு அடையாறிலிருக்கிறது.

ஒன்றாகவே வளர்ந்தவர்கள்.

சாயங்காலம் சரவணன் வீட்டிற்குப் போனான்.

"வாப்பா வா! ஃபாரின் ரிடர்ன். எப்படியிருக்க?"

"நான் ஃபாரின் ரிடர்ன் இல்ல. நான் திரும்பி பாரினுக்கு ரிடர்னாகப் போறவன்."

"இந்தக் கடி மட்டும் மாறலை. முதல்ல என்ன சாப்பிடறே?"

"முதல்லயா? என்ன பெரிய லிஸ்டே வச்சிருக்கியா?"

"பெரிய புரோக்ராமேயிருக்குது. சித்திக்கு ஃபோன் போட்டு சொல்லிடு. ஜூஸ் சாப்பிடறியா?"

"சரி."

"முத்து. இரண்டு ஜூஸ் கொண்டு வா."

உள்ளே குரல் கொடுத்தான்.

சிறிது நேரத்தில் உள்ளேயிருந்து ஒரு

**பிருதிவிராஜ்**

சின்னப் பையன் வெளிப்பட்டான்.

"யாருடாயிது?"

"நம்மூர்லேயிருந்து ஒரு சின்னப் பையனை எடுபிடி வேலைக்குப் பிடிச்சுட்டு வந்தேன்."

கதைகள் பேச ஆரம்பித்தார்கள்.

"நம்மூருக்கும் கனடாவிற்கும் வித்தியாசத்தை எப்படி உணருகிறாய்?" என்று கேட்டான் சரவணன்.

சுந்தர் கொஞ்சம் யோசித்துப் பார்த்தான். குளிரா? அது எல்லோருக்கும் தெரிந்ததுதான். சுத்தமான நகரம், ஒழுங்கு படுத்தப்பட்ட போக்குவரத்து, புகையில்லாத காற்று... சொல்லலாம். நண்பர் வீட்டில் உட்கார்ந்து ஒரு டெலிபோன் பண்ணி மட்டுமே, புது டெலிபோன் கனெக்ஷன் கிடைத்த விஷயத்தைச் சொல்லலாம். கத்திரிக்காய், வாழைக்காய் வாங்குவது

போல் காரும், டீவியும் வாங்கியதைச் சொல்லலாம். இன்னும் நிறையச் சொல்லலாம். பலர் ஏற்கெனவே சொல்லியிருப்பார்கள். இதெல்லாம் பெரிய விஷயமில்லை. பொருளாதாரத்தில் முன்னேறிவிட்டால், எந்த நாட்டிற்குமே இவையெல்லாம் பெரிய விஷயங்களில்லை.

"ஒரு விஷயத்தில் ரொம்பப் பெரிய வித்தியாசத்தை உணர்ந்தேன்" என்றான் சுந்தர்.

"எது மேற்படி விஷயமா? சொல்லு. அதைக் கேட்கத் தானே காத்துக்கிட்டிருக்கேன்?" என்றான் சரவணன்.

சுந்தருக்கு சிரிப்பு வந்தது. வேறு எதையோ எதிர்பார்க்கிறான். சுந்தர் சொல்ல வந்தது அதுவல்ல. 'பொலைட்னஸ்' என்பதற்குத் தமிழ் வார்த்தை யோசித்தான். பண்பட்ட, பிறரிடம் பரிவு காட்டுகிற குணம். மிகப் பெரிய தமிழ் வார்த்தையாகத் தோன்றியது. ஆனால் இந்த 'பொலைட்னஸ்'தான் சுந்தரை மிகவும் கவர்ந்திருந்தது.

எந்த ஆபீஸ் போனாலும் பொறுமையாக, இனிமையாக பதில் சொன்னார்கள்.

கனடாவிலிறங்கிய முதல் நாளே பக்கத்திலிருந்த ஒரு வங்கிக்குப் போயிருந்தான். போனவுடன் ரிசப்ஷனில் உட்காரச் சொன்னார்கள். இவன் பார்க்கப் போன ஆபீசர், வந்து அவருடைய அறைக்குக் கூட்டிக் கொண்டு போனார். சுந்தர் அசந்தே போனான்.

அரசாங்க அலுவலகத்தில் இவனுடைய வருகையைப் பதிவு செய்யப் போன போதும், இதே அனுபவம்தான். அதுவும் இவன் ஃபாரத்தில் இரண்டு இடத்தில் தவறாக நிரப்பியிருந்ததையும், முகம் சுளிக்காமல் பொறுமையாக மாற்றினார்கள்.

"மிஸ்டேக் ஹாப்பன்ஸ்" என்று சிரித்தபடி சொன்னான்.

நம்மூரில் ஒரு சர்டிபிகேட்டிற்கு தாசில்தார் ஆபீஸில் அலையோ அலையென்று அலைந்தது ஞாபகம் வந்தது.

பஸ்ஸில் ஒரு முறை போய்க் கொண்டிருந்த போது, ஒரு பெரியவர் நிறுத்தத்தில் இறங்கத் திணறினார். டிரைவரே வண்டியை ஸ்டாப் கியரில் போட்டுவிட்டு, உதவி செய்ததைப் பார்த்தான்.

"யோவ், பெருசு! வூட்ல சொல்லிட்டு வந்துட்டியா" என்று கேட்கவில்லை. 'சாரி', 'தாங்க்யூ', 'எக்ஸ்க்யூஸ் மீ' போன்ற வார்த்தைகள் வாழ்க்கையில் அநாவசிய உரசல்களைத் தவிர்க்கின்றன.

"டைட்டானிக்கின் மிகப் பெரிய வெற்றிக்குக் காரணமென்ன தெரியுமா?"

ஒரு முறை, கூட வேலை செய்யும் ஜோ கேட்டான்.

"நல்ல கதை. பிரம்மாண்டம். டைரக்டர் கேம்ரூன், சின்னப் பெண்களை தியேட்டருக்குள் இழுக்கும் ஹீரோ லியோர்னடா காப்ரியோ..." என்று சுந்தர் லிஸ்ட் சொன்னான்.

"அதெல்லாமில்லை. போலி கௌரவங்களை விரும்பும் பிரிட்டிஷ் கலாசாரத்தைச் சாடுவதுதான்" என்றான் ஜோ. சுந்தருக்கு அது உண்மையாவென்று தெரியவில்லை. மனிதனை மனிதனாக மதிக்கக் கூடிய பண்பு வர வேண்டும்.



## கலைஞர் - 75

கலைஞர், வியர்வையால் விதியை எழுதிக் கொண்ட ஓர் இதயமுள்ள இயந்திரம். வாய்க்காலில் ஓடி வருகிற காட்டு வெள்ளம். கன்னித் தமிழ் இருக்கிறவரை இருக்கிற பெயர் கருணாநிதி. போராட்டத்தையே வாழ்க்கையாக்கிக் கொண்ட வரலாற்று மனிதரிவர். உழைப்புக்கு உயர்வு உண்டு என்பதற்கு இருபதாம் நூற்றாண்டின் இறுதி உதாரணம்.

**— வலம்புரி ஜான்**

●

கலைஞரை மூன்றாகப் பிரித்துப் பார்க்க வேண்டும். அரசியல்வாதி, இலக்கியவாதி, சமுதாய சீர்திருத்தவாதி.

– அரசியல்வாதி கலைஞர் வெற்றி பெற்றிருக்கிறார்.

– இலக்கியவாதி கலைஞர் ஓரளவு முத்திரையைப் பதித்திருக்கிறார்.

– சமுதாய சீர்திருத்தவாதி கலைஞர் வெற்றி பெறவில்லை.

விடா முயற்சியும், தளரா உழைப்புமே இவரது அரசியல் வெற்றிக்கு உறுதுணையாக நின்றவை. வரலாற்றில் தனி மனிதன் பாத்திரத்திற்கு எல்லை உண்டு. அந்த எல்லையை அவர் எட்டியிருக்கிறார்.

**— டாக்டர் கிருஷ்ணசாமி**

(புதிய தமிழகம்)



இதையெல்லாம் சுந்தர் சொல்லிக் கொண்டிருந்தான். சரவணன் கொட்டாவி விட்டான்.

"ஏண்டா அறுக்கறே. என் கூட வா. ஒரு நல்ல பார்ட்டிக்குக் கூட்டிட்டுப் போகிறேன்."

சுந்தர், சரவணனுடன் பார்ட்டிக்கு போனான். பார்ட்டியில் எல்லோரும் இளைஞர்களாக இருந்தார்கள். மேல் நாட்டு மது வகைகள் தாராளமாகப் பரிமாறப்பட்டன. உடல் ஆரோக்கியத்தின் கீழ் வரவேண்டிய சிகரெட்டும், தண்ணியும் இங்கு ஒழுக்கத்தின் கீழ் வந்து விட்டது. அதனாலேயே அது கட்டுப்பெட்டித்தனமாய்ப் போய்விட்டது. வேகமுள்ள இளைஞர்கள் அதை உடைக்க நினைக்கிறார்கள். அது ஒரு ஹீரோத்தனமாக மாறிவிட்டது.

ஆண்களும், பெண்களும் சேர்ந்து ஆடினார்கள். தாளலயம் எதுவுமில்லாமல், ஏதோ ஆட வேண்டுமென்று ஆடினார்கள். எதையோ சாதித்துவிட்ட சந்தோஷம் அவர்கள் முகத்தில் தெரிந்தது.

ஒரு வழியாக பார்ட்டி முடிந்தது.

சரவணன் முழு போதையிலிருந்தான்.

"பார்ட்டி எப்படியிருந்தது?"

"ம்."

"இன்னிக்கு இன்னும் இரண்டு ஃபிகருங்க வரலை. வந்திருந்தா இன்னும் சூப்பராகயிருந்திருக்கும். கலக்கல் பார்ட்டிங்க."

"மெட்ராஸ்லேயே இந்த மாதிரி பார்ட்டிங்க நடப்பது ஆச்சரியம்தான்."

"இதிலென்ன ஆச்சரியம்? இதைவிட ஒரு படி மேலே போகலாம். இங்க சில பழைய பஞ்சாங்கங்கள் உட்கார்ந்துகிட்டுக் கழுத்தறுக்கறாங்க. அந்த மாதிரி ஆளுங்களை அமெரிக்காவிற்கு இரண்டு மாசம் அனுப்பி வைக்கணும். அப்பத்தான் உலகம் எங்க போகுதுன்னு அவங்களுக்குப் புரியும். என்ன சொல்றே?"

சரவணன் பேசிக் கொண்டே வந்தான். சுந்தர் எதுவும் பேசவில்லை. வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள்.

சரவணன் காலிங் பெல்லை அடித்தான். கதவு திறக்கவில்லை. மீண்டும் அடித்தான்.

"இந்த முத்துப் பய தூங்கிட்டானா?"

"என்ன கேள்வி! ராத்திரி இரண்டு மணி, தூங்கியிருப்பான்" என்றான் சுந்தர்.

"மடையன்" என்று கோபமாய்ச் சொல்லி விட்டு, காலிங் பெல்லை ஓங்கி அமுக்கினான் சரவணன்.

கதவு திறந்தது. தூக்கக் கலக்கத்துடன் வேலைக்காரப் பையன் முத்து நின்று கொண்டிருந்தான்.

"ஏண்டா நாயே! கதவைத் திறக்க இவ்வளவு நேரமா?" என்றபடி அவனை ஒரு அறை விட்டான் சரவணன். விழுந்த அடியில் அந்தப் பையன் ஆடிப் போய் நின்றான்.

"அங்கெல்லாம் இந்த மாதிரி பொறுப்பில்லாம யாரும் இருக்க மாட்டாங்க இல்லியா?" என்று கேட்டபடி சரவணன் தள்ளாடிக் கொண்டே போனான். சுந்தர் அவனைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான். ●

## கலைஞர் - 75



அண்ணா அவர்கள் கூறியபடி மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும் என்ற கொள்கையின்படி 1972ம் ஆண்டில் மாநில திட்டக்குழு அமைத்தபோது அதில் இருந்த டாக்டர் ஆதிசேஷையா, டாக்டர் நடராஜன், டாக்டர் சண்முகசுந்தரம், நான் உட்பட யாருமே தி.மு.க. கட்சியை சார்ந்தவர்கள் அல்ல. 72 - 75 ஆண்டு திட்டக்குழு அங்கத்தினர் என்ற முறையில் அவருடன் நெருங்கி இருந்து மாநில முன்னேற்றத்திற்குச் செயல்பட்டது எனது நினைவில் பசுமையாக உள்ளது. மேலும் பல்லாண்டுகள் இருந்து நல்ல நிர்வாகியாக, சிறந்த எழுத்தாளராக, மதியூகியான அமைச்சராகச் செயல்பட அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வணங்கி வாழ்த்துகிறேன்.

— நா. மகாலிங்கம்

●

I don't want to talk about that gentleman!

— ஒரு முன்னாள் அ.தி.மு.க. அமைச்சர் (பெயர் வேண்டாமே!)



# பொன்னியின் செல்வன்



நாற்பத்தாறாம் அத்தியாயம்

## மக்களின் முணுமுணுப்பு

சோழகுல மூதாட்டியின் சந்நிதியிலிருந்து ஆழ்வார்க்கடியான் இளைய பிராட்டியின் மாளிகைக்குப் புறப்பட்டுச் சென்றான். வழியில் பழையாறை வீதிகளில் கண்ட காட்சிகள் அவனுக்கு மிக்க உற்சாகத்தை அளித்தன. கண்ணன் பிறந்த திருநாளை இந்த ஜனங்கள் எவ்வளவு குதூகலமாகக் கொண்டாடுகிறார்கள்? வைஷ்ணவம் இந்தச் சோழ நாட்டில் நிலைத்து நின்று பரவப் போகிறது என்பதில் ஐயம் இல்லை. சைவ சமயத்துக்கு இங்கே செல்வாக்குப் பெருகுவதற்குப் பல காரணங்கள் உண்டு. நூறு வருஷ காலமாகச் சோழ குலத்து மன்னர்கள் புதிய புதிய சிவாலயங்களை நாடெங்கும் நிர்மாணித்து வருகிறார்கள். மூவர் பாடிய தேவாரப் பாசுரங்கள் அக்கோயில்களின் மூலமாகப் பிரசாரம் செய்யப்பட்டு வருகின்றன. சிவாலயங்களில் தேர்த் திருவிழாக்கள் சிறப்பாக நடத்தப்படுகின்றன. இப்படியெல்லாமிருந்தும்; திருமாலின் பெருமைக்கு யாதொரு குறையும் ஏற்படவில்லை. விஷ்ணுமூர்த்தியின் ஒன்பதாவது பரிபூரண அவதாரமாகிய கண்ணன், மக்களின் இதயத்தைக் கவர்ந்து விட்டான். கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் வட மதுரையிலும் எம்பெருமான் நிகழ்த்திய லீலைகள் இவர்களுடைய உள்ளத்தில் குடிகொண்டு விட்டன. அம்மம்மா! எத்தனை பாகவத கோஷ்டிகள்! எத்தனை வீதி நாடகங்கள்! எத்தனை விதவிதமான வேஷங்கள்! – ஆம்; முன்




## கல்கி கலெக்ஷன்

## அமரர் கல்கி

ளம் நாம் பார்த்ததைக் காட்டிலும் இப்போது அதிகமாகவே இருந்தன. கோஷ்டிகளைச் சூழ்ந்து நின்று வேடிக்கை பார்ப்போரின் கூட்டமும் ஆரவாரமும் கூட அதிகமாகவே இருந்தன. பழையாறையைச் சுற்றிலுமிருந்த கிராமங்களிலிருந்து புதிய புதிய நாடக கோஷ்டியினர் வந்து கொண்டேயிருந்தார்கள்.

நாடக கோஷ்டி ஒன்றில் வஸுதேவர், தேவகி, கிருஷ்ணன் பலராமன், கம்ஸன் ஆகியவர்கள் வேஷம் தரித்துக் கொண்டு வந்தார்கள். பாட்டும், கூத்தும், வேஷக்காரர்களின் பேச்சும் இந்தக் கோஷ்டியில் அதிகமாயிருந்தபடியால் ஆழ்வார்க்கடியான் சற்று நின்று கவனித்தான். அப்போது கிருஷ்ணனுக்கும், கம்ஸனுக்கும் சம்வாதம் நடந்து கொண்டிருந்தது. கிருஷ்ணன் வேஷம் பூண்டிருந்தவன் சிறு பிள்ளை. அவன் மழலைச் சொல்லினால் கம்ஸன் செய்த குற்றங்களை எடுத்துக் கூறி, "வா, என்னோடு சண்டைக்கு!" என்று அழைத்தான். அதற்குக் கம்ஸன் உரத்த இடிமுழக்கக் குரலில், "அடே! கிருஷ்ணா! உன் மாயாவித்தனமெல்லாம் இனி என்னிடம் பலிக்காது. உன்னை இதோ கொல்லப் போகிறேன். உன் அண்ணன் பலராமனையும் கொல்லப் போகிறேன். உன் அப்பன் வஸுதேவனையும் கொல்லப் போகிறேன். அதோ நிற்கிறானே, உடம்பெல்லாம் சந்தனத்தைக் குழைத்து நாமமாகப் போட்டுக் கொண்டு – அந்த வீர வைஷ்ணவனையும் கொன்று விடப் போகிறேன்!" என்று கூறியதும், சுற்றிலும் நின்றவர்கள் எல்லாரும் நமது ஆழ்வார்க்கடியானைப் பார்த்துச் சிரிக்கத் தொடங்கினார்கள். கிருஷ்ணன், பலராமன் வேஷம் போட்டிருந்தவர்கள் கூட அவனை நோக்கினார்கள். கூட்டத்தில் பலர் அவனை நெருங்கி வந்து சூழ்ந்து கொண்டு 'கெக்கெக்கே' என்று சிரிக்கவும் கேலி செய்யவும் ஆரம்பித்தார்கள்.

திருமலை நம்பிக்குக் கோபம் பிரமாதமாக வந்தது. கையிலிருந்த தடியைச் சுழற்றி அக்கூட்டத்திலிருந்தவர்களை ஒரு கை பார்த்துவிடலாமா என்று எண்ணினான். முக்கியமாக, அந்தக் கம்ஸனுடைய தலையில் ஒரு போடு போட விரும்பினான். ஆனால் கம்ஸனுடைய தலையில் அடிப்பதில் பயனில்லை. ஏனெனில் அவனுடைய சொந்த முகத்தை மறைத்துக் கொண்டு மரத்தினால் செய்து கோரமான மீசையும் கோரைப் பற்களும் வைத்து வர்ணத்தினால் எழுதியிருந்த பொய்த் தலையைக் கம்ஸ வேடக்காரன் வைத்திருந்தான். மொத்தத்தில் இவ்வளவு பெரிய கூட்டத்தில் தடியை உபயோகிப்பது நல்லதல்ல என்று திருமலை தீர்மானித்து அவ்விடத்தை விட்டு நழுவிச் சென்றான். அந்தக் கம்ஸனுடைய குரல், – வேண்டுமென்று பெருங்குரலில் அவன் கத்தியபோதிலும் – எங்கேயோ கேட்ட குரலாக ஆழ்வார்க்கடியானுக்குத் தோன்றியது. அது எங்கே கேட்ட குரல் என்று யோசித்துக் கொண்டே அவன் வீதியோடு நடந்தான்.

ஜனங்களின் குதூகலத்தில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. போகப் போக, மக்களின் உற்சாகக் குறைவு தெளிவாகப் புலப்பட்டது. இது என்ன? திடீரென்று ஏன் இந்த மாறுதல்? ஜனக் கூட்டம் ஏன் இவ்வளவு விரைவாகக் கலைந்து கொண்டிருக்கிறது? வாத்திய முழக்கங்களும், ஆடல் பாடல் சப்தங்களும் நின்று விட்டன....! அதற்குப் பதிலாக ஜனங்கள் வீதி ஓரங்களில் ஒதுங்கிச் சிறு சிறு கும்பலாக நின்று என்ன இரகசியம் பேசுகிறார்கள்? பேசிவிட்டு ஏன் விரைந்து நடக்கிறார்கள்? வீட்டுக் கதவுகள் ஏன் தடால் என்று சாத்தப்படுகின்றன?

இதோ காரணம் தெரிகிறது. குந்தவைப் பிராட்டிக்குக் கூட உடல் நடுக்கத்தை உண்டுபண்ணிய பறை முழக்கமும், ஒற்றனைப் பிடித்துக் கொடுப்பது பற்றிய அறைகூவலும்தான் காரணம்.

இந்தப் பறை முழக்கம் அவ்வளவு தூரம் திருவிழாக் கொண்டாட்டத்துக்காகக் கூடியிருந்த மக்களின் குதூகலத்தைப் பாழ்படுத்தி விட்டது. தனியாகப் போகிறவர்களை மற்றவர்கள் உற்றுப் பார்த்துக் கொண்டு போனார்கள்! தெரியாத வேற்று முகங்களையெல்லாம் சந்தேகத்துடன் பார்த்தார்கள். ஆழ்வார்க்கடி

யானைக் கூடச் சிலர் அவ்விதம் ஐயப் பாடு உள்ள பார்வையுடன் பார்த்துவிட்டு அவசரமாக மேலே சென்றார்கள்.

இதன் காரணத்தைத் திருமலை ஊகித்து அறிந்து கொண்டான். அது மட்டும் அல்ல. ஜனங்கள் சிறு சிறு கும்ப லாக வீதி ஓரங்களில் நின்று பேசுவது என்னவென்பதும் அவனுக்கு ஒருவாறு ஊகத்தினால் தெரிந்திருந்தது. காதில் விழுந்த சிற்சில வார்த்தைகளினால் அது உறுதியாயிற்று.

பழுவேட்டரையர்களின் கொடுங் கோல் ஆட்சியைப் பற்றியே அந்த



ஜனங்கள் பேசினார்கள். பழையாறை நகர மாந்தருக்கும் சுற்றுப்புறத்துக் கிராமவாசி களுக்கும் பழுவேட்டரையர்களின் பேரில் கோபம் இருப்பது இயற்கைதான்.

"பழையாறை நகர்ச் சுந்தர சோழரை யாவரொப்பார்கள் இத்தொன்னிலத்தே!"

என்று கவிவாணர்களினால் புகழ்ந்து பாடப்பட்ட சக்கரவர்த்தியைப் பழை யாறையிலிருந்து அவர்கள் தஞ்சைக்குக் கொண்டு போய் விட்டார்கள் அல்லவா? அதுமுதல் பழையாறையின் சிறப்பு நாளுக்கு நாள் குறைவுபட்டு வருகிறதல் லவா? இன்றைக்கு இந்தக் கிருஷ்ண ஜயந்தி விழாவன்று சக்கரவர்த்தி மட்டும் இந்நகரில் இருந்தால், இன்னும் எவ்வளவு கோலாகலமாக இருக்கும்? கண்ணன் கதை சம்பந்தமான வேடம் புனைந்து வரும் நாடக கோஷ்டிகள் எல்லாம் நகரத் தின் வீதிகளில் சுற்றி விட்டுச் சக்கரவர்த்தி யின் அரண்மனை முற்றத்தில் வந்து கூடும் அல்லவா? நடிகர்களுக்கும் பாட்டில் வல்லவர்களுக்கும் பாணர்களுக்கும் பாடினிகளுக்கும் புலவர்களுக்கும் சக்கர வர்த்தி வெகுமதி அளிப்பார் அல்லவா? சோழ நாடே பழையாறைக்குத் திரண்டு வந்து விட்டது என்று கூறும்படி ஜனத்திரள் சேர்ந்திருக்கும் அல்லவா! கடை கண்ணிகளில் வியாபாரம் இதை விட நூறு மடங்கு அதிகம் நடந்திருக்கும் அல்லவா? இரவு நந்திபுர விண்ணகரக் கோவிலிலிருந்து வேணுகோபால சுவாமி புறப்பட்டு வீதி வலம் வரும்போது எவ் வளவு மேளமும் தாளமும் ஆட்டமும் பாட்டமும் சிலம்ப விளையாட்டுக்களும் கத்திச் சண்டைகளும் தமிலோகப்படும்?

அவ்வளவும் இந்தப் பழுவேட்டரையர் களினால் இல்லாமற் போய் விட்டது.

இதைத் தவிர இன்னொரு பெருங் குறையும் பழையாறை மக்களின் உள்ளங் களில் குடிகொண்டிருந்தது. அவர்களு டைய கண்ணுக்குக் கண்ணான இளவர சர் அருள்மொழிவர்மர் கடல் கடந்து சென்று இலங்கைத் தீவில் போர் புரிந்து வருகிறார். பழையாறையின் நாலு படை வீட்டுப் பகுதிகளையும் சேர்ந்த பதினா யிரம் வீரர்கள் இளவரசர் தலைமையில் ஈழநாடு சென்றிருக்கிறார்கள். காடும் மலையும் நிறைந்த அந்நாட்டில் தமிழகத் தின் மானத்தையும் வீரப் பண்பையும் நிலைநாட்டுவதற்காக அவர்கள் போர் புரிந்து வருகிறார்கள். கொடும்பாளூர் இளங்கோ அந்த ஈழநாட்டுக்குப் படை யெடுத்துச் சென்று போர்க்களத்தின் முன்னிலையில் நின்று, மார்பில் வேலைத் தாங்கி உயிரை விடவில்லையா? எஞ்சி யிருந்த சோழ வீரர்கள் அத்தனை பேரும் இறுதிவரை போரிட்டு மடியவில்லையா?



அப்படி இறந்தவர்களின் ஆவிகள் அமைதியுறும் பொருட்டு மீண்டும் புலிக் கொடியின் வெற்றியை அந்த ஈழத் தீவில் நிலைநாட்டுவதற்காகவே இளவரசர் அருள்மொழித் தேவர் சென்றிருக்கிறார். அவருடைய தலைமையில் போரிடும் நம் வீரர்களுக்கு இந்தப் பழுவேட்டரையர்கள் உணவும் துணியும் பணமும் ஆயுதமும் அனுப்ப மறுக்கிறார்களாமே? இது என்ன அநியாயம்? இப்படியும் உண்டா? தஞ்சாவூர்க் கோட்டையில் உள்ள தானியக் களஞ்சியங்களில் ஏராளமாக நெல்லை நிரப்பி வைத்திருக்கிறார்களே? அவ்வளவும் என்னத்திற்கு? நூறு ஆண்டு காலமாக அரண்மனைப் பொக்கிஷங்களில் சேர்ந்திருக்கும் பணந்தான் எதற்கு? இந்தச் சமயத்தில் நம்முடைய வீரர்களுக்குப் பயன்படாத தனமும் தானியமும் என்னத்திற்கு? எல்லாவற்றையும் இந்தப் பழுவேட்டரையர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? சாகும்போது யமலோகத்திற்குத் தங்களுடன் கொண்டு போகப் போகிறார்களா...?

இப்படியெல்லாம் சில காலமாகவே சோழ நாட்டு மக்கள் முணுமுணுத்துக் கொண்டிருந்தது திருமலை நம்பிக்குத் தெரிந்திருந்த விஷயந்தான். அதிலும், பழையாறை மக்களுக்கு இது விஷயமாகக் கோபம் அதிகமாக இருப்பதும் இயற்கையே. ஈழநாட்டுப் போர்க்களத்துக்குச் சென்றிருக்கும் பதினாயிரம் வீரர்களின் பெண்டு பிள்ளைகளும் உற்றார் உறவினரும் இந்த மாநகரில் இன்னும் வசித்து வருகிறார்கள் அல்லவா?

ஆகவே, பழுவேட்டரையர்களின் கட்டளையின் பேரில், குற்றம் செய்து விட்ட ஒற்றனைப் பற்றிப் பறைமுழங்கி



இருக்கிறது! நியாயம் அநியாயம் எது வேணுமானாலும் செய்வார்கள்! ஒற்றன் என்ற பட்டத்தைச் சூட்டி விட்டால், ஊர்ப் பஞ்சாயத்துக்களைக் கூடக் கேட்க வேண்டியதில்லை அல்லவா...?

இப்படியெல்லாம் பழையாறை மக்கள் மனத்தில் நினைத்ததையும் வாயினால் முணுமுணுத்ததையும் ஒருவருக்கொருவர் மெல்லிய குரலில் பேசிக் கொண்டதையும் ஆழ்வார்க்கடியான் செவிப் புலன் வழியாகவும் மதி ஊகத்தினாலும் தெரிந்து கொண்டான்.

இவ்வாறு மக்களின் மனத்தில் புகைந்து வரும் அதிருப்தி எதில் போய் முடியப் போகிறதோ என்று சிந்தித்துக் கொண்டே குந்தவை தேவியின் மாளிகையை அடைந்தான்.

ஆழ்வார்க்கடியானிடம் உலக நடப்பைக் குறித்துப் பேசுவதில் இளையபிராட்டிக்கு எப்போதும் விருப்பம் உண்டு. நாடு நகரமெல்லாம் திரிந்து அவன் ஆங்காங்கு நடக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வருவான். அதையெல்லாம் அறிந்து கொள்ளுவதில் அரசிளங்குமரி ஆவல் கொண்டவள். அவன் தேடிக் கொண்டு வந்து பாடிக் காட்டும் ஆழ்வார் பாசுரங்களைக் கேட்பதிலும் இளைய பிராட்டிக்குப் பிரியம் உண்டு. ஆகையால் திருமலை நம்பி எப்போது வந்தாலும் ஆர்வத்துடன் வரவேற்பாள். முகமலர்ச்சியுடன் அவனிடம் யோக க்ஷேமங்களைப் பற்றி விசாரிப்பாள்.

ஆனால் இன்றைக்கு இளவரசியின் முகபாவத்திலும் பேச்சிலும் சிறிது மாறுதல் தோன்றியதை ஆழ்வார்க்கடியான் கண்டான். மனது எங்கேயோ எதிலேயோ ஈடுபட்டிருப்பதைக் காட்டும் முகபாவம்; பேச்சில் இயற்கைக்கு மாறான ஒரு பரபரப்பு! கொஞ்சம் தடுமாற்றம்.

"திருமலை! என்ன விசேஷம்? எங்கே வந்தாய்?" என்று குந்தவை கேட்டாள்.

"விசேஷம் ஒன்றுமில்லை, தாயே! வழக்கம் போல் தாங்கள் உலக நடப்பைக்

அறைகூவியதைப் பழையாறை மக்கள் விரும்பவில்லை. பழுவேட்டரையர்கள் மீது தங்களுக்குள்ள குறைகளைப் பற்றிப் பேசிக் கொள்வதற்கு அது ஒரு காரணமாயிற்று. ஒற்றனாம் ஒற்றன்! எந்த நாட்டிலிருந்து ஒற்றன் இங்கே வந்து விடப் போகிறான்! குமரி முனையிலிருந்து வடபெண்ணை வரையில்தான் புலிக் கொடி பறந்து வருகிறதே! ஒற்றனை அனுப்பும்படியாக வேற்றரசன் யார் அவ்வளவு பலசாலியாக இருக்கிறான்? இந்தப் பழுவேட்டரையர்களுக்குப் பிடிக்காதவன் யாராவது இருந்தால் அவன் பேரில் ஒற்றன் என்று குற்றம்சாட்டி வேலை தீர்த்து விடுவார்கள்! அல்லது பாதாளச் சிறையில் தள்ளி விடுவார்கள்... இருந்தாலும் நமக்கென்னத்துக்கு வம்பு? அதிகாரம் அவர்களுடைய கையில்

குறித்து விசாரிப்பதற்கு, வரச் சொன்ன தாக நினைத்துக் கொண்டு வந்தேன். மன்னிக்க வேண்டும். போய் வருகிறேன்."

"இல்லை, இல்லை! கொஞ்சம் இருந்து விட்டுப் போ! நான்தான் உன்னை வரும்படி சொன்னேன்..."

"தாயே! சொல்ல மறந்து விட்டேன்! சற்று முன் பெரிய பிராட்டியின் சந்நிதியில் இருந்தேன். தங்களிடம் ஏதோ முக்கியமான செய்தி சொல்ல வேண்டுமாம். தங்களை வரும்படி சொல்லச் சொன்னார்கள்...."

"ஆகட்டும்; நானும் போகத்தான் எண்ணியிருக்கிறேன். நீ இந்தப் பிரயாணத்தில் எங்கெங்கே போயிருந்தாய்? அதைச் சொல்லு!"

"தென்குமரியிலிருந்து வட வேங்கடம் வரையில் போயிருந்தேன்."

"போன இடங்களில் ஜனங்கள் என்ன பேசிக் கொள்ளுகிறார்கள்?"

"சோழ குல மன்னர் குலத்தின் பெருமையைப் பற்றிப் பேசிக் கொள்கிறார்கள். இன்னும் சில காலத்தில் வடக்கே கங்கா நதி வரையிலும், ஹிமோத்கிரி வரையிலும் சோழ மகாராஜ்யம் பரவி விடும் என்று பேசிக் கொள்கிறார்கள்...."

"அப்புறம்?"

"பழுவேட்டரையர்களின் வீரப் பிரதாபங்களைப் பற்றியும் பாராட்டிப் பேசுகிறார்கள். சோழ சாம்ராஜ்யம் இவ்வளவு உன்னத நிலைமையை அடைந்ததற்குக் காரணமே பழுவூர்ச் சிற்றரசர்களின்...."

"போதும், இன்னும் என்ன சொல்லுகிறார்கள்?"

"தங்களுடைய சகோதரர்கள் இருவரையும் பற்றி ஆசையோடு பேசிக் கொள்கிறார்கள். முக்கியமாக இளவரசர் அருள்மொழிவர்மர் மீது குடிமக்களுக்கு இருக்கும் அன்பையும் ஆதரவையும் சொல்லி முடியாது."

"அதில் ஒன்றும் வியப்பில்லைதான்! இன்னும் ஏதேனும் பேச்சு உண்டா?"

"சோழ மகா சக்கரவர்த்தியின் திருக்குமாரிக்கு ஏன் இன்னும் திருமணம் ஆகவில்லையென்று பேசிக் கொள்கிறார்கள். என்னைக் கூடப் பலரும் கேட்டார்கள்..."

"நீ என்ன மறுமொழி சொன்னாய்?"

"எங்கள் இளையபிராட்டியை மணந்து கொள்ளத் தகுதிவாய்ந்த அரசகுமாரன் இன்னும் இந்தப் பூவுலகில் பிறக்கவில்லை என்று சொன்னேன்..."

"அழகாயிருக்கிறது! இனிமேல் அப்படிப்பட்டவன் பிறக்க வேண்டுமாக்கும்! அவன் பிறந்து கல்யாண வயதை அடைவதற்கு முன்னால் நான் கிழப்பாட்டி ஆகிவிடுவேன்! என் விஷயம் இருக்கட்டும் திருமலை! வேறு ஏதாவது பேச்சு உண்டா?"

"ஏன் இல்லை? சிவஞான யோகீசுவரராகப் போவதாய்ச் சொல்லிக் கொண்டிருந்த மதுராந்தகத் தேவர் திடீரென்று கலியாணம் செய்து கொண்டதைப் பற்றிப் பலரும் ஆச்சரியப்படுகிறார்கள்...."

"உன் அருமைச் சகோதரி... ஆண்டாளைப் போன்ற பக்த சிரோமணி ஆகப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தாயே.... அவள் இப்பொழுது எப்படியிருக்கிறாள்?"

"அவளுக்கு என்ன குறைவு தாயே! பெரியபழுவேட்டரையரின் அரண்மனையில் சர்வாதிகாரிணியாக ஆட்சி செலுத்தி வருகிறாள்..."

"பழுவேட்டரையரின் அரண்மனையில் மட்டும்தானா? இந்தச் சோழ ராஜ்யத்துக்கே அவள்தான் சர்வாதிகாரிணி என்றல்லவா கேள்விப்பட்டேன்...!"

"அப்படியும் சிலர் பேசிக் கொள்கிறார்கள் தாயே! ஆனால் அவளை விட்டுத் தள்ளுங்கள். இந்த நல்ல நாளில் அவளுடைய பேச்சு எதற்கு? தாங்கள் 'ஆண்டாள்' பெயரைக் குறிப்பிட்டதால், எனக்கு ஒன்று ஞாபகம் வருகிறது. ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போயிருந்தேன். பட்டர் பிரான் விஷ்ணு சித்தரின் பாடல்கள் சிலவற்றைத் தெரிந்து கொண்டேன். இதைக் கேளுங்கள். அம்மா! கண்ணன் பிறந்த திருநாளைப் பற்றிய பாடல்:-

**'வண்ண மாடங்கள் சூழ்திருக்**

**கோட்டியூர்**

கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தன நாயிற்றே!
ஓடுவார் விழுவார் உகந்தாலிப்பார்
நாடுவார் நம்பிரான் எங்குற்றான் என்பார்
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே!

இன்றைக்கு நம் பழையாறை நகரமும் ஆயர்பாடி போலவே ஒரே குதூகலமாயிருக்கிறது, தாயே!''

''குதூகலமாயிருக்கிறது சரிதான்; ஆனால் சற்று முன்னால் வேறொரு விதமான பறை கொட்டிற்றே, அது என்ன திருமலை?''

இந்தக் கேள்விக்காகவே ஆழ்வார்க்கடியான் காத்துக் கொண்டிருந்தான்.

''யாரோ ஒற்றனாம்! தப்பித்துக் கொண்டானாம்! அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்குப் பரிசு கொடுப்பார்களாம்! அதையெல்லாம் பற்றி நான் என்ன கண்டேன், தாயே!''

"உனக்கு ஒன்றும் தெரியாதா? யாராயிருக்கும் என்பது பற்றிச் சந்தேகம் கூட இல்லையா?''

"மனத்தில் ஒரு சந்தேகம் இருக்கிறது. ஆனால் அதைப் பற்றிப் பேசுவது அபாயம். தெரு வீதியில் நான் நடந்து வந்த போது என்னைக் கூடச் சிலர் முறைத்துப் பார்த்துக் கொண்டு போனார்கள். என்னை யாரேனும் பிடித்துக் கொண்டு போய்ப் பாதாளச் சிறையில் போட்டு விட்டால்...?''

"உன்னைப் பிடிப்பதற்குத் தலையில் கொம்பு முளைத்தவர்களாயிருக்க வேண்டும்! உன் மனத்தில் தோன்றியதை என்னிடம் சொல்லலாம் என்றால் சொல்! நான் உன்னைக் காட்டிக் கொடுத்து விடுவேன் என்ற எண்ணம் இல்லையே?''

"கிருஷ்ணா! கிருஷ்ணா! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. வீர நாராயண புரத்தில் ஒரு வீர வாலிபனைப் பார்த்தேன். அவன் தஞ்சாவூர் போகிறதாகச் சொன்னான். எதற்காகவென்று சொல்லவில்லை. என்னைப் பல கேள்விகள் கேட்டான்...''

குந்தவை பரபரப்புடன், ''அவன் எப்படியிருந்தான்?'' என்றாள்.

''பெரிய குலத்தில் பிறந்தவனைப் போல் காணப்பட்டான். முகம் களையாயிருந்தது. ஊக்கமும் உள்வலியும் கொண்டவன் என்று தெரிந்தது....''

"உன்னிடம் என்ன கேட்டான்?''

"சக்கரவர்த்தியின் உடல் நிலைமையைப் பற்றிக் கேட்டான். அடுத்தபடி பட்டத்துக்கு வர வேண்டியவரைப் பற்றிக் கேட்டான். இலங்கை சென்றிருக்கும் இளவரசரைப் பற்றிக் கேட்டான். பிறபாடு, குடந்தை ஜோதிடரிடமும் அதே கேள்விகளைக் கேட்டதாக அறிந்தேன்...''

"ஆகா! குடந்தை ஜோதிடர் வீட்டுக்கு அவன் வந்திருந்தானா?''

''இப்போது ஞாபகம் வருகிறது. தாங்கள் ஜோதிடரின் வீட்டில் இருந்த போதே அவன் தடபுடல் செய்து கொண்டு உள்ளே வந்து விட்டானாம். நல்லவேளையாகத் தங்களை அவன் தெரிந்து கொள்ளவில்லையாம்....!''

''நான் நினைத்தது சரியாய்ப் போயிற்று...''

"என்ன தாயே நினைத்தீர்கள்?''

"அந்த முரட்டு வாலிபனுக்குச் சீக்கிரம் ஏதாவது ஆபத்து வரலாம் என்று நினைத்தேன்...''

''தாங்கள் நினைத்தது சரிதான். அவன்தான் ஒற்றன் என்று சந்தேகிக்கிறேன். அவனைப் பிடிப்பதற்குத்தான் பழுவேட்டரையர்கள் பரிசு கொடுப்பதாகப் பறையடித்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது.''

"திருமலை! எனக்கு ஓர் உதவி செய்வாயா?''

"கட்டளையிடுங்கள் தாயே!''

"அந்த வாலிபனை நீ எப்போதாவது பார்க்க நேர்ந்தால்..."

"பிடித்துக் கொடுத்துப் பரிசு பெற்றுக் கொள்ளட்டுமா?"

"வேண்டாம், வேண்டாம்! என்னிடம் அழைத்துக் கொண்டு வா! அவனிடம் எனக்கு முக்கியமான காரியம் ஒன்று இருக்கிறது!"

ஆழ்வார்க்கடியான் அதிசயம் அடைந்தவனைப் போல் சிறிது நேரம் குந்தவைப் பிராட்டியைப் பார்த்துக் கொண்டு நின்றான். பின்னர், "அதற்கு அவசியம் ஏற்படாது, தாயே! நான் அவனைத் தேடிப் பிடித்து வர அவசியம் நேராது. அவனே தங்களைத் தேடிக் கொண்டு வந்து சேர்வான்!" என்றான்.



நாற்பத்தேழாம் அத்தியாயம்

## ஈசான சிவபட்டர்

ஆழ்வார்க்கடியான் அரசிளங்குமரியைப் பார்த்துவிட்டு, அவனுடைய தமையனார் ஈசான சிவ பட்டரின் வீட்டுக்குச் சென்றான். அவருடைய வீடு வடமேற்றளி சிவன் கோயிலுக்கு மிக அருகில் இருந்தது. அரண்மனையி லிருந்து அரைக் காத தூரம் இருக்கும். சோழ மாளி



கையிலிருந்து வடமேற்றளி ஆலயத்துக்குப் போனால், பழையாறு நகரின் விஸ்தீரணத்தையும் அதன் மற்றச் சிறப்புக்களையும் ஒருவாறு அறியலாம்.

கிருஷ்ண ஜயந்திக் கொண்டாட்டங்கள் எல்லாம் ஒருவாறு அடங்கி விட்டன என்பதை ஆழ்வார்க்கடியான் பார்த்துக் கொண்டு போனான். வீட்டுப் பகுதிகளின் வழியாகச் சென்றபோது ஸ்திரீகள் அங்கங்கே வீட்டு ஓரங்களில் கூடி நின்று கோபமாகப் பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டு போனான். அந்த ஸ்திரீகள் அனைவரும் தத்தம் கணவர்கள் அல்லது புதல்வர்களின் கழுத்தில் வஞ்சிப் பூமாலை அணிவித்து உற்சாகமாக ஈழத்துப் போர் முனைக்கு அனுப்பியவர்கள். நாலு திசைகளிலும் சோழ சைன்யங்கள் நடத்திய வீரப் போர்களில் யாராவது ஒரு வீரன் அந்த ஒவ்வொரு வீட்டிலிருந்தும் சென்று வீர சொர்க்கம் அடையாமலிருந்தது கிடையாது. அப்படிப்பட்ட பெண்கள் இப்போது அதிருப்தியுடன் முணுமுணுத்துப் பேசிக் கொண்டிருந்ததைத் திருமலையப்பன் பார்த்தான். இதெல்லாம் என்ன விபரீதத்தில் போய் முடிகிறதோ என்று கவலைப்பட்டுக் கொண்டே சென்றான்.

வடமேற்றளி கோயிலை அவன் அடைந்தபோது நன்றாக இருட்டிவிட்டது. அப்பர் பெருமானால் பாடப் பெற்ற கோயில் இதுதான். அந்த மகானுடைய காலத்தில் இக்கோயிலைச் சுற்றிச் சமணர்கள் செயற்கைக் குன்றுகளை எடுத்து, அந்தக் குன்றுகளில் முழைகளை அமைத்திருந்தார்கள். அப்படி ஏற்பட்ட செயற்கை மலைக் குகைகளில் திகம்பர சமணர்கள் உட்கார்ந்து தவம் செய்து கொண்டிருந்தார்கள். இதை நமக்கு ஞாபகப்படுத்துவதற்காக இன்றைக்கும் பழையாறைக்கு அருகில் முழையூர் என்று ஓர் ஊர் இருக்கிறது.

அப்பர் பெருமான் பழையாறை ஸ்தல மகிமையைப் பற்றிக் கேள்விப்பட்டு அங்கு வந்து சேர்ந்தபோது சமணர்களின் முழைகள் சிவன் கோயிலை அடியோடு மறைத்திருந்தன. இதை ஆத்ம ஞானத்தினால் அறிந்த அப்பர் மனம் வருந்தினார். பல்லவர்களின் பிரதிநிதியாக அச் சமயம் சோழ நாட்டைப் பரிபாலித்து வந்த சிற்றரசனிடம் முறையிட்டார். அரசன் அந்தச் செயற்கை முழைகளில் ஒரு பகுதியை இடித்து அப்புறப்படுத்தினான். உள்ளே சிறிய சிவன் கோயில் இருப்பது தெரிந்தது. அப்பர் பரவசமடைந்து பாடினார்.

அந்தக் கோயில் பிற்பாடு சோழ மன்னர்களால் சிறப்படைந்து கற்றளியாகக் கட்டப்பட்டது. ஆனால் இன்னமும் கோயிலைச் சுற்றிலும் முழைகள் சூழ்ந்து பிராகாரச் சுவர் போல் அமைந்திருந்தன. கோயிலுக்குள் பிரவேசிப்பதற்குக் கோபுர வாசல் ஒன்றுதான் இருந்தது. வேறு வாசலே கிடையாது.

கோபுர வாசல் வழியாகக் கோயில் பிராகாரத்துக்குள் சென்று, ஈசான சிவ பட்டரின் வீட்டைச் சுலபமாக அடையலாம். இல்லாவிட்டால் சுற்றி வளைத்துக் கொண்டு போக வேண்டும்.

இப்படித் தன் தமையனாரின் வீட்டைக் குறுக்கு வழியில் அடைவதற்காகத் திருமலை கோபுர வாசலுக்குள் நுழைந்தான். உள்ளே சுவாமி சந்நிதியில் சில அடியார்கள் நிற்பது தெரிந்தது. அவர்கள் கிருஷ்ணனைப் போல வேஷந்தரித்து வந்த கோஷ்டியார் என்று தோன்றியது. "ஆகா! இவர்கள் எங்கே இங்கு வந்து சேர்ந்தார்கள்!" என்று அவன் எண்ணமிடுவதற்குள், ஈசான சிவ பட்டர் கோயிலுக்குள்ளேயிருந்து அவசரமாக வெளியேறி வந்தார். அப்போதுதான் கோபுர வாசலுக்குள் நுழைந்திருந்த திருமலையின் கையைப் பிடித்துப் பரபரவென்று வெளியில் இழுத்துச் சென்றார்.

"அண்ணா! இது என்ன?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"சொல்லுகிறேன் திருமலை! இனிமேல் நம்முடைய உறவெல்லாம் கோவிலுக்கு வெளியே இருக்கட்டும். நீ பதிதன்; சிவ நிந்தனை செய்யும் சமயப் பிரஷ்டன்; இந்தச் சிவாலயத்திற்குள் நீ அடியெடுத்து வையாதே! தெரிகிறதா? நானும் எத்தனையோ பொறுத்திருந்தேன். இன்றைக்குப் பெரிய மகாராணியின் முன்னால் நீ

பேசியதை என்னால் சகிக்க முடிய வில்லை. வீட்டுக்கு வேண்டுமானால் வந்து உன் பெரிய வயிற்றை நிரப்பிக் கொண்டு போ! ஆனால் கோவிலுக்குள் அடி எடுத்து வைக்காதே! அடி வைத்தால் நான் சண்டேசுவர நாயனார் ஆகி விடுவேன்!"

இவ்வாறு சொல்லி ஈசான சிவபட்டர் திருமலையின் கழுத்தைப் பிடித்து ஒரு தள்ளுத் தள்ளி விட்டு, கோயில் கதவைப் படார் என்று சாத்தினார். "அண்ணா! அண்ணா!..." என்று திருமலை ஏதோ சொல்ல ஆரம்பித்ததை ஒருகணமும் காது கொடுத்துக் கேட்காமல் கோவில் கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு போய் விட்டார்.

"ஓகோ! அப்படியா சமாசாரம்?" என்று ஆழ்வார்க்கடியான் முணுமுணுத்துக் கொண்டான். சற்று நேரம் அங்கேயே நின்றான். பிறகு, அச்சிவனார் கோவிலை, சமணர் முழைகள் உள்பட, இரண்டு மூன்று தடவை சுற்றி வந்தான். வலப் புற மாய்ச் சென்றால் பிரதட்சிணம் செய்த தாகி விடும் என்று வேண்டுமென்றே இடதுபுறமாகச் சுற்றி வந்தான். வட்ட வடிவமாக அமைந்திருந்த செய்குன்று களில் சமணர் முழை வாசல்கள் எல்லாம் நன்கு அடைக்கப்பட்டிருப்பதைப் பார்த் தான். பின்னர், ஈசான சிவபட்டரின் வீடு சென்றான். வேடிக்கை வேடிக்கையாகப் பேசும் திருமலையிடம் பட்டரின் மனை யாளுக்கு மிக்க பிரியம். அந்த அம் மாளிடம் வழக்கத்தை விட வேடிக் கையாகப் பேசி, வயிறு நிறையச் சிவன் கோயில் பிரசாதத்தைச் சாப்பிட்டு விட்டு, வாசல் திண்ணையில் வந்து படுத்தான்.

முதல் நாள் குடமுருட்டி நதிக்கரை யோடு வந்தபோது அவன் கண்ட காட்சி ஒன்று நினைவு வந்தது.

அவனுக்கு எதிர்த் திசையில் சில குதி ரைகள் வேகமாக வரும் சப்தம் கேட்டுப் பக்கத்தில் அடர்த்தியாக இருந்த மூங்கில் புதர்களுக்குப் பின்னால் மறைந்து கொண்டு நின்றான்.

முதலில் வந்த குதிரை தறிகெட்டு ஓடி வருவது போல் ஓடி வந்தது. அது சொட் டச் சொட்ட நனைந்திருந்தது. வியர்வையினாலா, நதி வெள்ளத்தில் முழுகி வந்ததினாலா என்று தெரிய வில்லை. அக்குதிரையின் பேரில் ஒரு சிறு பிள்ளை உட்கார்ந்திருந்தான். அவனைக் குதிரையோடு சேர்த்துக் கட்டியிருந்தது. அந்தப் பிள்ளையின் முகத்தில் பீதியும், அத்துடன் ஓர் உறுதியும் சேர்ந்து காணப் பட்டன. சற்றுப் பின்னால் இன்னும் நாலைந்து குதிரைகள் வந்தன. அவற்றின் மீது வேல் பிடித்த வீரர்கள் வந்தார்கள். சீக்கிரத்தில் பிடித்து விடுவார்கள் என்று தோன்றியது. அவர்களில் ஒருவன் தன்னு டைய வேலாயுதத்தைத் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்து முன்னால் வந்த குதிரை மேல் எறிவதற்குக் குறி பார்த்தான். இன் னொருவன் அதைத் தடுத்தான்.

அச்சமயத்தில் அந்தப் பிள்ளை அடர்ந்த மூங்கில் புதர்களுக்குக் கீழே போக வேண்டியிருந்தது. சற்று வளைந்து தாழ்ந்திருந்த மூங்கில் மரக்கிளை ஒன்று அவனுடைய தலை மயிரில் சிக்கிக் கொண்டது. குதிரை முன்னால் இழுக் கவும் அந்தப் பிள்ளையின் கதி என்ன ஆகுமோ என்று இருந்த நிலையில் பின் னால் வந்தவர்கள் அக்குதிரையை வந்து பிடித்துக் கொண்டார்கள்.

குதிரை மீது வைத்துக் கட்டியிருந்த பிள்ளையைப் பார்த்து வியப்பும் திகைப் பும் கோபமும் அடைந்தார்கள். ஏதோ அவனைக் கேட்டார்கள். அவன் தட்டுத் தடுமாறி மறுமொழி சொன்னான். விவர மாக ஆழ்வார்க்கடியான் காதில் விழ வில்லை. ''அவன் எங்கே?'' ''அவன் எங்கே?'' என்று அடிக்கடி பலமுறை கேட்ட கேள்வி காதில் விழுந்தது. அந்த இளம்பிள்ளை "ஆற்றோடு போய் விட் டான்!" "வெள்ளத்தில் விழுந்து விட் டான்!" என்று விம்மி அழுது கொண்டே சொன்னதும் காதில் விழுந்தது. பிறகு அவ்வீரர்கள் அந்தப் பையனையும் குதிரையையும் தங்களுடன் அழைத்துக் கொண்டு ஆற்றங்கரையோடு போய் விட்டார்கள்.

இந்தச் சம்பவத்தின் பொருள் என்ன வென்பது திருமலையப்பனுக்கு அச்சமயம் விளங்கவில்லை. இப்போது கொஞ்சம்

விளங்குவது போலத் தோன்றியது.

இதற்கிடையில், அந்த வீதி நாடக கோஷ்டியின் நினைவும் அவனுக்கு வந்தது. முக்கியமாக, கம்ஸன் வேஷம் தரித்து, மரப் பொம்மை முகத்தினால் சொந்த முகத்தை மறைத்துக் கொண்டிருந்தவனின் நடை உடை பாவனைகளும், குரலும் நினைவு வந்தன. முன்னம் கேட்டது போல் தொனித்த அக்குரல் யாருடைய குரல் என்பது பற்றியும் விளக்கம் ஏற்படத் தொடங்கியது.

இரவு அர்த்த ஜாம பூஜையை முடித்துக் கொண்டு ஈசான சிவபட்டர் தம் இல்லத்துக்கு வந்தார். வாசல் திண்ணையில் ஆழ்வார்க்கடியான் படுத்திருப்பதைப் பார்த்தார்.

"திருமலை! திருமலை!" என்று கோபக் குரலில் கூப்பிட்டார்.

திருமலை நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருப்பதாகப் பாசாங்கு செய்தான்.

வீட்டுக் கதவைப் படார் என்று சாத்திக் கொண்டு பட்டர் உள்ளே போனார். தமது மனைவியாருடன் அவர் சண்டை பிடிக்கிற தோரணையில் பேசியது அரைகுறையாகத் திருமலையின் காதில் விழுந்தது. தன்னைப் பற்றித்தான் சண்டை என்பதைத் திருமலை தெரிந்து கொண்டான்.

காலையில் எழுந்ததும் ஈசான சிவபட்டர் திருமலையிடம் வந்து, "மறுபடி நாடு சுற்ற எப்போது புறப்படுகிறாய்?" என்று கேட்டார்.

"தங்கள் கோபம் தணிந்த பிறகு புறப்படுவேன் அண்ணா!" என்றான்.

"இனி என்னை 'அண்ணா' என்று கூப்பிடாதே. இன்று முதல் நான் உன் தமையனும் அல்ல; நீ என் தம்பியும் அல்ல. நீ சிவத்துவேஷி; நீசன்; சண்டாளன்..."

பட்டரின் மனைவி திருமலைக்காகப் பரிந்து, "எதற்காக இப்படியெல்லாம் அவனைச் சபிக்கிறீர்கள்! இத்தனை நாளும் சொல்லாததை அவன் இப்போது என்ன புதிதாகச் சொல்லி விட்டான்! உங்களுக்குத்தான் சிவபக்தி ரொம்ப அதிகமாக முற்றி விட்டது!" என்றாள்.

"உனக்கு ஒன்றும் தெரியாது! அவன் நேற்று பெரிய மகாராணியின் முன்னிலையில் என்னவெல்லாம் சொன்னான், தெரியுமா? 'சுடுகாட்டில் சாம்பரைப் பூசிக் கொண்டு திரியும் பரமசிவனுக்குக் கோவில் என்னத்திற்கு!' என்று கேட்டான். என் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போலிருந்தது. மகாராணி இராத்திரியெல்லாம் தூங்கவேயில்லையாம்!"

"இனிமேல் அப்படியெல்லாம் பேச மாட்டான். நான் புத்தி சொல்லித் திருத்தி விடுகிறேன். அவனிடம் நல்ல வார்த்தையாகச் சொன்னால் கேட்கிறான்!" என்றாள்.

"நல்ல வார்த்தையும் ஆயிற்று; பொல்லாத வார்த்தையும் ஆயிற்று. இவன் இராமேசுவரத்துக்கு உடனே போகட்டும். இராமர், பூஜை செய்து பாவத்தைப் போக்கிக் கொண்ட சிவலிங்கத்தை, இவனும் பூஜை செய்து விட்டு வரட்டும். அதுதான் இவனுக்குப் பிராயச்சித்தம். அப்படிச் செய்யும் வரையில் நான் இவன் முகத்திலேயே விழிக்க மாட்டேன்!" என்றார்.

திருமலையின் உதடுகள் துடித்தன. வட்டியுடன் சேர்த்துத் திருப்பிக் கொடுப்பதற்குத்தான். ஆனால் பேசினால் காரியம் கெட்டுவிடும் என்று பொறுமையைக் கடைப்பிடித்தான்.

பட்டரின் பத்தினி இச்சமயத்தில் மறுபடியும் தலையிட்டு, "அதற்கு என்ன? இராமேசுவரத்துக்குப் போகச் சொன்னால் போகிறான். அவனுடன் நாமும் போகலாம். இத்தனை நாள் ஆகியும் நமக்குந்தான் குழந்தை பிறக்கவில்லை. பூர்வ ஜன்மத்தில் என்ன பாவம் செய்தோமோ, என்னமோ...? திருமலை! எல்லாருமாக இராமேசுவரத்துக்குப் போகலாமா?" என்று கேட்டாள்.

அவர்கள் இரண்டு பேரையும் சிவபட்டர் முறைத்துக் கோபமாகப் பார்த்து விட்டுப் போய்விட்டார்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஈசான பட்டர் திரும்பி வந்து திருமலையிடம் சாந்தமாகப் பேசினார்.

"தம்பி! 'கோபம் பாபம் சண்டாளம்' என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். நான் கோபத்துக்கு இடம்கொடுத்து விட்டேன். உனக்கு ஒன்றும் வருத்தம் இல்லையே?" என்றார்.

"இல்லவே இல்லை!" என்று சொன்னான் ஆழ்வார்க்கடியான்.

"அப்படியானால் நீ இங்கேயே இரு! உச்சிகால பூஜையை முடித்துக் கொண்டு நான் வந்து விடுகிறேன். உன்னிடம் சில முக்கியமான விஷயங்களைப் பற்றிச் சொல்லி யோசனை கேட்க வேண்டும். இங்கேயே இருக்கிறாய் அல்லவா? எங்கும் போய் விட மாட்டாயே?" என்றார்.

"எங்கும் போகவில்லை, அண்ணா! தங்களை விட்டு எங்கும் போவதாக உத்தேசமில்லை!" என்றான்.

பட்டர் போய் விட்டார். ஆழ்வார்க்கடியான் தனக்குத்தானே, "அப்படியா சமாசாரம்!" என்று சிலமுறை சொல்லிக் கொண்டான். பிறகு அண்ணியிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டான்.



செய்குன்றுகள் சூழ்ந்த வடமேற்றளிக் கோயிலை இரண்டு மூன்று தடவை சுற்றி வந்தான். அவ்வப்போது ஏதேனும் சத்தம் கேட்டால் உடனே மறைந்து நின்று கொண்டான்.

அவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சமணர் முழைகளில் ஒன்றின் வாசல் மெதுவாகத் திறந்தது. முதலில் ஈசான சிவ பட்டர் மூன்று பக்கமும் பார்த்துவிட்டு வெளியே வந்தார். பின்னால் இன்னொரு மனிதன் வெளிப்புறப்பட்டு வந்தான். ஆகா! இவன் யார்? முகம் தெரியவில்லையே? உடல் அமைப்பைப் பார்த்தால் கம்ஸன் வேடம் பூண்டிருந்தவன் மாதிரி இருக்கிறது! யாராயிருக்கும்? இதைக் கண்டுபிடிக்காமல் விடுவதில்லை. ஓஹோ! இதற்குத்தானா, இவ்வளவு கோபதாபம்? மூடுமந்திரம் எல்லாம்!

முழையிலிருந்து வெளிப்பட்ட இருவரும் முன்னால் சென்றார்கள். ஆழ்வார்க்கடியான் ஒதுங்கிப் பதுங்கி மறைந்து பின்தொடர்ந்தான்.

சிறிது நேரம் நடந்ததும் ஓடைக் கரையை அடைந்தார்கள். சோழ மாளிகைக்குப் பின்புறத்தில் கடலைப் போல பரவி அலைமோதிக் கொண்டிருந்த ஓடையைத்தான். ஆனால் மாளிகைக்கு வெகு தூரம் மேற்கில் இருந்தது அத்துறை.

ஓடைக்கரையில் அடர்ந்த மரங்கள் பல இருந்தன. அவற்றில் ஒன்றின் பின்னால் ஆழ்வார்க்கடியான் நின்று இரண்டு கிளைகளுக்கு நடுவில் தலையை நீட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

படகு ஒன்று அலைபுரண்டு மிதந்தது. அரண்மனைப் படகு மாதிரி தோன்றியது. படகுக்காரன் கரையில் நின்று கொண்டிருந்தான்.

பட்டரையும் அவருடன் வந்தவனையும் பார்த்ததும் அவன் படகைக் கரையோரமாக இழுத்து நிறுத்தினான்.

இருவரும் படகில் ஏறிக் கொண்டார்கள். படகு நீரில் போக ஆரம்பித்ததும் பட்டருடன் வந்த மனிதன் கரைப் பக்கம் திரும்பிப் பார்த்தான்.

அவன் முகம் பளிச்சென்று நன்றாய்த் தெரிந்தது.

ஆழ்வார்க்கடியானுக்கு வியப்பு ஒன்றும் உண்டாகவில்லை. அவன் எதிர் பார்த்த மனிதன்தான் அவன்.

வீரநாராயணபுரத்திலும் கொள்ளிடத்துப் படகிலும் சந்தித்த அந்த வீர வாலிபன்தான்!

கம்ஸன் வேடம் பூண்டிருந்தவனும் அவனே என்பதில் சந்தேகமில்லை.

அவர்கள் படகில் ஏறி எங்கே போகிறார்கள்? – அதையும் கண்டுபிடித்து விட வேண்டியதுதான்! அதாவது தன்னுடைய ஊகம் சரிதானா என்று பார்த்து விட வேண்டும்.

சோழ மாளிகைகள் பல வானளாவி நின்ற வீதியில் கடைசி மாளிகை ஒன்று பூட்டப் பட்டுக் கிடந்தது. அது சுந்தர சோழரின் முதன் மந்திரியான அநிருத்த பிரும்மராயரின் மாளிகை. முதன் மந்திரி அநிருத்தர் பாண்டிய நாட்டின் இராஜரீக நிர்வாகத்தைச் செப்பனிட்டு அமைப்பதற்காக மதுரை சென்றிருந்தார். அவருடைய குடும்பத்தார் தஞ்சாவூரில் இருந்தார்கள். ஆகையால் அவருடைய பழையாறை மாளிகை பூட்டப்பட்டுக் கிடந்தது.

ஆழ்வார்க்கடியான் இந்த மாளிகைக்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் மாளிகைக் காவலர்கள் பயபக்தியுடன் வந்து நின்றார்கள். மாளிகையின் கதவைத் திறக்கும்படிப் பணித்தான். காவலர்கள் கதவைத் திறந்தார்கள். பிறகு அவன் கட்டளைப்படி வெளிப்பக்கம் சாத்திப் பூட்டினார்கள். மாளிகையின் மூன்று கட்டுக்களையும் கடந்து பின்புறத் தோட்டத்துக்கு வந்து சேர்ந்தான். அத்தோட்டத்திலிருந்து நெருக்கமான மரஞ்செடிகளைப் பிளந்து கொண்டு கொடி வழி ஒன்று சென்றது. திருமலை அதில் புகுந்து சென்று சிறிது நேரத்தில் குந்தவை தேவியின் மாளிகைத் தோட்டத்தை அடைந்தான். கொடி வீடு ஒன்றில் மறைவான இடத்தில் நின்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்தான். இவ்வளவு சிரமம் அவன் எடுத்துக் கொண்டது வீண் போக வில்லை.

காளிதாஸன் முதலிய மகா கவிகள் வர்ணிக்க வேண்டிய நாடக நிகழ்ச்சி ஒன்று அங்கே நடந்தது.

நீரோடைக் கரையில் படகு வந்து நின்றது. அதிலிருந்து ஈசான பட்டரும் வந்தியத்தேவனும் இறங்கினார்கள். பிறகு நீர்த்துறையின் படிக்கட்டுகளின் வழியாக ஏறி வந்தார்கள்.

படிக்கட்டுகளுக்குச் சற்றுத் தூரத்தில் தோட்டத்தில் அமைந்திருந்த பளிங்குக் கல் மேடையில் இளையபிராட்டி குந்தவை அமர்ந்திருந்தாள்.

படகில் வந்தவர்கள் நீர்த்துறையின் படிக்கட்டுகளில் ஏறி மேற்படிக்கு வந்ததும் இளையபிராட்டி குந்தவை தேவி எழுந்து நின்றாள்.

வந்தியத்தேவன் அப்போதுதான் அப்பெண்ணரசியின் திருமுகத்தைக் கூர்ந்து பார்த்தான்.

பார்த்தது பார்த்தபடியே நின்றான்.

அவனுக்கும் இளையபிராட்டி குந்தவைக்கும் மத்தியில் ஒரு பூங்கொடி தன் இளந்தளிர்க்கரத்தை நீட்டி இடைமறித்து நின்றது.

அந்தக் கொடியில் ஓர் அழகிய பட்டுப் பூச்சி – பல வர்ண இறகுகள் படைத்த பட்டுப் பூச்சி – வந்து உட்கார்ந்தது.

குந்தவை தன் பொன் முகத்தைச் சிறிது குனிந்து அந்தப் பட்டுப் பூச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வந்தியத்தேவனோ குந்தவையின் முக மலரையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றான்.

ஓடையில் அலைகள் ஓய்ந்து அடங்கின.

பட்சி ஜாலங்கள் பாடுவதை நிறுத்தின. அண்ட பகிரண்டங்கள் அசையாது நின்றன.

பல யுகங்கள் சென்றன.

(தொடரும்)

# கல்கி கலெக்ஷன்



# சண்டை என்னத்திற்கு?

மகா கனம் சாஸ்திரியார் சமீபத்தில் "அரசியலில் சாந்தி" என்னும் விஷயத்தைப் பற்றி ஓர் உபந்நியாசம் செய்தார். அதைப் பற்றி நான் இங்கு ஆராய்ச்சி செய்ய வரவில்லை. சாஸ்திரியாரைப் போல் வேறு சிலர் "சங்கீதத்தில் சாந்தி"யைப் பற்றி உபதேசிக்கிறார்களே, அதை இந்தப் பத்தியில் கவனிக்க வேண்டியது அவசியம். "சங்கீதத்தில் சண்டை என்னத்திற்கு?" என்று இந்த சாத்வீக ஆத்மாக்கள் கேட்கிறார்கள். 'சண்டை' என்னும் போது, இவர்கள் தமிழ் இசை இயக்கத்தைத்தான் குறிப்பிடுகிறார்கள். ஆகவே, சண்டையைக் கிளப்பும் பொறுப்பு முழுவதையும் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் மேலேயே போட்டு விடுகிறார்கள்! (இந்த ஸீஸனுக்கு மேற்படி சண்டையைக் கிளப்பியவர் ஸர் வேங்கடசுப்பராவ் என்பதைக் கூட சௌகரியமாக மறந்து விடுகிறார்கள்! இவர்கள்தான் மறக்கிறார்களோ, அல்லது இவர்களுடைய பிரசங்கத்தை வெளியிடும் பத்திரிகைக்காரர்கள்தான் மறைக்கிறார்களோ, தெரியவில்லை.)

"சண்டை"யைக் கிளப்பியது தமிழ் இசை இயக்கம் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் "சண்டை" எது?

"தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டும்" என்று சொல்வது சண்டையா?

இது சண்டையென்றால், இந்தச் சண்டையைத் தமிழர்கள் போட்டுத்தான் ஆக வேண்டும்.

ஆனால், உண்மையில் "தமிழ்ப் பாட்டுப் பாட வேண்டும்" என்பது சண்டையில்லை. அதைச் சண்டை என்பதாக எந்த சங்கீத வித்வானும் சொல்லவில்லை.

"தமிழ்ப் பாட்டு பாடக் கூடாது" என்று சிலர் கட்சி கட்டுவதுதான் உண்மையில் சண்டை. அதற்குக் காரணமாக அவர்கள் "தமிழ், சங்கீதத்துக்கு உகந்த பாஷை இல்லை" "தமிழில் நல்ல ஸாஹித்யம் இல்லை" "தமிழ்ப் பாட்டுப் பாடினால் கர்நாடக சங்கீதத்தின் தரம் குறைந்து விடும்" என்றெல்லாம் சொல்லும் போதுதான் சண்டை வலுக்கிறது.

இம்மாதிரியான அவதூறுகளை – தாய் மொழி துவேஷப் பிரசாரத்தை – எந்தத் தமிழன்தான் கேட்டுக் கொண்டு 'சாந்த'மாயிருக்க முடியும்? அப்படிக் கேட்டுக் கொண்டிருப்பவனைத் "தமிழன்" என்றோ, "தமிழ் பாஷைக்குரியவன்" என்றோ சொல்ல முடியுமா?

மேற்படி "சாந்தி"க் கட்சியைச் சேர்ந்தவர்கள் இன்னொன்று சொல்கிறார்கள். "தமிழ்ப் பாட்டுப் பாடவேண்டியதுதான். வேண்டாமென்று சொல்லவில்லை. அதற்காகத் தியாகராஜர், தீக்ஷிதர் முதலியவர்கள் அளித்திருக்கும் ஸாஹித்யச் செல்வங்களைக் கைவிட்டுவிட முடியாது" என்கிறார்கள்.

தியாகராஜரையும், தீக்ஷிதரையும் தள்ளி விட வேண்டுமென்று யார் சொல்கிறார்கள்? தமிழிசைக்காரர் யாரும் இதுவரையில் சொல்லவில்லை. பின், இல்லாத

**அமரர் கல்கி**



## கலைஞர் - 75

ஆட்சித் திறத்திலும் அறிவார்ந்த தன்மையிலும் மக்கள் தொண்டராகத் தமிழும் இலக்கியமும் தழைத்தோங்கப் பாடுபடும் தலைவர்களுள் தலைசிறந்து விளங்கும் பவள விழாக் காணும் முதல்வர் பல்லாண்டு வாழ்க!

— தங்கபாலு (தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர்)

அபாயத்தை இவர்கள் ஏன் வருவித்துக் கொண்டு அவஸ்தைப்படுகிறார்கள்?

**த**மிழிசை இயக்கத்தினால் தியாகராஜருக்கும் தீக்ஷிதருக்கும் ஆபத்து வந்து விடுமா?

ஒரு உதாரணம் பார்க்கலாம்.

நாலு வருஷத்திற்கு முன்னால் ஸ்வாதித் திருநாள் என்ற பெயரையே ரொம்பப் பேர் கேட்டிருக்க மாட்டார்கள். திருவாங்கூர் சமஸ்தானத்துக்குத் திடீரென்று சங்கீதப் பிரேமை உண்டாயிற்று. தங்கள் மூதாதையான ஸ்வாதித் திருநாளின் கீர்த்தனங்களைப் பிரபலப்படுத்த வேண்டுமென்று தீர்மானித்தார்கள். தமிழ்நாட்டின் பிரபல சங்கீத வித்வான்கள் பலர் திருவாங்கூர் சமஸ்தான வித்வான்கள் ஆனார்கள். தற்சமயம் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனம் பாடாத வித்வான் அருமையென்று சொல்ல வேண்டும். சென்ற 1941-ம் வருஷத்து அகாடமி புரோகிராமைப் பார்த்தால், ஒரு வித்வான் மூன்று ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்கள் பாடியிருக்கிறார் என்பது தெரியவரும்.

இப்படித் திடீரென்று இரண்டு மூன்று வருஷங்களில் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்கள் பிரபலமானபடியால் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி, தீக்ஷிதர் இவர்களுடைய மகிமைக்கு ஏதாவது குறை வந்து விட்டதா?

ஸ்வாதித் திருநாள் கீர்த்தனைகளினால் தியாகராஜர், தீக்ஷிதர் மகிமை குறைவுபடவில்லையென்றால், தமிழ்க் கீர்த்தனைகளைப் பாடுவதினால் மட்டும் எவ்விதம் குறைவுபடும்?

"சாந்தி" உபதேசக்காரர்களில் சிலர் இன்னும் ஒரு விசித்திரமான வாதத்தையும் சொல்கிறார்கள். ''சங்கீதத்துக்கு பாஷை என்னத்திற்கு? சங்கீதமே ஒரு தனி பாஷை அல்லவா?'' என்கிறார்கள். உடனே, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வேணுகானம் செய்தபோது ஆடு, மாடு, மரம், மட்டை, புல், பூண்டு, கல்லு, முள்ளு எல்லாம் கண்ணீர் விட்டுக் கதறியதை எடுத்துக் காட்டுகிறார்கள்.

இந்த வாதத்தைச் சொல்கிறவர்களை, சங்கீதத்தைப் பொறுத்தவரையில், மரம் மட்டைகளோடு சேர்த்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஏனெனில், இவர்கள் சங்கீதத்துக்கு ஸாஹித்யமே வேண்டியதில்லையென்கிறார்கள். இவர்களுக்குத் தியாகராஜர், தீக்ஷிதர், ஸ்வாதித் திருநாள், முத்துத் தாண்டவர் ஒருவருமே தேவையில்லை.

ஆனால், நாமெல்லாரும் அத்தகைய பக்குவ நிலையை அடையவில்லை. ஸ்ரீ கிருஷ்ண பகவான் நேரில் வந்து மரம், மட்டையெல்லாம் உருகும்படி புல்லாங்குழல் வாசிக்கிறவரையில், நமக்குச் சங்கீதானந்தத்தைப் பூரணமாய் அநுபவிப்பதற்கு ஸாஹித்யமும் வேண்டித்தான் இருக்கிறது. ஸாஹித்தியத்தின் தேவை ஏற்படும்போது, தமிழ் ஸாஹித்யத்துக்கும் இடங்கொடுங்கள் என்றுதான் சொல்கிறோம்.

உண்மை என்னவென்றால், தமிழ் இசையை எதிர்ப்பவர்கள் முன்னுக்குப் பின் முரணாக எல்லாவிதமான வாதங்களையும் உபயோகப்படுத்துகிறார்கள். எல்லா வாதங்களுக்கும் அடிப்படை தமிழ் மொழியின் மேல் உள்ள பகை அல்லது அலட்சியமாகத்தான் இருக்கும்.

தமிழ் மக்கள் இதை எப்படிச் சகித்துக் கொண்டு "சண்டை வேண்டாம்" என்று சாந்தமாய் இருக்க முடியும்? ●

**(கல்கி, ஜனவரி 20, 1943)**

# உங்கள் முதலீட்டை வரி சிக்கனமாகவும் மற்றும் சுலபமாக ரொக்கமாகவும் ஆக்குவது எப்படி

## அறிமுகப்படுத்துகிறோம்




கவலையற்றது | தூய கடன் திட்டம் | அன்றாட என்ஏவி | மூலதன ஆதாயம் | இன்டெக்சேஷன் | கவர்ச்சிகரமான வரிக்குப் பின்னான வருவாய்

யூடிஐ பாண்ட் ஃபண்ட் ஒரு 100 சதவீதம் தூய கடன் ஃபண்டாகும். இத்திட்டத்தில் வந்து சேரும் தொகை அனைத்தையும் கடன் மற்றும் பணச் சந்தைப் பத்திரங்களில் முதலீடு செய்யப்படும். ஈட்டப்பட்ட வருவாய் மற்றும் மூலதன வளர்ச்சி மறு முதலீடு செய்யப்பட்டு என்ஏவி யின் வளர்ச்சியாக பிரதிபலிக்கப்படும். இந்த ஃபண்டின் கீழ் வருவாய் விநியோகம் கிடையாது. "நோ லோட்" சிறப்பம்சத்தின் அர்த்தம் என்னவெனில் அன்றாட அடிப்படையில் வெளியிடப்படும் என்ஏவி-யில் விற்பனை மற்றும் மறு கொள்முதல் செய்யப்படும்.

### யூடிஐ பாண்ட் ஃபண்டின் மற்ற முக்கிய சிறப்பம்சங்கள்.

- கவர்ச்சிகரமான வரிக்குப்பின்னான வருவாய். என்ஏவியில் ஏற்படும் மூலதன வளர்ச்சி வருமான வரிச்சட்டம் 1961 பிரிவுகள் 48 மற்றும் 112ன் கீழ் இன்டெக்சேஷன் மூலதன ஆதாயச் சலுகையாகக் கருதப்படும்.
- குறைந்தபட்ச முதலீடு : ரூ.10,000/- உச்ச வரம்பு கிடையாது. ஃபோலியோக்களின் கீழ் செய்யப்படும் பின்பான முதலீடுகள் குறைந்தபட்சம் ரூ.500/- ஆக இருக்க வேண்டும்.
- சிறந்த பணப் புழக்கம்: இந்த பாண்ட் ஃபண்ட் கவலையற்றது. அன்றாட அடிப்படையில் என்ஏவி அறிவிக்கப்படும். என்ஏவியின் அடிப்படையில் விற்பனை/மறு கொள்முதல் செய்யப்படும். ஃபண்ட் முடிவுற்ற 30 நாட்கள் கழித்த பின்பு ஆரம்ப ஃபண்டின் விற்பனை / மறு கொள்முதல் துவங்கும்.
- நோ லோட் : ஒரு ஆண்டு கழித்து திட்டத்திலிருந்து விலகினால் ஒருவித கழிப்பும் விதிக்கப்பட மாட்டாது. ஒரு ஆண்டிற்கு முன்பு விலகினால் என்ஏவியின் மேல் ஒரு தற்செயலான நஷ்டப்போடும் விற்பனை கட்டணமாக 1.5% விதிக்கப்படும்.
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவுகள் 54இ மற்றும் 54 இஏ-ன் கீழ் மூலதன ஆதாய வரிவிலக்கும் கிடைக்கிறது.




**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் வளமான நாளைக்கு

உங்கள் யூடிஐ முகவர் அல்லது நிதி ஆலோசகரை இன்றே அணுகவும்!

**ஆரம்ப வழங்கீடு 4 மே முதல் 17 ஜூன் 1998 வரை நடப்பிலிருக்கும்.**

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன் : 517101.
கிளை அலுவலகங்கள் : • கோயம்புத்தூர் போன் : 214973 • சென்னை போன் : 517101, 517190 • மதுரை போன் : 38186 • திருச்சி போன் : 760060

027/98 C TAM B

# வேர்க்குரு என்பது வெறும் அரிப்பல்ல.
# அது ஒரு சருமக்கோளாறு.



## விரைவில் நிவாரணம் பெற நைஸில்.

வெயில் காலத்தில் வியர்த்துக்கொட்டி, பிசுபிசுவென்று உடல் இருக்கையில் உங்கள் சருமத்தின் வியர்வை சுரப்பிகள் அடைத்துக்கொள்ளும். அதனால் அரிப்பு ஏற்படும், கடுமையாக சொரியத் தூண்டும்.

அப்போது சருமத்தில் தொற்று ஏற்பட வாய்ப்புண்டு.

நைஸிலில் மட்டுமே உள்ளது கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின். இந்த முக்கிய உட்பொருள் வேர்க்குருவுக்கு எதிராக கடுமையான செயல்புரியும். அதனால் வேர்க்குருவிலிருந்து விரைவான நிவாரணம் தருவது மட்டுமல்லாது, அதைச்செய்கையில் இதமும், சுகமும் கூடுதலாய் தரும்.




**நைஸில்**

வேர்க்குரு பவுடர்

கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின் அடங்கியது.

# மனிதனுக்கும் கடவுளுக்கும் என்ன வித்தியாசம்?

● "தொட்டால் சுடுவது நெருப்பு. தொடாமல் சுடுவது?"
"வெறுப்பு!"

● "மெய்ப்பொருள் காண்பது அறிவு என்று வள்ளுவர் கூறக் காரணம் யாது?"
"அவர் காலத்திலும் பொய்ப் பொருளுக்கும் சந்தை இருந்ததால்தான்."

● தொண்டனின் கடைசிப் புகலிடம் எது?"
"தொண்டுள்ளம் படைத்த ஒரு தலைவனின் நெஞ்சகமாகத்தானிருக்க முடியும்."

● "சிந்தனை-ஆராய்ச்சி இரண்டுக்கும் விளக்கம் தருவீரா?"
"சிந்தனை உலைக் களம், ஆராய்ச்சி அங்கு ஒலிக்கும் சம்மட்டி அடி. இங்கு உருவாகும் கருவிகளே முடிவுகள்."

● "தாங்கள் கற்றது எது? கல்லாதது எது?"
"கற்றது நம்பிக்கை வைப்பது- கல்லாதது நம்பிக்கை துரோகம் செய்வது."

● "மனிதனை இறுதி வரையில் தொடர்வது எது?"
"உயிரோடு இருக்கும்போது நிழல்-உயிர் போன பிறகு தழல்."

● "ஆபாசமாக எழுதுகிறவர்களைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்?"
"சாக்கடையை வாரி நம் மீது வீச முனைகிறவன்-முதலில் அவன் கையை அசிங்கப்படுத்திக் கொள்கிறான்."

● "நாம் சிரித்தால் அழும்-நாம் அழுதால் சிரிக்கும், அந்தப் புதுமையான கண்ணாடிக்குப் பெயர் என்ன?"
"உலகம்."

● "மனிதனுக்கும் கடவுளுக்கும் என்ன வித்தியாசம்?"
"குரங்கிலிருந்து வந்தவன் மனிதன்-கடவுள் என்பது அவன் கையில் கொடுத்த பூமாலை."

● "மனிதனுக்கு இதயம் ஏன் உள்ளே இருக்கிறது?"
"இதயம் இல்லாதவர்களும் இருப்பதாகக் காட்டிக் கொள்ளத்தான்."

● "நன்றி கெட்டவர்களை அவர்களது மனசாட்சி உறுத்துமா?"
"மனசாட்சி இருந்தால் நன்றி கெட்டவர்களாக ஆகியிருக்கவே மாட்டார்களே!"

● "இத்தனைத் துன்பத்தையும் இனிய முகத்துடன் தாங்கிக் கொள்ள நீங்கள் கற்ற இடம் எது?"
"காஞ்சிக் கல்லூரியா? ஈரோட்டுப்பள்ளியா? பள்ளியில் ஆரம்பித்து கல்லூரியில் பக்குவப்பட்டது."

(**பின் குறிப்பு:**- பதில்களுக்குச் சொந்தக்காரர் கலைஞர் கருணாநிதிதான். கரிகாலன் என்கிற பெயரில் சுமார் இருபது வருடங்களுக்கு முன்பாக கலைஞர் வழங்கிய பல்வேறு வகையான பதில்களிலிருந்து அரசியல் சார்பற்ற பதில்களைத் தொகுத்துள்ளோம்.)

தொகுப்பு:
**ப. மூர்த்தி**





## கலைஞர் - 75

பொது மேடையில் அரசியல் சொற்பொழிவுகள் நிகழ்த்தும்போதும், பட்டி மன்றங்களில் சமுதாய ஏற்றத்தாழ்வு குறித்துத் தலைமை உரை நிகழ்த்தும் போதும், கவியரங்கங்களில் இலக்கிய நயத்துடன் கவிதை மழை பொழியும் போதும், சட்டமன்றத்தில் புள்ளி விவரங்களுடன் சூழ்நிலையைப் படம்பிடித்துக்காட்டும் போதும், பத்திரிகையாளர்களின் கேள்விகளை விவேகத்துடன் மடக்கும் போதும் - இவரைப் பார்த்து வியந்திருக்கிறேன்; வியந்து கொண்டேயிருக்கிறேன்.

பவள விழா காணும் முதல்வருக்கு பணிவு கலந்த வாழ்த்துக்கள்.

– டாக்டர் மைத்ரேயன்

சக்திவேல் மல்லாந்து படுத்திருந்தான். அன்றைய நினைவு ஊர்ந்தது. அன்று வீட்டில் ஒருவரும் இல்லை. அம்மாவும் இல்லை. அப்பாவும் இல்லை. நடவு என்று கிளம்பி விட்டார்கள். வீட்டில் யார் இருந்தாலும் அங்கு அமைதிதான். ஆளில்லை என்கின்றபோது அது அழுத்தமாகிறது. அந்த நாளை நினைக்கின்றபோது உடம்பும் மனசும் வெதவெதப்பாகி விடுகிறது.

சமையல் முடிந்தது –

செவ்வந்தி அதைப் பாத்திரத்தில் எடுத்துக் கொண்டாள். முகம் துடைத்தாள். பின்னலைப் பிடித்துப் பிடித்துத் தளர்த்தி விட்டாள். கண்ணாடியின் முன் நின்றாள். முகத்தை இப்படியும் அப்படியுமாய் திருப்பினாள். திருப்தி இல்லை. படபடவென்று மறுபடியும் நீரை அள்ளி முகத்தில் அறைந்து. அழுத்தித் துடைத்தாள். மீண்டும் பவுடர் பூசினாள். கண் மூடி இமைகள் துள்ள மையெழுதினாள். குங்குமம் இட்டுக் கொண்டாள்.

அந்த முகமே அழகுதான். அதற்கு ஏன் இத்தனை மெனக்கெடுவானேன்? மீண்டும் கண்ணாடியின் முன் நின்றாள். வியப்பும், சந்தோஷமும் பாய்ந்தது. இதெல்லாம் உறவை, நட்பை வசப்படுத்தச் செய்கின்ற காரியமில்லை. பிரியத்தையும் நேசத்தையும் வெளிப்படுத்தச் செய்கின்ற காரியம். வேறு என்ன செய்ய முடியும்? வாய் வார்த்தையாக இல்லாதபோது இது மாதிரி ஏதாவது முகத்தில் வரைந்து காட்ட வேண்டியது தான்!

செவ்வந்தி சாப்பாட்டுப் பாத்திரங்களோடு மெல்ல மாடியேறினாள். அவளுக்குக் கைகள் நடுங்கின. கால் நரம்புகள் பின்னிக் கொண்டன. அவளால் நடக்க முடியவில்லை. மனப்பாரம் அழுத்தியது. ஒவ்வொரு படியாய்த் தயங்கித் தயங்கி ஏறினாள். இறுதிப் படியை மிதித்ததும் தடதடவென்று உடல் ஆடத் தொடங்கி விட்டது. கிராதிக் கவரைப் பிடித்துக் கொண்டாள். உடல் இத்தனை ஆட்டம் போடுகிறது! எப்படித்தான் தன் கனவைக் கரையேற்றப் போகிறோமோ என்று கவலையாகி விட்டது.

**பாரதிபாலன்**


• படம் : யோகா

மாடிக் கதவு ஒருக்களித்திருந்தது. உள்ளே கழுதைக் கால் கட்டில் தெரிந்தது. கதவைத் தள்ளலாமா வேண்டாமா? இங்கிருந்தே குரல் கொடுக்கலாமா? எப்படிக் குரல் கொடுப்பது? லேசாய் அந்த இடைவெளியில் தலையை நீட்டி உள்ளே பார்த்தாள். அவள் நிலையை நினைத்து அவளுக்கே சிரிப்பு வந்தது. பேசாமல் இறங்கி விடலாமா? இதை நழுவ விடப் போகிறோம் என்றும் பயமாயிற்று. அந்தப் பயத்திலே உறைந்து போய் நின்றாள்.

"யாரு?"

"நான்தான்!"

"நான்தான்னா யாரு?"

"இப்பத் தெரியுதா?" என்று சிரித்தான்.

"பகல்லெ எதுக்கு விளக்கு?"

"விளக்கு வெளிச்சத்திற்கு அல்ல..."

"பின்ன எதற்கு?"

"துணைக்கு!"

"யாருக்குத் துணை?"

"எனக்குத்தான்."

"சரி. ஏதாவது கேளேன்?"

"கேக்குறதுக்கு ஒண்ணுமில்லை."

அவன் சிரித்து விட்டான். பரபரவென்று அவன் நெஞ்சில் ஏதோ ஊறிற்று! அவன் உடல் நெகிழ்ந்தது. கூழியிட்டது. அவன் தடவித் தடவி அதைத் தேய்த்தான்.

"என்ன?"

"என்னவோ ஊர்றது!"

"எறும்போ, என்னவோ!"

"எறும்பு இல்லை. அந்த என்னவோதான்."

"அதுதானா?"

"அதான் யோசிக்கிறது."

# செவ்வந்தி



"இப்ப என்ன செய்யிறது!"

"யோசிக்கணும்!"

"யோசனையைத் தொட்டுக்கிட்டே இருந்தா விடிஞ்சுடாதா?"

"அப்படியாச்சும் விடியட்டும்."

சக்தி கலைந்த

9

தலையோடு எழுந்தான்.

சட்டென்று ஒரு உற்சாகம். உற்சாகம் மிக, வழக்கம் போல் வார்த்தை வழுக்கிற்று. வாய்க்குள்ளே சிரித்தான். லேசாய்ப் பதற்றம் பற்றிக் கொண்டது. அவன் பார்வை தயங்கித் தயங்கி மேடேறியது. "என்ன ஏதாவது பேசேன்?" என்று கேள்வியால் கூட்டது. அவள் புத்திசாலி. மனித மனங்களின் சூட்சுமங்களை அறிந்தவள். எதையோ ஊர்ஜிதம் செய்தவள் போல் விட்டுப் பிடித்தாள்.

சாப்பாட்டுத் தட்டை அவன் முன்வைத்தாள். பாத்திரங்களைப் பிரித்துப் போட்டாள். அவன் கட்டிலில் இருந்து கீழே இறங்கினான். சாப்பாட்டுத் தட்டின் முன் அமர்ந்தான். சாப்பிடவில்லை. அவள் சுவரோரமாகப் போய் நின்று கொண்டாள். அமைதி.

அவளுக்கு ஏதோ புயலில் சிக்கிக் கொண்டாற்போல் ஒரு தவிப்பு. அந்த அமைதிக்கு அர்த்தம் பண்ணி நெகிழ்ந்து போனாள். அவன் சாப்பிடவே இல்லை. அவளையே துணிந்து பார்த்துக் கொண்டிருந்தான். இதழ் பிரிக்காமல், குரல் எழுப்பாமல், கண்கள் மட்டும் மலர்ந்தன. உதட்டில் சிரிப்பு அரும்பியது. இடையிடையே மௌனம். அந்த மௌனம் தருகின்ற பாஷை மெல்லத் திடப்பட்டது. அந்த மௌனம் அவர்களின் பாஷைக்கு வலு ஊட்டியது.

இப்படி மனசின் மூலையில் எல்லாவற்றையும் மூட்டை கட்டிப் போட்டு விட்டால் எப்படி? இந்தத் தருணம் மனசைத் திறக்க உகந்ததுதான். ஆனால் மனசில் புகுந்து கொண்டிருக்கும் பயத்தை எந்தப் புகை கொண்டு போக்குவது? கடந்த நான்கு நாட்களையும் நகர்த்தப்பட்ட பாடு, கால் மேல் கல்லைக் கட்டிக் கொண்டு நடக்கின்ற நடையாகத்தான் நகர்ந்தது. அன்று வெளியே போகும் போது சரசு அத்தை சொன்னது வார்த்தையாய் விழவில்லை. ஒரு சொட்டுத் தேனாய்த்தான் விழுந்தது.

"செவ்வந்தி புதன் கிழமை நடவு!"

"நானும் வரட்டா?"

"வேண்டாம். நீ இரு. நான் விடியக் கிளம்பிடுவேன். மதியம் தம்பிக்கு சாப்பாடு உங்க வீட்டுலெ இருந்துதான்."

"ம்"

அந்த ருசிக்குத்தான் அவன் மனசு நாலு நாளாய்த் தவம் கிடந்தது. ஆனால் இந்தா அந்தா என்று கைக்கு எட்டுகின்றபோது கையில் பிடிக்க முடிகிறதாய் இல்லை. தூரத்து வானமாய்ப் போய் விடுகிறது. போகட்டும். ஆனால் வெதுவெதுப்பான இந்தத் தனிமையில், வழிந்து ஓடுகின்ற இந்த அமைதியில் அப்படியே மூழ்கிப் போய்விட வேண்டும் போல் இருந்தது.

அப்பாவின் கையில் சின்ன மஞ்சள் பை. அம்மாவின் கையில் ஒரு சிறு மூட்டை. கொஞ்சம் அரிசி. கொஞ்சம் புளி. மட்டை உரித்த தேங்காய் நாலு. சிவந்து வெடித்த கொடுக்காய் புளி. இன்னும் என்னென்னவோ. நல்ல கனம். சிரமப்பட்டுத்தான் தூக்கினாள். அப்பாதான் முதலில் படியிறங்கினார். நாலு முழ வேஷ்டி, ஒரு வட்டக் கழுத்துச் சட்டை. வெளியூர் போவதற்கென்றே ஒதுக்கியது. அம்மா வேலிப் படலுக்குப் போனதும் கழுத்தைத் திருப்பினாள்.

"பார்த்துக்கப்பா, வர்றோம்."

சக்திவேல் தலையை அசைத்தான். இரண்டடி வைத்ததும் திரும்பினாள்.

"எல்லாம் எடுத்து வச்சிருக்கேன். சாப்பிட்டுக்கோ."

"ம்."

"பொழுதோட திரும்பிடுவோம்."

"சரி."

"வர்றோம்" அம்மாவின் குரல் தெருவோடு ஓடிற்று. குச்சனூர் போகிறார்கள். அங்குதான் தங்கையைக் கொடுத்திருக்கிறது. பஸ் கிடையாது. நடந்துதான் போக வேண்டும். ஐந்து மைல் தொலைவு. அலுப்புத் தெரியாது. முதலில் வாய்க்காலைத் தாண்ட வேண்டும். அடுத்து ஒரு ஆறு. நல்ல அகலமான ஆறு. ஆனால் ஆழம் கம்மி. அப்பா ஆற்றைக் கடந்தார். மேடேறியதும் பச்சைப் புல்லில் அவர் கால் வெளேரென்று இருந்தது. அவருக்குச் சிரிப்பு வந்தது.

"என்னவாம் சிரிப்பாணி."

"இனி, சிரிச்சுக்க வேண்டியதுதான்."

"ஏன் இதுவரை சிரிக்கலையா?"

"இது வேற..."

"மவனை கரையேத்தியாச்சுனா?"

அவர் பார்வை அம்மாவைத் துளைத்தது. அவள் தலையைக் கவிழ்ந்து கொண்டாள். குச்சனூர் மேடேறுகிறவரைப் பேசவில்லை.

"எனக்கு என்னவோ, பயந்து வர்றது!"

## கலைஞர் - 75



கலைஞர், கற்பனை மிகுந்தவர், புத்திசாலி, உலக ஞானம் பெற்றவர், தலைமைப் பண்புகள் நிறைந்தவர். நாட்டின் சூழ்நிலைக்கேற்ப தன்னை சுதாரித்துக் கொண்டாரா அல்லது தன் கற்பனை என்ற தீர்க்கதரிசனத்தால், தான் விரும்பும் நாட்டை உருவாக்க முயன்றாரா, யோசிக்கிறேன்! வாழ்க பல்லாண்டு!

**— எம். எஸ். உதயமூர்த்தி**

"ஏன்?"

"ரொம்ப உசந்த இடம். ஒட்டுமான்னு பார்க்கணும்."

"வேண்டாம். ஒட்ட வேண்டாம். ஒண்ணோடையும் என்னோடையும் ஒட்ட வேண்டாம். அதுக கையும் காலும் சொகமா இருந்தாச் சரி."

"அதுதேன் நானும் வேண்டிக்கிறேன். போற போக்குலெ சனிமான் கோவிலுக்கு ஒரு எட்டு போயிட்டுப் போகலாமா?"

"போகலாம்."

"பாப்பாவுக்கு எதுனா வாங்கணும்."

"குச்சனூர்லெ வாங்கலாம்."

"சுசியாப்பம் போட்டிருந்தான்னா வாங்குங்க. பிரியமா திம்பா."

**வீ**ட்டிற்குள் நுழைந்ததும் பாப்பா துள்ளல் நடையில் வந்தாள். "அம்மா" என்று வாசல் படியை மிதித்ததும் ஒரு ஆனந்தக் கூச்சல். அம்மாவை ஒட்டி நின்று கொண்டாள். அப்பாவைப் பார்த்து "வாங்கப்பா" என்று மலர்ந்தாள்.

"வெற்றிலை கை மாறிடுச்சா?"

"உனக்கு யார் சொன்னா?"

"நீங்க சொல்லாட்டி, எங்களுக்குத் தெரியாதோ!"

"ச்சி! சும்மா இரு. திடுதிப்புனு முத்துப் பிள்ளை காரைப் போட்டுக்கிட்டு வந்து நின்னுட்டாக. கையும் ஓடலை. காலும் ஓடலை. பக்கத்துலெ மட்டும்தேன் சொன்னோம்."

"பெரிய இடம். அதான் நம்மளை மறந்துட்டாங்கன்னு இவரு புலம்பினாரு."

"அதெல்லாம் இல்லை பாப்பா" என்றார் அப்பா.

"மாப்பிள்ளை எங்கே?"

"தோ வந்திடுவார்."

"அண்ணன் எப்படி இருக்கு?"

"இருக்கான்."

"நிச்சயம் எப்பவாம்?"

"மாசம் பிறந்ததும் முதல் தேதி."

"அதுக்காவது கூப்பிடுவீயளா?"

"அதுக்குத்தான் வந்திருக்கோம்."

பாப்பா தூக்குச் சட்டியை எடுத்து, அதைக் கழுவ கொல்லைக்கு ஓடினாள். "வேண்டாம் நீ வச்சுட்டு சும்மா உக்காரு" என்று அவளைத் துரத்திக் கொண்டே அம்மாவும் ஓடினாள். கொல்லைக்குப் போனதும் அம்மாவுக்குத் திக்கென்றது. கொல்லையில் ஒரு ஆட்டுக் குட்டி. நெற்றியில் குழைத்துத் தடவிய சந்தனமும் குங்குமமும்...

"என்னடி இது?"

> ## கலைஞர் - 75
>
> 
>
> **கை**யெழுத்துப் பிரதியில் தொடங்கி, கல்வெட்டுப் பிரதியாக வாழ்க்கையைச் செதுக்கிக் கொண்டவர் கலைஞர். தமிழுக்காக இவர் தலைகொடுத்த தண்டவாளத்தின் மேல்தான் திராவிட இரயில் ஓடிக் கொண்டிருக்கிறது.
>
> **— பிரபஞ்சன்**

பாப்பா ஒரு சிரிப்புச் சிரித்தது. கள்ளச் சிரிப்பு. இதில் சிரிக்க என்ன இருக்கு என்றிறாற்போல் அம்மா அவளைப் பார்த்தாள்.

"சொல்லப்படாதா?"

பாப்பா மீண்டும் சிரித்தது.

"வாயைத் தொறடீ."

"சாமி சாட்டியிருக்கு!"

"அதுக்கு?"

"தெரிஞ்சுக்கிட்டே கேப்பானேன்?"

"இது என்ன பழக்கம். இதெல்லாம் நாம பண்ற காரியமா?"

"சொன்னா கேட்டாத்தானே?"

"சாமிக்கு விடவா? பலிகொடுத்துப் பொங்க வைக்கவா?"

"பொங்கதேன்."

"நீ சாப்பிடுவீயா?"

"ம்ஹூம்! அவருதேன் பழகிட்டாரு. தேனிக் காட்டுப் பக்கம் போய் ஒண்ணுலெ கூடி ரெண்டுலெ கூடித் திம்பாறாம்."

"சொல்லப்படாதா?"

"கேட்டாத்தானே? இப்ப ஐயருங்களே சாப்பிடுறாங்கன்னு, ஒரே போடாவுலெ போட்டுர்றாரு."

"இதெல்லாம் உனக்கு என்ன தெரியும்?"

"பக்கத்து வீட்டுலெ ஒருத்தவுக இருக்காங்க. நம்ம செவ்வந்திக்கு உறவு. அவுக எல்லாம் பண்ணித் தாரேன்னாக."

"வெரதம் இருக்கியாக்கும்."

"ம்"

"அப்படினா நீயும் திங்கணுமே?"

"குழம்பு மட்டும் ஊத்திப்பேன்."

"கடவுளே! இதெல்லாம் நம்ம சாமிக்கு ஒத்துக்காதுடீ! உங்கப்பாவுக்குத் தெரிஞ்சா அம்புட்டுத்தேன்"

பாப்பா அம்மாவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

(தொடரும்)

# அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டி — 1998

இனிய வாசக எழுத்தாளர்களே, கல்கி நூற்றாண்டு விழா கொண்டாட்டங்களின் இரண்டாவது அறிவிப்பு இது. (முதல் — பொன்னியின் செல்வன்!) பிரமாதமான சிறுகதைகள் மூலம் அசத்த அழைக்கிறோம். இவ்வாண்டு, ஸ்பெஷல் அல்லவா? பரிசுத் தொகை கூடியிருக்கிறது.




**முதல் பரிசு — ரூ. 10,000**

**இரண்டாம் பரிசு — ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு — ரூ. 5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 1000 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். தழுவல், உருவல் கூடாது: அவ்வளவு தான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டாது.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால்தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டி'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.

எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்!

**— ஆசிரியர்**

கட்சி விருப்பு வெறுப்பின்றிப் பார்த்தால் கலைஞர் மாதிரி சிறந்த அறிஞர் இங்கு யாரும் இல்லையே... அரும்பெரும் மூதறிஞர். மிக்க புகழ் பெற்ற நிர்வாகி எனப் பல விஷயங்களில் ப்ரூவ் பண்ணி விட்டாரே... பார்ட்டி கேடருக்கு அப் பாற்பட்டுப் பலபேரை உருவாக்கினவர்!

**— கோவை மேயர் வி. கோபாலகிருஷ்ணன்**



மீசையில் நரை முடி தென்படாத அளவு மை தடவியிருக்கிறோமா என்று பார்த்துக் கொண்டார் கந்தசாமி. ஜோல்னா பையைத் தோளில் போட்டு வாசலைத் தாண்டி கட்டடங்களாய் நிற்கும் கூட்டத்தை எவ்வித நோக்கமும் இல்லாமல் நோட்டம் விட்டார். சென்னைக்கு வந்த இந்த மூன்றாண்டுகளில் பேரும் புகழும் கூடிவிட்டது. எப்போதும் போல் வரிசை வீடுகளைக் கடந்து படியிறங்கினார்.

இந்தக் காரியாபட்டி கந்தசாமி மனித நேயம் மிக்க எழுத்தாளர். நவீன யுகத்தில் நேசம் மிக்க அம்சங்கள் நழுவிப் போவதை நுரையை அள்ளுவதுபோல் எழுத்தில் கொண்டு வருவார். உழைப்பு பின்தங்கி, மேனா மினுக்கித்தனங்களே அந்தஸ்தாக மாறிவிட்ட காலம் பற்றிய கதைகள் நெஞ்சை உலுக்கி எடுக்கும்.

முக்கியமான விஷயம் என்னவென்றால், கதைக்குள் வைத்திருக்கும் தீர்ப்புதான். சக படைப்பாளிகள் யோசிக்கவே முடியாத தீர்ப்பை ஐம்பது ஆண்டுகள் தள்ளிப் போய் யோசித்திருப்பார். அப்படியொரு தீர்க்கதரிசி.

'முகவரி இல்லாத மனிதர்கள்' என்ற சிறுகதைதான் இவருடைய மாஸ்டர் பீஸ்.

கிராமத்திலிருந்து ஒரு இளம் பெண் சொந்தக்காரர் முகவரி தேடி அலைகிறாள். நகரத்தில் யாருக்கும் தெரியவில்லை. கயவர்களிடம் சிக்கி சின்னா பின்னப்படுத்தப் படுவதுதான் கதை.

தான் பட்ட கஷ்டத்தை இளம்பெண், மேல் ஏற்றி வைத்து எழுதிய ரகசியத்தை இன்று மேடையில் உருக்கமாகப் பேசி இக்கதைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து விடலாம் என்ற எண்ணம் கேட்டுக்கு வந்தார்.

கேட் முன் நடுத்தெருவில் நின்றிருந்த ஒரு பெரியவர் கந்தசாமியைப் பார்த்து, தயங்கி வந்தார்.

''ஏழு ஒன்று தெரு இதுதானே'' என்றார் பெரியவர்.

''ஆமா''

''எம் பையன் முருகேசன் விட்ட ஒரு மணி நேரமா தேடுறேன். கண்டுபிடிக்க முடியல.''

எழுத்தாளர் முகவரியை வாங்கிப் பார்த்தார்.

''சும்மா 87-ன்னு நம்பர் எழுதியிருக்கு. இதில 'A' பிளாக்கா, 'B' பிளாக்கா...'' முனங்கிக் கொண்டு, "தெரியவில்லை" என்று தந்துவிட்டு நடந்தார்.




முக்குத் திரும்பும்போது தெருவைத் திரும்பிப் பார்த்தார். பெரியவர் நடுத் தெருவில்தான் நின்றிருந்தார்.

இலக்கியக் கூட்டம், கந்தசாமி பேச்சால் சிறப்பாக அமைந்தது. வெயிலுக்குத் தப்பி வீடு வந்தபோது திக்கென்றது. காலையில் முகவரி விசாரித்த பெரியவர் பக்கத்துத் தலைவாசல் முன் நாற்காலி போட்டு, துண்டால் நெஞ்சுக்கு வீசிக் கொண்டு அமர்ந்திருந்தார். ○

**— அம்மாபட்டி ஜம்பு**

[redacted]

உடல் நலக் குறைவுதான் காரணம் என்கிறார். கூடவே, 'தலைவி சொன்னால் மூன்றாவது மாடியிலிருந்து குதிக்கத் தயார்...' என்கிறார். மொத்தத்தில் நாளொரு கதை! அ.தி.மு.கவில் நேர்மைக்கும் பஞ்சம்; ஆற்றலுக்கும் பஞ்சம்.

● ஆர். கல்யாண், கோவை - 41 ❑

? முப்படை தளபதிகளுக்குக் கூடத் தெரியாமல் அணுகுண்டுகள் வெடித்ததும்; அந்தப் பரிசோதனையால் மக்கள் உடல் நலம் பாதிக்கப்பட்டாலும் அதை அவர்கள் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும் என வாஜ்பேயி, அத்வானி, பிரமோத் மகாஜன் போன்றோர் பேசுவதும் - அணுகுண்டு வெடிப்புப் பரிசோதனையில் அரசியல் உள்நோக்கம் இருப்பதைத் தானே ஊர்ஜிதப் படுத்துகிறது?

! அரசியல் நோக்கத்தை மட்டுமின்றி அகந்தையையும் வெளிப்படுத்துகிறது. எந்த அபாயம் கருதி அணு ஆயுதங்களை உலகம் புறக்கணிக்கிறதோ அந்த அபாயங்களை நியாயப்படுத்துவது அபத்தம்! அதற்காகத் தியாகம் வேறு

# அணுகுண்டு

செய்யச் சொல்வது நமது அரசியல்வாதிகள் ஐம்பது ஆண்டுகள் பின் தங்கியிருப்பதையே காட்டுகிறது!

● ராஜி, கமுதி.

? முதல்வர் பிறந்த நாள் பவள விழாவுக்கு ஆயுள் தண்டனைக் கைதிகளை விடுதலை செய்யலாமா?

! கைதிகள் நன் நடத்தை மூலம் தண்டனைக் காலம் முடியுமுன்னரே வெளியே வர சட்டத்திலேயே இடமிருக்கிறது. அதற்கு மேலே தலைவர்கள் பிறந்த நாளுக்காக வெளியே விடுவது என்பது கொள்ளிக்கட்டையை எடுத்து முதுகைச் சொறிந்து கொள்வதாகி விடலாம். முன்னர் அப்படி நடந்தும் இருக்கிறது.

● ஆ. கமல்ராஜ், தாரமங்கலம்.

? அரசியல், சினிமா, இரண்டிலும் எதைப் பார்க்க முடியாது?

! உண்மையை!

● க.தா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.



• நெஞ்சைத் தொட்டவர்!



• யோசனை திலகம்!

● ஆர். சீதாராமன், சீர்காழி.

? எதிர்காலத்தில் அணுகுண்டு ஊழல் என ஒன்று ஏற்பட வாய்ப்பிருக்கிறதா?

! இப்போதே இருக்கிறது. அணு ஆயுதக் குறைப்பு ஒப்பந்தத்தின் கீழ் ருஷ்யாவும் அமெரிக்காவும் அணுகுண்டு ஏவுகணைகளைக் குறைத்துவிட, ஏறத்தாழ அதே நேரத்தில் ருஷ்யா பல சிறிய நாடுகளாகப் பிளவு பட, ருஷ்ய அணுகுண்டு/ஏவுகணைகள் வியாபாரம் செழிக்கிறது. அணுகுண்டு/ஏவுகணை தயாரிக்கும் ஆற்றல் இல்லாத நாடுகள் வாங்கி, தங்கள் விஞ்ஞானிகளுக்கு வழங்கி, ஆய்வு நடத்தச் செய்கின்றன.

● எஸ். சையது முகமது, போடிநாயக்கனூர்.

? 'இந்த நாட்டில் வீடு இல்லாமல் தவிக்கும் லட்சணக்கணக்கான மக்களுள் நானும் ஒருவன்' என்று பிரதமர் வாஜ்பேய் கூறியிருப்பது பற்றி?

! சே! நெஞ்சைத் தொட்டுட்டாருப்பா!

● கே.ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.

? சில நாட்களுக்கு முன்பு, 'மின்சார அவசர சட்டம் பற்றி தனக்கு எதுவுமே தெரியாது' என தம்பிதுரை கூறினார். இன்றைக்கு, 'நான் ராஜினாமாவா? எனக்கே தெரியாதே!' என ஆர்.கே. குமார் கூறுகிறாரே?

! முதல் நாள் அப்படிச் சொல்கிறார். மறுநாள் மறுத்து, பத்திரிகைகள்தான் அப்படிக் கதை கட்டிவிட்டன என்று கண்ணீர் விடுகிறார்.

## கலைஞர் - 75



அரசியல் வித்தகர், தமிழறிஞர், எழுத்தாளர், பத்திரிகையாளர். இத்தனைக்கும் மேல் அவர் ஒரு சக கார்ட்டூனிஸ்ட் என்பதில் பெருமைப்படுகிறேன்.

- மதி (கார்ட்டூனிஸ்ட்)

# நீங்கள் கேட்டவை - தராசு

## ஊழல் ஆரம்பிக்குமா...?

? 'அரசு விழாக்களில் தேசிய கீதத்தைப் பாட வேண்டும். ஒலிப் பேழைகளைப் பயன் படுத்தக் கூடாது' என்று தாமரைக்கனி கேட் டுக் கொண்டிருக்கிறாரே?

! ஆளுக்கொரு சுருதியில் தப்புத் தப்பாகப் பாடு வதைவிட ஒலிப் பேழைகளைப் பயன்படுத்து வதே உத்தமம்.

● எஸ். மணிவண்ணன், திண்டுக்கல் - 4.

? இன்றைய திரைப்படங்களில் கதை அம்சம் சரியில்லையென்றால் நீண்ட நாட்கள் ஓடுவ தில்லை... இதனால் மக்களின் ரசனை மாறி யிருப்பதாக வைத்துக் கொள்ளலாமா?

! கொஞ்சம்!

● எம். ஜெயமுருகன், ரிஷி வந்தியம்.

? அணுகுண்டு சோதனைக்கு எதிர்ப்புத் தெரிவித்த சோனியா, 'பொறுமைதான் உண்மையான பலம்' என்று கூறியுள்ளாரே!

! இப்படிப் பேசுபவர்களை நடைமுறைக்கு ஒத்துவராத லட்சியவாதிகள் என்று ஒதுக்கிவிடலாகாது. ராஜதந் திர ரீதியாகவும் இந்தப் பொறுமைதான் கைகொடுக் கும். இன்றைய உலகில் பலம் என்பது அணு குண்டுகளில் இல்லை; பொருளாதார மேம்பாட்டில்தான் உள்ளது.



• பிழைத்துக் கொள்வார்!

● வி. மோகன், நெல்லிக்குப்பம்.

? அணுகுண்டு வெடித்த இடத்தில் சக்தி கோயில் கட்டப்படும் என்று விச்வ ஹிந்து பரிஷத் கூறியுள்ளது பற்றி...?

! பக்கத்திலேயே இந்தியப் பொருளாதாரத்துக்கு சமாதியும் கட்டலாம்! டாலருக்கு எதிராக ரூபாய் மதிப்பு கிடுகிடுவென்று சரிகிறது. பொரு ளாதாரத் தடை என்று கூறாவிட்டாலும் ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா, ஜப்பான், உலக வங்கி என்று எல்லாமே பொருளாதார உதவிகளைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத் துள்ளன. நிகர விளைவு: இந்தியத் தொழிலதிபர்கள் லாப நோக்கில் மகிழலாம்; ஆனால் சராசரி இந்தியன் விலைவாசி உயர் வால் மேலும் மேலும் தாக்கப்படுவான். தரக் குறைவான பொருள்களே கிடைக்கும். மத்திய அரசு உடனடியாக விழித்துக் கொண்டு தக்க பரிகாரம் தேட வேண்டும்.



• நாளொரு கதை!

● எஸ். முரளி, குறிஞ்சிப் பாடி.

? பிரதமர் வாஜ்பேய் டிரை வர் என்றால், ஜெயலலிதா கண்டக்டராக உள்ளார் என காளிமுத்து கூறியுள் ளது பற்றி?

! பணப்பை ஜெ விடம் இருக் கிற மாதிரி, உதாரணம்! காளி முத்து பிழைத்துக் கொள் வார்!

● ஆர்.பி. ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்.

? இந்தோனேஷிய கலவரம் பற்றி?

! அது கலவரமல்ல.. ஆட்டம் போட்டுப் பொரு ளாதாரத்தைப் பாழடித்த சர்வாதிகாரத்துக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்த மாணவர் புரட்சி.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்கு 'எம்.ஜி.ஆர். கோட்டை' என்று பெயர் சூட்ட வேண்டும் என்று தாமரைக்கனி கொடுத் துள்ள யோசனை எப்படி?

! அபாயகரமான யோசனை. சரித்திரச் சின்னங்களின் பெருமைகளை சமகாலத்த வருக்கு மாற்ற ஆரம்பித்தால் முடிவே இருக் காது. கடைசியில் சரித்திரமே மாறி, பொய்யாகி விடும் ஆபத்து உண்டு.



• நியாயப்படுத்தி...!



• ...தியாகம் கோரி!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஆர். கல்யாண்,
20, (முதல் மாடி), முதல் தெரு,
வி.என்.ஆர். நகர்,
வடவள்ளி, கோவை - 641 041.

## கலைஞர் - 75



தமது சொந்த முயற்சி, உழைப்பு, தன்னம்பிக்கையில் வளர்ந்தவர். தம்மைத் தூக்கி விட யாரும் இல்லாத நிலையிலும் ஒரு தொண்டனாகத் துவங்கி ஒரு பெரும் இயக்கத்தின் தலைவராக வளர்ந்தவர். இளமையில் கல்வி பெற இயலாது போன சூழ்நிலையிலும் ஓர் இலக்கியவாதியாக, சீர்திருத்தவாதியாக, அரசியல் தலைவராக என்று பல்வேறு துறைகளிலும் சிறந்து தமிழகத்தின் சிறப்புக்குரியவராக இருக்கிறார். கலைஞரின் ஆட்சி முறை விமர்சனத்துக்குரியது என்றாலும் பொது வாழ்க்கை பாராட்டுக்குரியது.

—திண்டிவனம் ராமமூர்த்தி

## கலைஞர் - 75

கலைஞருக்குத் தமிழ் மொழி ஒரு வேதமே. இசை, இலக்கியம், சினிமா, அரசியல் என்று எந்தத் துறையை எடுத்துக் கொண்டாலும் அவற்றிலெல்லாம் கலைஞரின் மூல சக்தியாக இருப்பது தமிழ்தான். அவர் தோல்வியடைந்தாலும் உற்சாகம் குன்றி விடாமல் பார்த்துக் கொண்டது, மிகவும் நேசிக்கும் தமிழ் மொழிதான்.

— விஜய் சிவா



ஆசிரியத் தொழில் என்னை வளர்த்தது. நிறைய படிக்க - விஷயங்களைத் தெரிந்து கொள்ள எனக்கு நேரம் இருந்தது. எனினும் என்னுள்ளே ஒரு அதிருப்தி துவங்கத் தொடங்கியது. இதை (CREATIVE DISSATISFACTION) ஆக்கபூர்வமான அதிருப்தி என்பார்கள். அதாவது "இங்கே செய்வதெல்லாம் செய்தாய் விட்டது; இனி செய்வதற்கு ஒன்றுமில்லை" என்கிற மனோபாவம். இது வெறும் அதிருப்தி அல்ல; வெறுப்பு அல்ல. நாம் அடுத்த கட்டத்திற்குப் போக வேண்டியதன் அவசியத்தை நமது உள்ளுணர்வு உணர்த்துகிறது.

வாழ்வில் பலரும் இதைப் புரிந்து கொள்வதில்லை. புரிந்து கொண்டாலும் புதிய துறையில் இறங்க ஒரு பயம் ஏற்படும்; "ரிஸ்க்' எடுத்தால் - வேலையை விட்டால் - குடும்பம் நாளைக்குச் சாப்பாட்டுக்கே கஷ்டப்படுமோ," என்கிற பயம். சொல்லப் போனால் மனிதனுக்குத் தன்

# அக்னிப்பரீட்சை!

மீதே நம்பிக்கை இருக்காது; அதனால் சவால்களை எடுக்க முன் வர மாட்டான்.

ஓரிடத்தில் படித்தேன். டைரக்டர் பாலசந்தரின் வாழ்வில் ஒரு கால கட்டம். அதாவது, முழு நேரமாக சினிமாத் துறையில் இறங்க வேண்டும் என்ற ஆர்வம் ஒரு பக்கம், மறுபக்கம் அக்கவுண்டண்ட் ஜெனரல் அலுவலகத்தில் உள்ள வேலையை விட்டு விட வேண்டுமே - இது பத்திரமான, பாதுகாப்பான வேலை ஆயிற்றே, - நல்ல சம்பளம், மேலே பதவி உயர்வுக்கான வாய்ப்புள்ள இடமாயிற்றே - என்ற யோசனைகள்.

ஏ.வி. மெய்யப்ப செட்டியார் அவர்களிடம் போய் யோசனை கேட்கிறார். சற்று நேரம் பேசிய பிறகு இவரது தயக்கத்தைக் கண்ட ஏவி.எம். கூறுகிறார் "உங்களுக்கு உங்கள் மீதே நம்பிக்கை இல்லாவிடில், நாங்கள் உங்களோடு ஒரு ஐந்தாண்டுகளுக்கு ஒப்பந்தம் செய்து கொள்கிறோம். எங்களுடன் நீங்கள் இருக்கலாம்."

அதன் பிறகுதான் - தன்னைப் பற்றி அவர் வைத்திருக்கும் நம்பிக்கையைப் பார்த்த பின் - பாலசந்தர் துணிந்து இறங்குகிறார்.

நான் புதிய துறையில் இறங்க வேண்டிய அவசியம் என்ன? நான் ஆசிரியத் தொழிலில் சுற்றுப்புறச் சூழல் போன்ற புதிய பாடங்களைச் சொல்லிக் கொடுத்தேன். சிறந்த ஆசிரியர் விருது பெற்றேன். ஆராய்ச்சிப் பேராசிரியராக வேலை பார்த்தேன். வேறு துறையில் - கல்வித் துறையில் மான்யம் பெற்று ஒரு புதிய கல்வித் திட்



அடுத்தது...?

டத்தை அறிமுகப்படுத்தினேன்.

மலை ஏறுகிறோம்; ஏறி முடித்த பின் என்ன இருக்கிறது? வேறு மலைகள் - எதில் ஏறலாம் என்று தேடுவது போல, தொழிலில் இறங்க வேண்டும்' என்ற எண்ணம் என்னுள் அரித்துக் கொண்டிருந்தது.

ஆசிரியத் தொழிலில் என் அறிவுத் திறனுக்கு மட்டுமே வாய்ப்பிருந்தது. மற்ற எல்லாத் திறமைகளுக்கும் வாய்ப்பில்லை. மேலும் தொழில் துறையில் வருமானம் - வானமே எல்லை என்பது போல. நானோ என் நண்பர்களைத் தொழிலில் இறங்குமாறு ஆலோசனை கூறிக் கொண்டிருந்தேன். படிப்பை முடித்துவிட்ட எனது மூத்த மகன் சித்தார்த்தனும் எனது மனைவியும் குடும்பமாக ஒரு தொழிலைத் துவங்கி நடத்திய அனுபவமும் இருந்தது. அந்தத் தொழில் விரிவடைந்த வேகத்தைக் கண்டு அதிகக் கடன் வாங்கி, விரிவுபடுத்த அஞ்சி, தொழிலை நிறுத்தி விட்டோம்.

இதுவும் என்னை உறுத்திக் கொண்டிருந்தது. ஆனால் கல்லூரி ஆசிரியத் தொழிலில் இருந்து வேறு தொழிலுக்கு செல்வதில் பெருங் கஷ்டம் இருந்தது. புதிய துறையில் வேலை கொடுக்கப் பெரிதும் தயங்கினார்கள். ஓராண்டு கல்லூரியில் இருந்து கொண்டே முயன்றும் வேலை கிடைக்கவில்லை. நான் ஆசிரியர் வேலையை விட்டுவிடத் தீர்மானித்தேன். அதாவது விட்டு விட்டால் ஏதாவது கிடைக்கும் என்கிற நம்பிக்கை. "வேலையை விட்டு விடும்வரை நமது முயற்சி முழுமையாக இருக்காது" என்று துணிந்து வேலையை விட்டேன்.

தொழிலில் உச்சக் கட்டத்திற்குத் தலைமை நிர்வாகியாகப் போனவர்கள் எல்லாம் பெரும்பாலும் விற்பனையில் இருந்தவர்கள். அடுத்து வரவு செலவுக் கணக்கைப் பார்த்துக் கொள்ளும், தணிக்கையாளர்கள். மூன்றாவதாக மிகக் குறைந்த நபர்கள் - வழக்கறிஞர்களாக இருந்தவர்கள் தொழிலுக்கு ஆலோசனை சொன்னவர்கள் தலைமை நிர்வாகியாக வந்திருக்கிறார்கள்.

எனவே நான் விற்பனைப் பிரிவைத் தேர்ந்தெடுத்தேன். வேலையை விட்ட பிறகும், இரண்டு மாதம் வரை எந்த வேலையும் கிடைக்கவில்லை. பல இடங்களில் "உங்கள் படிப்பும் தகுதியும் எங்கள் நிறுவனத்தின் தேவைக்கு ஏற்றதல்ல" என்ற கடிதம் வரும். அது உண்மையும்கூட.

மூன்றாம் மாதத்தில், ஒரு பெரிய ரசாயன கம்பெனியில் விற்பனையாளர் வேலைக்கு என்னை வந்து சந்திக்குமாறு கடிதம் வந்தது. மாநில நிர்வாகி எழுதி இருந்தார். அவரது மேலதிகாரி இங்கே வருவதாகவும், ஹோட்டலில் தங்கி இருப்பதாகவும் எனவே அங்கே பேட்டிக்கு வருமாறும் எழுதி இருந்தார்கள்.

"இவ்வளவு படிப்பு படித்துவிட்டு.." என்ற ஒரு தயக்கமும் கூச்சமும் என்னுள் இருந்தது. கம்பெனி நிர்வாகிகள் இரண்டு பேரும் சேர்ந்து என்னைப் பல கேள்விகள் கேட்டார்கள். எதுவும் வேதியல் பாடத்தில் அல்ல. "எப்படி நீங்கள் விற்பனையில், எதிர்ப்பைச் சமாளிப்பீர்கள்?" என்பது போன்ற கேள்விகள்.



டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

கலைஞர் - 75

கலைஞர் நல்ல நிர்வாகி. நுணுக்கமான விஷயங்களையும் உன்னிப்பாக கவனித்து செயல்படுவார் என்று அவரிடம் வேலை செய்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் கூறிக் கேட்டிருக்கிறேன். எதையும் வெகு வேகமாக கிரகித்துக் கொள்ளும் தன்மை வாய்ந்தவர். அரசியல் சாணக்கியம், இலக்கிய பிரக்ஞை இரண்டும் இணைவதென்பது அபூர்வம். 'அறிவாளிகளின் கையில்தான் அரசியல் இருக்க வேண்டும்' என்று தத்துவஞானி ப்ளாட்டோ கூறினார். இவ்வளவும் கொண்ட கலைஞர், தான் சார்ந்திருக்கும் கட்சி நிலையை விட்டுக் கொடுக்காதவராகவும் இருக்கிறார். இது அவரது பலமாகவும் இருக்கலாம்; பலவீனமாகவும் இருக்கலாம்!

— இந்திரா பார்த்தசாரதி

நான் பதில் சொல்லி வந்தேன். கடைசியாக என்னை மடக்கு கின்ற மூன்று கேள்விகளைப் பிரம்மாஸ்திரங்களாகத் தொடுத் தார்கள்.

"நீங்கள் அதிகம் படித்திருக்கிறீர்கள். இவ்வளவு படிப்பு இந்த வேலைக்குத் தேவை இல்லை" என்றார்கள்.

"உண்மைதான். ஆனால் என்னுடைய இவ்வளவு படிப்பும் கெமிக்கல் சம்பந்தமான எல்லாவித கேள்விகட்கும் பதில் சொல் லுமே, அதை கவனித்தீர்களா? ஒரு சாதாரண விற்பனையாளர் சம்பளத்தில் இவ்வளவு விஷய ஞானத்தைப் பெறுவது உங்கள் கம்பெனிக்கு உதவுவதாகத்தானே இருக்கும்!"

"நாங்கள் இளைஞர்களைத்தான் தேர்ந்தெடுக்கிறோம். பயிற்சி கொடுத்து தயார் செய்கிறோம். உங்களுக்கோ வயது..."

"இந்த வயதில் எனக்கேற்பட்டிருக்கும் அனுபவங்களைக் கொண்டு நான் சகஜமாக, அனுபவ ஞானத்துடன் எனது வாடிக்கையாளர்களிடம் பேச முடியும். ஒரு இளைஞருடன் பேசுவதைவிட எனக்கு அதிக மரியாதை கொடுப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்."

"விற்பனையில் எந்த அமெரிக்க நிறுவனங்களும் வெளி நாட்டவர்களை எடுப்பதில்லை; நீங்கள் பார்த்திருப்பீர்கள். காரணம் அவர்களால் வாடிக்கையாளர்களது கலாசாரத்துடன், மன நிலையுடன் ஒன்ற முடியாது. எனவே உங்களை ஏற்றுக் கொள்ளாத நிலைதான் எங்கும் இருக்கும்..."

"இல்லை இல்லை! அது அப்படியல்ல! நான் வேறு நாட் டவன்; உண்மைதான். அதனால் என்னை நன்கு நினைவு வைத்துக் கொள்வார்கள். விற்பனையாளரை நினைவு வைத்துக் கொள்வது மிக முக்கியமான விஷயம். அவர்களுக்குத் தேவை ஏற்படும்போது என் நினைவும், எனது தொழில் அனுபவமும் தான் அவர்களுக்கு நினைவு வரும். எனவே அது எனது விற்பனைக்கு சாதகமாகத்தான் இருக்கும்" என்றேன்.

இந்த ஆள் சொல்வது சரிதான் என்று பட்டிருக்க வேண் டும். மேலும் இவர் என்ன பெரிய 'விடாக்கண்டனாக' இருப்

கலைஞர் - 75

களைப்பால் சலியாத உழைப்பு; சோதனையில் சாயாத நெஞ்சுறுதி; தோல்வியால் துவளாத மனம்; எப்படியும் வெற்றி பெற்றே தீர வேண்டும் என்கிற போர்க்குணம்; அழிக்க வரும் விதியைத் தடுத்து நிறுத்தும் மதி நுட்பம்; இரவு சாயும்போது உடனிருப்பவர் எல்லோரும் தூங்க, தாம் மட்டும் விழித்திருந்து, மறுநாள் யுத்தத் துக்கு வியூகம் வகுக்கும் ராஜதந்திரம்! இதுதான் கலைஞர்.

— பீட்டர் அல்போன்ஸ்

பார் போலிருக்கிறதே என்றும் எண்ணியிருக்கக் கூடும். மூவரும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தோம்.

'விடாக் கண்டன்' என்றதும் என் நினைவுக்கு வருவது தொழிலதிபர் ஏ.சி. முத்தையா, எனக்கு 6 மாதம் முன்பாக எழுதியிருந்த கடிதம்தான். கடிதத்தின் முதல் வாக்கியமே "நான் உங்களது விடாமுயற்சியையும் சளைக்காத மனத்தையும் கண்டு அதிசயப் படுகிறேன்" என்று துவங்கி இருந்தார். இந்த வாசகம் என் மனத்தில் தேங்கி நின்று கொண்டிருந்தது; எனக்கு மேலும் தன்னம்பிக்கையை அளித்தது; உற்சாகமும் பெருமையும் தந்தது.

"ஏதோ கதை முடிந்தது; வேலை கிடைக்கும்!" என்றெண்ணிய போது, அங்கிருந்த மேலதிகாரி தன் பையிலிருந்த பேனாவை எடுத்தார். என் கையில் கொடுத்தார். "இதை எனக்கு நீங்கள் விற்க வேண்டும், இப்போது!" என்றார்.

நல்லவேளை அந்த ஹோட்டலில் இருந்த டெலிவிஷன் பெட்டியை எடுத்து விற்கச் சொல்லாமல் இருந்தாரே என்று ஆனந்தப் பட்டேன். எனினும் ஒரு கோபம். "நமது படிப்பென்ன, அனுபவமென்ன, என்ன காரியம் செய்கிறார் இந்த மனிதர்?" என்ற ஒரு வேகம். அப்போது எனக்குத் தெரியாது. இந்த நிறைய சம்பளம் வாங்கும் இரண்டு அதிகாரிகளும் பத்தாவதுகூடப் படிக்காதவர்கள் என்பது!

மறுகணமே, "தொழிலில் இறங்க வேண்டும் என்பதுதான் நம் லட்சியம். இதற்கு இது ஒரு நுழைவாயில். அதைப் பார். இதைப் பார்க்காதே. நாளைக்கு இவர்கள் எல்லாம் யாரோ? நீ எங்கோ? என்பன போன்ற எண்ணங்கள் எழுந்து எனக்கு ஒரு அசாதாரண தெம்பை, உற்சாகத்தை ஊட்டின.

மேலும் ஒரு எழுத்தாளனுக்குப் பேனாவை விற்பதா பெரிய காரியம்? பேனாவைப் பற்றிய வர்ணனையில் அவர் சொக்கிப் போனாரோ என்னவோ எனக்குத் தெரியாது - அமெரிக்கர்கள் நம்மைப் போல் அவ்வளவு தூரம் உணர்ச்சியை வெளியில் காட்ட மாட்டார்கள் - மேலதிகாரி எழுந்து என்னுடன் கை குலுக்கினார். "வாழ்த்துக்கள்!.... எப்போது சேர முடியும்?" என்றார்.

(தொடரும்)

## கலைஞர் - 75



தனிப்பட்ட முறையில் நான் தமிழக முதல்வரிடம் பழகியதில்லை என்பதால் அவரது குணநலன்களை அதிகம் அறிந்ததில்லை. என்றாலும் ஒரு திருமணத்திற்குச் சென்றிருந்தபோது, அங்கு வந்த அவர், ''என்னம்மா இப்போ உடல் நிலை பரவாயில்லையா?'' என யாரோ பக்கத்தில் இருப்பவரைத்தான் கேட்கிறார் என்று நினைத்து பார்வையைச் சுழல விட்டேன். ''உங்களைத்தான்'' என்றவுடன் ஒரு நிமிடம் திக்கென்று ஆகி விட்டது. அதுவரை நேரடியாகச் சந்தித்திருக்காத என்னைப் பற்றி அறிந்து கொண்டு அவர் விசாரித்தது, எழுத்தாளர்களிடம் அவருக்கு உள்ள அக்கறையை உணர்த்தியது. மனு ஒன்றைக் கொடுப்பதற்காக வேறு ஒரு சந்தர்ப்பத்தில் பத்திரிகையாளர்கள் அவரை சந்திக்கச் சென்றிருந்தோம். தாமதிக்காமல் சந்தித்து, பேனாக்காரன் மீது கொண்ட பிடிப்பை மீண்டும் நிருபித்தார். அவரது கட்சி, அரசியல் இதெல்லாம் கிடக்கட்டும்; அந்த அழகுத் தமிழுக்காக கலைஞர் எங்களுக்கு எப்போதுமே தேவை.

— அனுராதா ரமணன்

## கலைஞர் - 75



முதல்வர் என்ற முறையில் அவருக்குள்ள பல வேலைகளுக்கு நடுவே கிரிக்கெட்டிற்கு அவர் ஒதுக்கும் நேரத்தைப் பார்க்கும்போது, அவரின் கிரிக்கெட் ஆர்வம் எத்தகையது என்று புலப்படும். நாம் அவரை நல்ல திட்டங்களுடன் அணுகும்போது, நிச்சயம் கிரிக்கெட்டிற்கும் பிற விளையாட்டுகளுக்கும் அவரால் நல்ல உதவிகள் செய்ய முடியும்.

— ஸ்ரீகாந்த்

எழுபத்தாறு வயதான இந்தோனேஷிய அதிபர் சுகார்தோ சமீபத்தில் பதவி விலகியிருக்கிறார். இந்த ராஜினாமா பற்றி நம்மூர் அரசியல்வாதிகள் என்ன நினைக்கிறார்கள்? கற்பனைக் குதிரையில் வேகமாகச் சென்று கருத்து கேட்டோம்.



தொடர்ந்து 32 வருடங்கள் இந்தோனேஷியாவை ஆண்டு வந்திருக்கிறார் சுகார்தோ. அதனால்தான் இவ்வளவு கலாட்டாவும் களேபரமும். யாரையுமே தொடர்ந்து இவ்வளவு ஆண்டெல்லாம் ஆள விடக் கூடாது என்ற புத்தி இப்போதாவது நம் மக்களுக்கு வந்தால் சரி. எந்த 'ஜோதி'யுமே தொடர்ந்து எரிந்தால் அதற்கு மதிப்பிருக்காது.





சொத்துக் குவிப்பையெல்லாம் ஒரு இஷ்யூவாக எடுத்துக் கொள்வது அனாவசியம். என்றாலும் சுகர்ணோவின் பெண் மேகாவதியின் எதிர்ப்பும் இந்த ஆட்சியை ஆட்டம் காண வைத்தது என்பதை வாஜ்பாய் கவனத்தில் கொள்ள வேண்டும்.

# அபிப்ராய சிகாமணிகளின் அற்புத மொழிகள்!







**கலைஞர் - 75**



கலைஞர் முதல் 25 வருடத்தில் 'கவாஸ்கர்' போல நிதானமாக ஆடினார். அடுத்த 25 வருடத்தில் 'சச்சின் டெண்டுல்கர்' போல அதிரடி ஆட்டம் ஆடினார். அடுத்த 25 வருடம் அஸார் போல பொறுமையாக ஆடுகிறார். நிச்சயம் சதம் அடிப்பார்!

— ஒய். ஜி. மகேந்திரன்







— குல்லூ

## கலைஞர் — 75

திரையுலகினருக்கு விருதுகள் வழங்குதல், மானியம் மூலம் உற்சாகப் படுத்துதல், பிரச்னைகளை சுமுகமாகத் தீர்த்து வைத்தல், நலிந்த கலைஞர்களின் குடும்பங்களை வாழ வைப்பது என அக்கால அரசர்களையே நினைவு படுத்துகிறார்.



— பிலிம் நியூஸ் ஆனந்தன்

❖ 'இருவர்' படத்துக்குப் பின் மணிரத்னம் ஆளையே காணோமே என்று நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு: இந்தியில் 'தில்ஸே' என்று ஒரு படத்தை எடுத்து முடித்திருக்கிறார் மணி. ஷாருக்கான் நடித்திருக்கும் 'தில்ஸே' படத்தை இந்தியிலிருந்து தமிழுக்கு இறக்குமதி செய்யவும் இருக்கிறார். தமிழில் டப்பிங் பண்ணும் வேலை மும்முரமாக நடந்து கொண்டிருக்கிறது.

❖ பாலுமகேந்திராவின் கண்டுபிடிப்பு ஈஸ்வரி ராவ் இப்போது நடித்துக் கொண்டிருக்கும் ஒரே படம் 'குரு பார்வை'. பாலுவின் 'ராமன் அப்துல்லா'விற்குப் பின் தமிழ் சினிமாவே தன் பக்கம்தான் என்று நினைத்துக் கொண்டிருந்தார் ஈஸ்வரிராவ். ஆனால், நடந்தது வேறு. யோசித்தார். 'குரு பார்வை'யில் கவர்ச்சி காட்டி கலக்கி விட முடிவு செய்து, அங்ஙனமே செய்தார். படத்தின் ஆல்பத்தைப் பார்த்த விநியோகஸ்தர்கள் வியந்து போனார்கள். சென்ஸாரை மீறி இந்தக் கவர்ச்சிக் காட்சிகள் படத்தில் இடம்பெறுமா? என்கிற சந்தேகமும் கூடவே. படத்தின் கதையை விட்டு விட்டு அந்தக் காட்சிகளைப் பற்றி மட்டுமே எல்லோரும் பேசுவது ஏனோ படத்தின் தயாரிப்பாளரும் இயக்குனருமான மனோஜ் குமாருக்குப் பிடிக்கவில்லை. சென்ஸாருக்குப் போவதற்கு முன்பே அத்தகைய காட்சிகளை 'கட்' பண்ணி விட்டார். இப்போது படத்தை வாங்கிய விநியோகஸ்தர்கள் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

❖ வருடக்கணக்காய் படமெடுப்பது, கோடிக் கணக்கில் அள்ளித் தெளித்து பிரம்மாண்டங்கள் காட்டி பிரமிப்பூட்டுவது, இவற்றிற்கெல்லாம் ஒரு பெரிய கும்பிடு போட்டு விட்டு ஆறே மாதத்தில் ஒரு படத்தை எடுத்து ரிலீஸ் செய்து காட்டுகிறேன் என்கிற பிடிவாதத்தோடு களத்தில் குதிக்க இருக்கிறார் ஷங்கர். ஹீரோவாக நடிக்கப் போகிறவர் விஜய்காந்த். ஆறே மாதத்தில் படத்தை முடித்துக் காட்ட வேண்டுமென்றால் ஏ.ஆர். ரஹ்மானின் பக்கம் எட்டிக் கூடப் பார்க்க முடியாது. அதனால் இசைஞானியிடம் தஞ்சம் அடைந்திருக்கிறார் ஷங்கர்.

❖ கௌசல்யாவிடம் பார்ப்பவர்களெல்லாம் துக்கம் விசாரிப்பது போல் 'என்ன ரொம்ப

# தமிழ் 'பேச'ப் போகிறார் ஷாருக்கான்!



• ரேஷ்மா

ஒல்லியா இருக்கீங்க' என்று விசாரிக்க ஆரம்பிக்க, உணவுக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி இஷ்டத்திற்குச் சாப்பிட்டார். உடம்பு கொஞ்சம் பெருத்தது. 'உன்னுடன்' படத்தில் ஒல்லி கௌசல்யா குண்டு கௌசல்யாவாக வருகிறார். இப்போது குண்டானவுடன் "என்ன குண்டாயிட்டீங்க?" என்று பார்ப்பவர்களெல்லாம் கேட்க ஆரம்பிக்க, தலையைப் பிய்த்துக் கொள்ளாத குறைதான்! தமிழ் சினிமா ரசிகர்களுக்குப் பிடித்தது ஒல்லியா? குண்டா? என்று வாக்கெடுப்பு நடத்தாமல் இருந்தால் சரி.

❖ ரேஷ்மா ஒவ்வொரு வருடமும் ஒரு பெயர் மாற்றிக் கொண்டு நடித்துக் கொண்டுதானிருக்கிறார். ஆனால், அதிர்ஷ்டம் என்னவோ விலகிப் போய்க் கொண்டே இருக்கிறது. குடியிருக்கிற இடம் காரணமோ என்று பல வீடுகள் மாறியும் பார்த்தார். அதுவும் ஒர்க்-அவுட் ஆகவில்லை. இனி கடவுள் விட்ட வழி என்று கம்மென்றிருக்கிறார். இந்த வருடம் ரேஷ்மா நம்பிக் கொண்டிருக்கும் படம் கரணோடு ஜோடி சேர்ந்து நடிக்கும் 'மறவாத கண்மணியே'. இந்தப் படத்திலாவது மறக்காமல் அதிர்ஷ்டக் காற்று ரேஷ்மா பக்கம் வீசுமா? சினிமாவை நம்பி குடும்பத்தை ஓட்ட முடியாது என்று சின்னத் திரை பக்கமும் அடிக்கடி முகம் காட்டுகிறார். சினிமாவை விட சின்னத் திரையில் நடித்துத் தான் நிறைய சம்பாதிக்கிறேன் என்கிறார் ரேஷ்மா. ⊙

— மஹேந்த்


• கௌசல்யா

• ஈஸ்வரி ராவ்

## கலைஞர் - 75



கருணாநிதி ஒரு தலைசிறந்த நிர்வாகி. ஒரு தைரியமான முடிவுக்கு வரத் தயங்காதவர். நல்ல பண்பாளர். அவர் இசை மரபில் வந்தவர் தான். அதிலேயே இருந்திருந்தால், அதிலேயும் உச்சத்தில்தான் அவர் இருந்திப்பார். சமீப காலமாக நமது தமிழ்நாட்டில் அநேக சீர்திருத்தங்களைச் செய்து சுபிட்சப் பாதைக்குத் திட்டமிட்டு வழிவகுத்தவர். இந்தப் பவள விழாவில் அவருக்கு நல்ல ஆரோக்கியத்தையும் திடகாத்திர சரீரத்தையும் இறைவன் அருள வேண்டும்.

— செம்மங்குடி சீனிவாச அய்யர்.

## கலைஞர் - 75

தோல்வித் தீ எத்தனை முறை சுட்டெரித்த போதும் உயிர்த்தெழும் அரசியல் ஃபீனிக்ஸ்!

— ராஜேஷ்குமார் (நாவலாசிரியர்)



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பெரும்பாலான கிரகங்கள் சப்போர்ட் பண்ணுது. ஸோ, எடுக்கிற காரியங்கள்ல வெற்றிக்குப் பஞ்சமில்லை. பேச்சு சாதுர்யத்தால புகழ், செயல் நேர்த்தியால பெருமை, பயணத்தால ஆதாயம் – இதெல்லாம் உண்டு. பெண்களுக்குப் புதிய பொருள் சேர்க்கை இருக்குது. பணப் பிரச்னை இல்லாத வாரம்.

**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

மனசுல ஏதாவது கவலை இருந்துட்டே இருந்தாலும் உங்க தொழில்ல அதனால பாதிப்பு இருக்காது. சீனியர் சிகாமணியான உங்களுக்கு மேலதிகாரிகளோட ஆதரவு கட்டாயம் உண்டு. சிலருக்கு, மகான்கள் தரிசனம் கிடைக்கும். சிலபேர் வீடு வாங்கற யோகம் கூட உண்டு. சாதாரணமான பொருளாதார நிலைதான். ஆனாலும் சமாளிச்சிடுவீங்க.

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

வெளி நாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு ஆதாயமான வாரம். வர்த்தக ரீதில புது ஒப்பந்தங்கள் கையெழுத்தாகும். வீட்டுல கல்யாணம் குதிரலாம். சிலர் வாகனம் ஏதும் வாங்கலாம். உஷ்ண சம்பந்தமான நோய் ஏதாவது வயசானவங்களுக்கு வரலாம். எதிர் பாராத பணவரவை எதிர்பாருங்க. அம்மணிகளுக்கு இது புதுப் புடைவை வாரம்!

**சிம்மராசிக்காரரான கிரிக்கெட் வீரர் குருவில்லாவுக்கு எதிர்பாராத புதிய வாய்ப்புகள் வருமாம். (மறுபடியும் டீமுக்குள்ள வரப் போறாரா?)**



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

தொழில்ல இருந்து வந்த மந்த நிலைமை மாறி, சூடு பிடிக்கும். கலைத்துறையினருக்கு ஓஹோன்னு பேரும் புகழும் சேரும். நீண்ட நாள் லட்சியம் ஏதாவது இருந்தா இப்ப செயல்படுத்தப் பாருங்க. எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் துறைக்காரங்களுக்கு பிரமாதமான தொழில் வளர்ச்சி உண்டு. ஷேர் மட்டும் இந்த வாரம் வேண்டாம்.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

ரொம்ப நாளா இழுத்தடிச்ச கோர்ட் கேஸ் ஏதாவது இருந்தா இப்ப சால்வ் ஆயிடும். புதிய நண்பர்கள்கிட்ட எச்சரிக்கையா இருங்க. சிலர் வெளியூர் டிரான்ஸ்பருக்குத் தயாராகறது நல்லது. விளையாட்டுத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு, எதிர்பாராத புதிய வாய்ப்புக்கள் வரும். காவல் துறையினர் உஷாரா இருக்கணும். மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகலாம். பெண்களுக்கு இது ஜாலியான வாரம்.

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

விழிப்பா இருக்கணும். புதிய முயற்சிகள் எதுவும் இப்ப வேணாம். அலுவலக நண்பர்கள்ட்ட எச்சரிக்கையா இருங்க. 'போட்டு'க் குடுத்து மாட்டி விடுவாங்க. முதலீடுகள் வேண்டாம். கடன் வாங்காதீங்க. கூடியவரை இரவுப் பயணத்தைத் தவிர்த்துடுங்க. மாணவர்கள் ரொம்பக் கடுமையா உழைக்க வேண்டி

# நடக்குமென்பார், நடக்கும்!



'கலைஞர்' என்ற பட்டத்தைப் பெற முற்றிலும் தகுதியான, கலை ரசனை மிகுந்த தலைவர். அவருடைய திரைக்கதை - வசனங்களைப் பல படங்களில் ரசித்தவள் என்ற முறையில், அவருடைய எழுத்தின் வீச்சைக் கண்டு பிரமித்திருக்கிறேன். அவருடைய உரையாடல்கள் strong and to the point ஆக இருக்கும். அதில் அவருடைய தனித்திறமை பளிச்சிடும்.

**— சுதா ரகுநாதன்.**

வரும். பெற்றோர் உடல் நலத்துல அக்கறை காட்டுங்க.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

ஏற்றுமதி வியாபாரம் செய்யறவங்களுக்கு ஆதாயமான வாரம். அலுவலக ரீதில சிலர் டூர் போக வேண்டி வரலாம். டிஏ நிறைய கிடைக்குமில்ல? 'உல்லாஸ்' பண்ணுவீங்க! சினிமா, பீச்னு சுத்தற யோகம் உண்டு. பெண்களுக்கு, பிறந்த வீட்டினரால் ஏதோ ஒரு நன்மை நடக்கப் போவுது. எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும் ஏற்றம் பெறுவாங்க. மனசுல மகிழ்ச்சியும் பாக்கெட்ல பணமும் எப்பவும் இருக்கும்.

**விருச்சிகம் :** *(விசாகம் 4 - ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உடல் நலன் திருப்தியா இருக்கும். சோம்பலுக்கு இடம் குடுக்காதீங்க. வீட்டுல நீங்க வெச்சதுதான் சட்டம். ஆனா எல்லார் கருத்தையும் கேளுங்க. மனைவி உடல் நலத்தில் கொஞ்சம் பிரச்னை வரும், கணவர்கள் ஜாக்கிரதை! பணப் பிரச்னை இருக்காது. மனக் குழப்பங்களுக்கு இடம் குடுக்காதீங்க. மூத்த மகனால பெருமைப்படறாப்பல ஏதாவது சம்பவம் நடக்கலாம்.

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

திறமையால முன்னுக்கு வர்ற உங்களுக்கு இந்த வாரம் தொட்டதெல்லாம் துலங்கற நேரம். ஆனா, புகழுக்கு மயங்கிடாதீங்க. பணப் பிரச்னை இருக்காது. ஆனா, கண்ட செலவுகள் வேணாம். வாலிபர்களுக்கு வீட்டுல திருமணப் பேச்சு ஆரம்பமாகும். கன்னிகளுக்குக் காதல் கைகூடும். ஷேர், மனைன்னு எதுல இன்வெஸ்ட் பண்ணாலும் பலன் பிரமாதமா இருக்கும். லாட்டரி மட்டும் வேண்டாம்.

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

அறிவாற்றல் பிரமாதமா இருக்கும். சுறுசுறுப்பு கூடி, காரியங்கள்ல இதுவரை இருந்து வந்த மந்தகதி மாறிடும். சிலர் ஃபாரின் போக சான்ஸ் இருக்கு. வெளியூர் பயணத்துல எச்சரிக்கை முக்கியம். பிவேர் ஆஃப் பிக் பாக்கெட்ஸ்! பெண்களுக்குத் திருமண வாய்ப்பு கூடிவரும். மாணவர்களுக்கு உல்லாசமான வாரம். வயசானவங்களுக்கு மகான்கள் தரிசனம் கிடைக்கலாம்!

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உடல் நலன் சீராகும். மனசுல குழப்பங்களையும் கவலைகளையும் வளர்த்துக்காதீங்க. மூத்த மகனால நன்மை உண்டு. சிலருக்கு உறவினர் வருகையால் மன ஆறுதல் - மகிழ்ச்சி கிடைக்கும். பணப் பிரச்னை இருக்காது. ஸ்பெகுலேஷன் வேணாம். இன்வெஸ்மென்ட்ஸும் இப்ப வேணாம். பெண்களுக்கு பக்தி மார்க்கத்துல மனசு போகும். குழந்தைகள் உடல் நலத்துல கவனம் செலுத்துங்க. யார் மனசும் புண் படறாப்பல பேசாதீங்க.

**மீனம் :** *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

ஆற்றல் மேலோங்கி இருக்கறதால செயல் திறன் பிரமாதமா இருக்கும். மேலதிகாரி பாராட்டு, தாராள பணப்புழக்கம் உண்டு. சிலருக்கு வீடு மாறுதல் இருக்கும். பெண்கள், வீண் வம்புல தலையைக் கொடுத்து, இன்டாடற வாய்ப்பு உண்டு, உஷார்! வியாபாரிகளுக்கு இது லாபகரமான வாரம். அரசு ஊழியர்கள் தம் நீண்ட நாள் கோரிக்கை ஒண்ணு நிறைவேறப் பெறுவாங்க.

**ஜூன் 3 முதல் 9 வரை**

### போட்டி முடிவு — 6

*அந்த வி.ஐ.பியின் பெயர் வாஜ்பேய். அவருக்குப் பிடித்த ஐட்டம் கிச்சடி! சரியான விடை எழுதியவர்களுள் குலுக்கலில் தேர்வாகி, பட்டுப் புடவை பரிசு பெறுபவர்:*

**கே. கணேசன், 12, வார்டு மேலத் தெரு, பத்திர ஆபீஸ் எதிர்ப்புறம், குதிரைவண்டிக்காரர் வீடு, ஆண்டிபட்டி, மதுரை மாவட்டம் — 625 512**

## கலைஞர் - 75

?

75-வது வயதில் அடியெடுத்து வைக்கும் கலைஞரை வாழ்த்துவதுதான் பண்பாடு. அப்படி வாழ்த்தினால் எங்கள் கட்சிக்குள் பிரச்னையாகிவிடும். வேண்டாமே, ப்ளீஸ்

— அ.தி.மு.க.வில் முக்கிய பொறுப்பில் உள்ள ஒரு தலைவர்

**படிப்பு ப்ளஸ்டூதான் என்றாலும் சமீபத்தில் ஹிமாசலப் பிரதேசம் – சோலானில் நடைபெற்ற இந்தியக் காளான் கருத்தரங்கில் பங்கேற்று அறிஞர்கள் வியக்கும் வண்ணம் உரையாற்றியுள்ளார் நம்மூர் கிராமத்து இளைஞர்!**

## இந்த வார இளைஞர் : சண்முகம்

எத்தனையோ பேர் செய்யும் தொழில்தான். இவர் மட்டும்

# காளான்

வளர்ப்பில் அப்படியென்ன அதிசயத்தை செய்துள்ளார்?

“சொன்னா நம்பமாட்டீங்க... நான் முதன் முதலில் காளான் அறுவடை செஞ்சு ஈரோடு மெயின் சூப்பர் மார்க்கெட்டில் ஒரே ஒரு கிலோ விற்பனைக்குக் கொடுத்த போது வெறும் 200 கிராம் காளான் மட்டுமே விற்றது. மீதி 800 கிராம் குப்பைக்குத்தான் போனது... ஆனால் இன்று அதே சூப்பர் மார்க்கெட்டில் விற்கும் காளானின் அளவு என்ன தெரியுமா...? தினம் 50 கிலோ! அது கூடப் பற்றாக்குறைதான். தேவைக்கு ஏற்ப இன்று உற்பத்தி செய்ய முடிவதில்லை என்றால் பாருங்களேன்...!”

1991-ல் துவங்கி இதையே உயிர் மூச்சாகச் செய்து வரும் இந்த இளைஞரின் பெயர் சண்முகம். ஈரோடு மாவட்டம் ஈங்கூர் அருகே செய்குளம் கிராமத்தைச் சேர்ந்தவர். இத்துறைக்கு வரும் முன் பனியன் கம்பெனி ஊழியர்.

இப்போதெல்லாம் கல்யாண மண்டபம் புக் பண்ணுவதற்கு முன் செய்குளத்தில், “காளானுக்கு ஆர்டர் செஞ்சுட்டீங்களா...?” என்றுதான் கேட்கிறார்களாம். செய்குளம் காளான் அவ்வளவு பிரசித்தம். ஈரோட்டில் கல்யாண வீடுகளில் இன்று காளான் பிரியாணி அவ்வளவு அத்தியாவசியத் தேவையாகி விட்டது என்கின்றனர்.

அகில இந்திய வானொலியில் ஒருமுறை காளான் வளர்ப்பு முறைகள் குறித்து விவரிக்கப்பட, அதன்பால் ஈர்க்கப்பட்டே விவசாயக் கல்லூரிக்குச் சென்று பயிற்சி பெற்ற (ஓரிரு நாட்கள்தானாம்) இவர், அதன் பின்பு தமது தாயார் ஜானகியின் மேற்பார்வையில் தம் கிராமத்தில் ஐந்து பெண்களைக் கொண்டு 'ஊரக மகளிர் மற்றும் குழந்தைகள் மேம்பாட்டுத் திட்டத்'ன் கீழ் காளான் பண்ணை அமைத்திட யோசனை தந்து, தானும் உழைத்திருக்கிறார்.

இப்போது காளானுக்கு மூலவித்து (விதை) தயாரிக்கும் ஆராய்ச்சியிலும் இறங்கியிருக்கிறார். தினசரி 100லிருந்து 150 கிலோ காளான் உற்பத்தி செய்து விற்னையிலும் மற்றவர்களுக்கு வழி காட்டுவதாகக் கூறுகிறார்.

“இந்தியாவில் மட்டும் இருநூறுக்கும் மேற்பட்ட காளான் வகைகள் உள்ளன. ஆனால் மூன்று வகைகள் மட்டுமே இங்கே முறையாக வளர்க்கப்படுகின்றன. அவை வைக்கோல் காளான், சிப்பிக் காளான், மொட்டுக் காளான் (பட்டன் காளான்.) ஹிமாச்சலில் 'பட்டன்' காளான் மட்டுமே உற்பத்தி செய்கின்றனர். வளர்ப்பு முறையில் முதன் முதலாய் 'பால் காளான்' அறிமுகப்படுத்தப்பட்டது அருப்புக் கோட்டை விவசாயக் கல்லூரி மண்டல ஆராய்ச்சியினரால். அதை இங்கு நடைமுறையில் கொண்டு வந்திருக்கிறோம். பொருளாதார ரீதியிலும், உற்பத்தி அளவிலும் இது நிறைவளிப்பதாய் உள்ளது. அத்தோடு, அதற்கான விதையையும் நானே உற்பத்தி செய்து மலிவு விலைக்கு விற்கிறேன். தயாரிக்க ஆர்வமுள்ளவர்களுக்குப் பயிற்சி தரவும் செய்கிறேன்...!” என்கிறார்.

“இந்த பால் காளான் தயாரிப்பு, ஏற்கெனவே புழக்கத்தில் உள்ள சிப்பிக் காளான் தயாரிப்பை விட எளிதான முறை... கூடுதல் விளைச்சல்... மூன்று நான்கு நாட்கள் வரை

கூட அறுவடை செய்த பின்பு வைத்திருக்கலாம். வீட்டிலிருந்தபடியே தொழில் செய்ய மிகவும் ஏற்றது...! குறிப்பாகப் பெண்களுக்கு...!" என்று சொல்லும் இவர், மத்திய அரசின் 'கிராமஸ்ரீமேளா' கண்காட்சித் திட்டப்படி கண்காட்சிகளிலும் இதை வைத்து விளக்குகிறார்.

பொதுவாக இது மாதிரி தொழில் செய்பவர்கள் 'அரசு உதவி கிட்டவில்லை, வங்கிகள் கடன் அளிக்கவில்லை' என்றுதான் வசை பாடுவார்கள். ஆனால் இவரைப் பொறுத்தவரை அந்தப் பிரச்னைகளே இல்லை என்கிறார்.

இவரது காளான் பண்ணையை நேரடியாக வந்து பார்த்து தமிழக சட்டமன்ற பொதுக் கணக்குக் குழு தலைவர் கே.ஆர். ராமசாமி பாராட்டியிருக்கிறார். டோக்ரா திட்டம் எவ்வளவு தூரம் வளமையாக இயங்குகிறது எனக் காண வந்த மாவட்ட ஆட்சியர் அபூர்வ வர்மா, இவர் செயல்

# நனவுகள்



• பால்காளான்

முறைகளைப் பார்த்து அசந்து போய் உதவிகள் செய்வதாக வாக்களித்திருக்கிறாராம்.

இதன் பயனாய், காளான் பண்ணைக்கு இடம் இலவசமாக வழங்கப்பட, அதற்கு தொழிற் கூடம் கட்ட இரண்டு லட்சம் அனுமதிக்கப்பட்டுள்ளதாகவும், அதில் குளிர் சாதன முறையில் காளான் வளர்ப்பைத் தொடங்கப் போவதாகவும் கூறும் இவ்விளைஞர் இது மாதிரி நூற்றுக்கணக்கானவர்களுக்குப் பயிற்சி கொடுத்து பண்ணைகளும் உருவாக்கி, விதைகளும் சப்ளை செய்து வருகிறார்.

"டோக்ரா" திட்டம் மகளிருக்கானது... நீங்கள் எப்படி இதில்...! எனக் கேட்ட போதோ,

"எனக்கு இதில் கூடுதல் பிடிப்பு, பற்று... அம்மாவின் தலைமையில் எங்கள் குழு நடந்து வந்தாலும் எனக்குள்ள ஆர்வமே என்னை இதில் ஈடுபட வைத்துள்ளது. பெண்களுக்கு - குறிப்பாய் கிராமப் புறப் பெண்களுக்கு வேலை வாய்ப்பை - அரசு உதவியை இது சம்பந்தமான பயிற்சியை செய்து தருவதே என் கனவு, குறிக்கோள், லட்சியம் எல்லாம்!" என்கிறார்.

காளான் பொடி தயாரித்து, 'காளான் குழம்பு', 'காளான் சூப்'புக்கு அடிகோலியிருக்கும் இந்தக் காளான் கலைஞர், அடுத்து செய்ய விரும்புவது, 'காளான் நூடுல்ஸ்.'

இது சம்பந்தமான அனைத்துத் தொழில் நுட்ப ஆலோசனைகளையும் இலவசமாகவே பலருக்கும் கற்றுத்தரக் காத்திருப்பதாகவும் கூறுகிறார். ●

கட்டுரை, படங்கள் : **ரோகிணி**



• சண்முகம்



• ஹேமமாலினி

## மும்மை மசாலா:

இப்போது கணேஷ் நாயக் செய்து விடுவாரோ என்ற கவலை பலருக்கு! ரிமோட் கண்ட்ரோல்காரர் ஏனிப்படி வானாவிருக்கிறார் என்ற பரவலான குமைச்சல் வேறு! குட்டிகள்



• ரேகா

# (யு)ரேகா!

பதினாறடி பாய்வதை ரசிக்கிறாரோ?

### போக்கிரித்தனமான போக்ரன்

**போ**க்ரன் குண்டு வெடிப்புகளைத் தொடர்ந்து மும்பையில் பலத்த 'போக்ரன் அலை' வீசியது! ஒரு மாலைப் பொழுதில் திடீரென்று கழற் காற்று வீச, பஸ், ட்ரெயினிலெல்லாம் 'இன்னொரு பாம் வெடித்திருக்கிறார்கள்' என்று ஒரே வதந்தி – வழக்கமான வம்புத்தனம்! தம்ஸ் அப் விளம்பரங்களில் "டேஸ்ட் த போக்ரான் தண்டர்" என்று எழுதி வைத்தது குறும்புத்தனம்; ஏர் இண்டியா விளம்பரத்தில் "நாங்கள் சொல்வதைச் செய்யுங்கள்; செய்வதைச் செய்யாதீர்கள்" என யு.எஸ். இந்தியாவிற்கு கட்டளையிடுவதாக "பானர்" வைத்தது விஷமத்தனம். அலிஷா சினாய்க்கு "தில் முஜே சாஹியே மேட் இன் இண்டியா" (இந்தியத்தனமான மனம் வேண்டும்) என்பதற்கு பதிலாய் "பாம் முஜே சாஹியே மேட் இன் இண்டியா"(இந்தியாவில் செய்த குண்டு

### பு(போ)லித்தனம்!

**நா**ய் வேஷம் போட்டால் குரைக்க வேண்டுமென்பது போல் புலி வேஷம் போட்டால் போராடித்தானே ஆக வேண்டும்? நவி மும்பை மேயர் தேர்தலில் தோல்வி உறுதி என்று தெரிந்த பின் சிவசேனைக்காரர்களுக்குப் போட்டியிடவே மனமில்லை! வேண்டாவெறுப்பாகப் போட்டியிட்டு கணேஷ் நாயக்கின் 'நவி மும்பை விகாஸ் அகாடி'க்காரர்களிடம் மண்டியிட்டார்கள். ஆனாலும் சின்ன ஆறுதல் – நாயக் மிரட்டியதுபோல் 27 சிவசேனைக்காரர்கள் கட்சி மாறவில்லை! 9 பேர்தான் தாவியுள்ளனர். மற்ற வோட்டுகள் காங்கிரஸ்காரர்கள் போட்ட பிச்சை! இந்த ஒன்பது பேரையும் தாய்க் கட்சிக்கே திரும்பிவிட தாஜா செய்கிறார்கள். முன்பு சகன் பூஜ்பால் பிரிந்து சென்று சிவசேனைக்கு நிரந்தரத் தலைவலியானதுபோல்

### கலைஞர் - 75

**மு**க்கால் நூறு என்ன! முழு நூறுக்கு மேலும்கூட வேண்டும். நம்மிடையே இந்த முழுத் தமிழன் – முதிர்ந்த கலைஞன்!

– ஓவியர் ஜெயராஜ்





## கலைஞர் - 75

**எ**றும்பினும் உழைப்பாளி; கரும்பினும் இனிப்பாளி; அவர் வென்றதைக் காட்டிலும் இழந்தவை அதிகம். ஆயினும் நிலை குலையாதவர். ராமபிரானின் வனவாசத்தைப் போன்றே அரசியல் வனவாசம் பெற்றவர் கலைஞர். ஆனாலும் சரியாதவர் — சரியானவர்!

**— அழகிரி எம்.எல்.ஏ (த.மா.கா)**

வேண்டும்) என்ற பல்லவி அமைத்துக் கொடுத்தது மஹா குறும்புத்தனம்; ஆனால் எல்லாவற்றையும் தூக்கிச் சாப்பிடுவது போல், நவி மும்பையில் புதிதாய் முளைத்திருக்கும் கணேஷ் நாயக் பிரச்னைக்கு, "சிவசேனையில் போக்ரன்" என்று சேனைக்காரர்களே கிண்டலடித்திருக்கிறார்களே, அதுதான் டாப் டாக்கர்!

## புதிய கோஷம்! புதிய துவேஷம்!

**யு**.எஸ்.ஸுடைய "ஸாங்ஷன்" பயமுறுத்தல்களை ஒட்டி, மும்பையில் தேசிய உணர்ச்சி கரை புரண்டு ஓடியது - தெருக்களிலும் சாக்கடைகளிலும் 'பெப்ஸி' 'கோக்' ஆறாக! சிவசேனையின் சிஷிர் ஷிண்டே முலுண்டிலும், மாஹிம் விகாஸ் மண்டல்காரர்கள் மற்றும் விகாஸ் அகாடி உறுப்பினர்கள் தாதரிலும், க்ரேட் க்ரேட்டாக பெப்ஸியையும், கோகோகோலாவையும் கொட்டித் தீர்த்தார்கள். விஜ்ஜத் பாபட் தயாரிக்கும் மகளிரும், அரசால் நிறுவப்பட்ட 'ஜீங்கா பாகர்' உணவகங்களும் இனி இந்த பானங்களை விற்கப் போவதில்லையாம். ஹோட்டல்காரர்களையும் 'பெப்ஸி', 'கோக்'கை நிராகரிக்க வேண்டுவதுடன், ஒரு கையெழுத்து வேட்டையும் நடத்தி, 15,000 கையெழுத்துக்களானவுடன், அமெரிக்கன் கான்சலேட்டில் சமர்ப்பிக்கப் போகிறார்களாம்! ஹூம்! எங்கே பார்த்தாலும் "Eat nationalism; Sleep nationalism; Do not drink Pepsi or Cola" என்ற புதிய கோஷம்தான்!

## கொகணியா? கொக்கா?

'**ஹோ**ம் மினிஸ்டர் ஆனவுடன், தாவூத் இப்ராஹிமையே உங்கள் முன் நிறுத்துவேன் என்று மார் தட்டியவர்கள் இன்று, தாவூத்தின் நாயைக் கூடப் பிடிக்க முடியாமல் திணறுகிறார்கள்' என தாக்கரே, கோபினாத் முண்டேயைக் கிண்டலடிக்க, முண்டே காவல்துறையை 'வன்'னி, "கொகணியை உயிருடனோ, இல்லாமலோ பிடித்து வாருங்கள்" என நறநறத்திருக்கிறார். போலீஸோ, ஃபெரோஸ் கொகணியுடன், "நீயா...நானா" என சபதம் போட்டிருப்பதோடு சரி!

யாரிந்த கொகணி? ப்யூனாக வாழ்வைத் துவக்கி, எதிர்ப்பட்ட ஒரு குடிகாரப் பணக்காரனை 'க்ளோஸ்' பண்ணி, அந்த வீரதிர பிரதாபத்தால் ஒரு பில்டரின் பாடிகார்டாகி, அவரை 'எக்ஸ்டார்ஷன்' தொல்லைகளிலிருந்து காக்கப் போய், அண்டர் வர்ல்டின் பார்வையில் பட்டு, தாவூத்தின் கையாளான சோடா ஷகிலிடம், 60,000 சம்பளத்தில், பாந்த்ராவில் ஃப்ளாட், கார் இத்யாதிகளுடன் ஷார்ப் ஷீட்டராகி, இருபதுக்கும் மேற்பட்டவர்களை மேலுலகுக்கு அனுப்பி, சமூகத்தின் ஏணிப்படிகளில் 'உயர்ந்தவன்'. ஜெயிலிலிருந்து, வயிற்று வலி என ஜெ.ஜெ ஹாஸ்பிடலுக்கு கொண்டு செல்லப்பட்டவன், துணிகரமாய்த் தப்பி விட்டான். போலீஸ் முகத்தில் இட்டாகக் கரி! இன்னும் பிடிபடவில்லை. அவனுக்கு கிட்னி பெயிலாகி விட்டதாம்! 'டயாலிஸைஸ்' என்றால் மும்பையிலும், மாற்று சிறுநீரகம் பொருத்திக் கொள்வதென்றால் ஜெய்ப்பூர், கல்கத்தா (மும்பையில் இந்த வசதி இல்லாததால்) வருவான் என்று இவர்கள் மருத்துவமனை வாயில்களில் தவம் கிடக்கிறார்கள். ஹூம்! துபாய் என்றொரு ஊரிருப்பதை இவர்கள் மறந்தாலும் அவன் நினைவில் வைத்துக் கொண்டிருக்க மாட்டானா?

## (யு)ரேகா

**செ**ன்சார் போர்டின் சேர்பர்ஸன் பொறுப்பிலிருந்து சக்தி சமந்தா ரிடையராகிறார். அந்த இடத்துக்கு மூன்று அம்மணிகளின் பெயர் ஸ்ட்ராங்காக அடிபடுகிறது - ஆஷா பாரேக், ஹேமமாலினி, அண்ட்... ரேகா! 'உத்சவ்' 'காமசூத்ரா' போன்றவை நினைவில் நிழலாட, 'ரேகாவே வரவேண்டும்! கத்திரிக்கோலை துருப்பிடிக்கச் செய்ய வேண்டும்' என்ற பிரார்த்தனையில் அவர் விசிறிகள் காத்திருக்கிறார்கள். ○

**— ஜெயஸ்ரீ ராஜ்**

சாகசங்கள் செய்பவர்கள் பற்றி பலராமனுக்கு எப்போதுமே ஒரு சந்தேகம் உண்டு. சாகசங்கள் தற்செயலானவையா, அல்லது திட்டமிட்டுச் செய்யப்படுபவையா? திட்டமிட்டுச் செய்தால், அது எப்படி சாகசமாகும்? சில நபர்கள், தலையால் கல்லை உடைக்கிறேன், பல்லால் லாரியை இழுக்கிறேன் என்றெல்லாம் சொல்லிக் கொண்டு, படும் அவஸ்தைகள் வேடிக்கையானது.

ஆனால், பலராமனுக்குச் சாகசங்கள் செய்ய வேண்டும் என்ற தணியாத தாகமுண்டு. சாகசங்கள் இயல்பாய் முகிழ்த்தெழ வேண்டும். இன்று காலை கூட அப்படியொரு கனவு கண்டான். கொஞ்சம் தீ. அப்புறம் ஓட்டம். யாரையோ தூக்கப் போக, கடைசியில் பார்த்தால் அவர் அப்பா! இப்படித் துண்டு துண்டாய் ஞாபகமிருந்தாலும், முடிவு மறந்து விட்டது.

நேற்று இரவு தொலைக்காட்சி பார்த்ததன் விளைவு இது. என்னென்னவோ சாகசங்கள் என்று விருதுகள் வழங்கினார்கள். அது போன்றதொரு சாகசத்தில் செத்துப் போனவனின் இளம் மனைவி, சால்வை போர்த்திக் கொண்டு வந்து விருது வாங்கினாள். முகத்திலும், நடையிலும் கவலை போல் என்னவோ.

"இங்க வாங்களேன்."

உஷாதான். பேப்பரை மடித்து வைத்து விட்டு, வெளியே வருவதற்குள், இன்னொரு முறை கூப்பிட்டு விட்டாள்.

"அந்தாளு இன்னிக்கு விசிலடிச்சான். அதோ பாருங்க, செகப்பு பனியன். அவன் தான்."





அவள் காட்டிய திசையில், இருந்த ஆட்கள், தீவிரமாக மரம் இழைத்துக் கொண்டிருந்தார்கள். இருவர் மரம் அறுக்க, ஒருவன் செதுக்கிக் கொண்டிருந்தான்.

"ஒண்ணுந்தெரியாத மாதிரி திரும்பிக்கிட்டான். அவன்தான் எல்லாம் பண்றான். பொறுக்கி."

அவள் சொன்ன சிவப்பு பனியன், மரம் இழைத்துக் கொண்டிருந்தான். திரும்பிப் பார்க்கும் சுவடே இல்லை. உஷா முகத்தில் கோபம்.

"மொதல்ல சட்டைய மாட்டிண்டு வாங்க. போய் நாலு வார்த்தை கேட்டுட்டு வாங்க. பொறுக்கி நாயி. இவனோட இதே தொல்லையா போச்சு."

பலராமன் வெறுமனே நின்றான். கடந்த ஒரு வார

ஆர். வெங்கடேஷ்

# சாகசம்

பண்ணுவ."

''சொல்விடுவானா அவன். டெய்லி முறைச்சாங்க. அப்புறம் டக்கு கொட்டறா னுங்க. முதல்ல கௌம்புங்க. கீழே வீட்டுக் காரர் கிட்டயும் சொல்லியிருக்கேன். அவரை யும் அழைச்சண்டு போயி, நன்னா நாலு வார்த்தை கேட்டுட்டு வாங்கோ."

"ஏன் வீட்டுக்காரர் கிட்ட போயி சொன்ன?"

"சொன்னா என்ன?"

"அதுக்கில்ல உஷா. ஏன், அனாவசியமா அவரை யும் இதுல இழுக் கணும். நாமே பேசிண்டிருக் மாய் இந்தப் பிரச் னை.

உஷாவைக் குள்ளமென்று சொல்லிவிட முடியாது. ஆனால் பால்கனி கொடிக்கயிறு கொஞ்சம் உயரம். குளித்து, துவைத்த துணி களை, அவள் எம்பி எம்பிக் கொடியில் போட வேண்டிய நிலைமை. இத்தனை நாளும் அப்படித்தான் நடந்து வந்தது. இப் போது புதுக் குழப்பம்.

"சரி உஷா. நான் கேக்கறேன். நீ போய வேலய பாரு."

"என்ன கேக்கறீங்க? ஒரு வாரமா சொல் லிண்டு இருக்கேன். போன மாதிரியே தெரிய லியே."

'போறேம்மா. மொதல்ல கையும் களவுமா புடிச்சாத்தானே."

''இதுல என்ன கையும் களவுமா புடிக்கறது. அதுதான், நான் சொல்றேனே. நான் என்ன பொய்யா சொல் றேன்?"

''என்னன்னு சொல்லிக் கேக்கறது, சொல்லு. நான் பண்ண லேம்பான். என்ன

கலாமே."

"என்ன பேசறது. நீங்கதான் போகவே மாட்டேங்கறேளே. அவன் நாளுக்கு நாள் துளிர்த்துண்டே போறான். நானும் சொல்லிண்டேதான் இருக்கேன். நீங்கதான் என்னவோ..."

"சரி, சரி, நான் பாக்கறேன்."

வெடுக்கென முகத்தைத் திருப்பிக் கொண்டு உஷா உள்ளே போய்விட்டாள்.

எழும்பிக் கொண்டிருந்த எதிர் கட்டடத்தையே வெறித்துப் பார்த்தான் பலராமன். எல்லாம் சின்னப் பையன்கள். இருபது, இருபத்தைந்துக்குள் வலுவான தேகத்துடன் உழைத்துக் கொண்டிருந்தார்கள். இரண்டு வாரங்களாய் மர வேலை நடந்து கொண்டிருக்கிறது.

இரவு பகலென்று, இந்தப் பையன்கள் இங்கேயே வேலை செய்கிறார்கள். சமைத்து, சாப்பிட்டு, உழைத்து, உறங்கி, காண்ட்ராக்டரைக் கண்டால் பவ்யமாய் ஒடுங்கி...

காண்ட்ராக்டர். அவரிடம் சொன்னால் என்ன? இரண்டு மூன்று முறை அவரை பலராமன் பார்த்திருக்கிறான். தும்பைப் பூ வெள்ளை வேட்டி, சட்டை. இரண்டு கைகளிலும் இரண்டு விரல் அளவு மோதிரங்கள். சொல்லலாம். அவரிடம் இவர்கள் பயப்படுவார்கள்.

இவர்களிடம் நேராய்ப் போய்ப் பேசுவதைவிட, அதுதான் சரி.

## கலைஞர் - 75



சாதுர்யமான, மக்களின் நாடி தெரிந்த ஒரு தலைவர். திராவிடம் ஒட்டிய சினிமா கலாசாரத்திற்குள் அமுங்கிப் போய்விட்டது ஒரு துரதிருஷ்டம். இருப்பினும் இந்தக் குறைகள் தவிர்த்து, ஒரு பரந்த தேசியப் பார்வை இருந்திருக்குமேயானால் தமிழகத்தின் அரசியல் வரலாறே வேறொன்றாக மாறியிருந்திருக்கும்.

- கே.எம். விஜயன்
(வழக்குரைஞர்)

இதையெல்லாம் யோசிக்கும்போதே, பலராமனுக்கு என்னவோ போலிருந்தது. ஒரு பக்கம் இளவட்டங்கள், வயசுக் கோளாறு, விட்டு விடலாம் என்று தோன்றியது.

இன்னும் பெண்வாசனை என்றால் என்னவென்று தெரியாமல், கற்பனை கிளுகிளுப்பில் காலம் தள்ளுபவர்கள். அருகே மருந்துக்கும் பெண்ணில்லை. நாலைந்து பேராய்ச் சேர்ந்திருக்கும்போது, குதூகலத்திற்குச் சீண்டிப் பார்க்கும் மனோபாவம்.

இதையெல்லாம் உஷாவிடம் சொல்ல முடியாது. வெட்டியே போட்டு விடுவாள். அதைவிட, அசிங்கமாய் ஏதாவது சொன்னாலும் சொல்லிவிடலாம்.

இன்னொரு புறம் யோசிக்கும்போது, இந்த அபத்தம் தனக்கென்று ஏன் வர வேண்டும் என்று தோன்றியது. அதுவும் உஷா இரண்டு பையன்களுக்குத் தாய். முப்பதின் மத்தியில், உடல்கட்டு தளர்ந்து போய்க் கொண்டிருப்பவள். அலங்காரங்களும் சுவாரசியமும் மங்கிக் கொண்டிருக்கிறது.

அவளைப் போய்ச் சீண்டினால், கோபம் வரத்தான் செய்யும். நியாயமான கோபம்.

இதில் தவறு, தன்னிடம்தான். உஷா சொன்னவுடன் வெகுண்டெழ முடியவில்லை. வருஷக்கணக்காய் மண்டிக்கிடக்கும் நிதானம், இதிலும். அதைவிட, பயமோ? இருக்கலாம்.

ஒவ்வொருத்தனும் திரண்திரளாய் இருக்கிறான். சண்டை சச்சரவு எல்லாம், பலராமனால் தாங்க முடியாத ஒன்று. அதைவிட, இந்த விஷயத்தை எப்படி அணுகுவது என்று தெரியாததே முதல் காரணம். என் பெண்டாட்டியைப் பார்த்து ஏன் விசிலடிக்கிறாய்? ஏன் டக்கு கொட்டுகிறாய் என்று எப்படிக் கேட்க முடியும்?

அடிப்படை நாகரீகம் தடுத்தது. அசிங்கம்.

அப்படியே கேட்டாலும், ஒப்புக் கொள்ளப் போவதில்லை. மறுப்பார்கள். பேச்சு வளரும். சண்டை தொடரலாம். கோழைத்தனமாய்ப் பின்வாங்க வேண்டி வரும்.

அதைவிட, துஷ்டனைக் கண்டால் தூர விலகிவிடுவது உசிதம். உஷாவைத் தடுத்து விட்டு, பலராமனே துணி உலர்த்தலாம். பெரிய காரியமில்லை. அவன் உயரத்துக்கு, கயிறு எட்டும். அல்லது, ஒரு கொடிக் கம்பு வாங்கிவிட்டால், பிரச்னை தீர்ந்தது.

உஷா இதற்கெல்லாம் ஒப்புக் கொள்ள மாட்டாள். யாருக்கோ பயந்து, நாம் ஏன் நம் பழக்கங்களை மாற்றிக் கொள்ள வேண்டு

மென்பாள். இன்னும் பல கேள்விகள் முளைக்கும். அதற்கெல்லாம் பதில் சொல்லி மாளாது. இயல்பான போர்க் குணம் அவளிடம் உண்டு. பதில்களால் அதை அடக்கி விட முடியாது. இணக்கமாய் அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்வதென்பது அவள் அகராதியிலேயே கிடையாது.

"சட்டைய போடுங்க தம்பி, கௌம்பலாம்."

திரும்பிப் பார்த்தால், வீட்டுக்காரர் பின்னால், உஷா. கீழே போய் அழைத்து வந்து விட்டாள்.

"இன்னிக்கு ஒரு கை பாத்துடலாம். சோம்பேறிப் பசங்க. வாங்க கௌம்புங்க."

சந்தனமும் விபூதியுமாய் மணத்த வீட்டுக்காரர் முகத்தில் உறுதி. முண்டா பனியன், லுங்கியை மடித்துக் கட்டியிருந்தார்.

"போலாம் சார். இதுல யாருன்னே தெரியல?"

"தெரியாம என்ன, அந்த செகப்பு பனியன் பையன்தான் ரொம்ப துள்றான்...." என்றாள் உஷா.

"எவனாயிருந்தா என்ன தம்பி. ரெண்டுல ஒண்ணு தீத்துபுடலாம். வாங்க."

சரசரவெனத் தெருவைக் கடந்து, தட்டிகளை விலக்கி உள்ளே நுழைந்தார் வீட்டுக்காரர். ஐம்பது வயசுக்கு ஒன்றிரண்டு கூட இருக்கும். முறுக்கான தோள். நேர் முதுகு. ஒட்ட வெட்டின முடி. நிலா உச்சந்தலையில்.

இரண்டு மாடி ஏறுவதற்குள், பலராமனுக்கு மூச்சு வாங்கியது. பின் கை கட்டிய படி வீட்டுக்காரர் முன்னே நகர்ந்தார். இழைப்புளி நின்றது. அரம் நிமிர்ந்து பார்த்தது. அசாதாரண மௌனம். சிவப்பு பனியன் முகத்தில் துளி கலவரம்.

"நீதான் மேஸ்திரியா?" செதுக்கிக் கொண்டிருந்தவர் முன்னால் நின்றார் வீட்டுக்காரர். இருப்பவர்களிலேயே கொஞ்சம் முதிர்ந்தவனாய்த் தெரிந்தவன் அவன்தான். ஆமென்று தலையாட்டியபடி எழுந்தவனிடம்,

"நீயெல்லாம் அக்கா தங்கச்சிங்களோட பிறக்கலை?" – வீட்டுக்காரர், அழுத்தமான குரலில். அவன் விழித்தான்.

"என்ன சமாசாரம் சார்?"

கேள்விக்குறி முகத்தில் தொடர்ந்தது.

"ஏன், நல்லபடியா வேலை செய்யணும்னு இஷ்டமில்லியா?"

"என்னா சமாசாரம் சார். ஒண்ணும் புரியாம மெரட்டினா என்னா சார்?"

"உங்காளுங்கள அடக்கிவை. இல்ல, நாள பின்ன வெளிய வரமாட்ட."

"என்னா பண்ணிடுவ" சிவப்பு பனியன் தான். வீட்டுக்காரர் முறைக்க, மற்றவர்கள் நெருங்கினார்கள்.

''என்னா சமாசாரம் சார்'' அவன் மன்றாடினான்.

''இந்தாளு என் பொண்டாட்டிய பார்த்து, விசில் அடிக்கறான், சௌண்ட் குடுக்கறான். ஒண்ணும் தெரியாத மாதிரி கேக்கற" பலராமன் வாய் திறந்தான், சிகப்பு பனியனைக் கைகாட்டியபடி.

"அப்படியாடா?"

"யாருக்குத் தெரியும். இவரு பொண்டாட்டிய யாரு பாத்தா" சிவப்பு பனியன், ஒன்றும் அறியாதவன் போல் முகம் திருப்ப, சட்டென்று வீட்டுக்காரர் அவன் பனியனைப் பிடித்தார்.

''கையெடுய்யா'' என்றபடி அவன், வீட்டுக்காரர் கையைத் தட்ட, கண நேரத்தில், அவர் ஒரு அறை விட்டார்.

எல்லாம் இப்போது நடந்தாற் போலிருக்கிறது. அவர்களும் இந்தச் சண்டைக்குக் காத்திருந்தவர்கள் போல், வேகமாய் வீட்டுக்கார் மேல் பாய, பலராமன் திகைத்தான். கூச்சல், எகிறல், தாவல், வீட்டுக்காரர் ஒரு பக்கம் காற்றில் கைகளை வீச, கையில் பட்டவனுக்கெல்லாம் அடி. எவனோ ஒருவன் கட்டையை விசிற, வீட்டுக்காரர் நெற்றியில் ரத்தம். தடுக்கப் போன பலராமனுக்கும் எவனோ முட்டியில் போட, துவண்டான்.

எங்கிருந்து அந்த தைரியம் வந்தது என்று தெரியவில்லை. நிமிஷ நேரத்தில், பரபரவென கையில் கிடைத்ததை எடுத்து அடிக்க ஆரம்பித்தான் பலராமன். இதற்குள் வீட்டுக்காரர் சுதாரித்துக் கொள்ள, எதிரே பிளாட்டின் பால்கனியில் பார்த்திருந்த உஷா கத்த, தபதபவென ஒரு கூட்டம் மேலே வந்தது.

யார் யாரையோ விலக்க, பலராமனை யாரோ இழுத்துப் பிடித்தார்கள். கூச்சலும், இறைச்சலும் அடங்கியபோது, பலராமன் தரையில் உட்கார்ந்திருந்தான். முட்டி வலித்தது. சட்டை பட்டன்கள் தெறித்திருக்க, உடலெல்லாம் வியர்வை. உள்ளங்கையில் மரச் சில்லுகள் குத்தி, வலி. பக்கத்தில் இறுக்கப் பிடித்திருந்த கட்டை.

வீட்டுக்காரருக்கு நெற்றியோடு, தோளிலெல்லாம் சிராய்ப்பு. சிகப்பு பனியனையும் இன்னும் இருவரையும் யாரோ, பின்னால் கை வைத்து கயிறு கட்டியிருந்தார்கள். மற்ற இருவர் ஓடி விட்டதாகச் சொன்னார்கள்.

உஷா அழுது கொண்டிருந்தாள். பெரியவனும் சின்னவனும் பலராமனைச் சுற்றி நின்றார்கள். அவனுக்கு ரொம்ப தாகமாயிருந்தது. பழக்கமேயில்லாமல் கையையும் காலையும் எண்ணற்ற கோணங்களில் வீசியதில், இடுப்பிலும் தோள்பட்டையிலும் பிடிப்பு. நகர முடியவில்லை.

அடுத்த மூன்று மாதங்கள் ஆஸ்பத்திரியும், போலீசும் கேசுமாய் அலைந்தான் பலராமன். கோர்ட்டுக்கு வெளியே தீர்த்துக் கொள்ளலாம் என்று ஒருநாள் காண்ட்ராக்டர் வீடு வந்து, உஷாவிடம் மன்னிப்புக் கேட்டார். உஷா பெரிதாய் கண்டு கொள்ளவில்லை.

பிரச்னையை வளர்க்க வேண்டாமென முடிவாயிற்று. இப்போது காண்ட்ராக்டர் வெளியில் பார்த்தால், குசலம் விசாரிக்கிறார். மரவேலை செய்த பையன்கள் திரும்பவேயில்லை. தெருவில் உள்ளவர்கள் கூட, தன்னை இன்னாரென்று தெரிந்து வைத்திருப்பது கண்டு, பலராமனுக்குக் கூச்சமாயிருந்தாலும், பிடித்திருந்தது.

சாகசங்களை வலிந்து செய்ய முடியாது. அது தன்னால் முகிழ்ந்து வரவேண்டும். நடந்தவைகள் சாகசம் என்று பலராமன் எண்ணவில்லை. உஷாவுக்குப் பதில் இப்போது அவன்தான் பால்கனியில் துணி உலர்த்துகிறான். ●

## கலைஞர் - 75



ஓர் எழுத்தாளர் என்கிற முறையிலேயே கலைஞரைப் பார்க்கிறேன். வேறு எந்தவிதமாகவும் என்னால் பார்க்க முடியாது. படிப்பதை அறவே தவிர்க்கும் நமது அரசியல், சினிமா பிரமுகர்களுக்கு நடுவே, கலைஞர் படிப்பதோடு மட்டுமல்ல; அற்புதமாக எழுதவும் செய்கிறார் என்பது எனக்கு சந்தோஷமாக இருக்கிறது. ஓர் எழுத்தாளர் முதல்வராயிருப்பது எழுத்தாளனான எனக்கு மிகவும் பெருமை தரும் விஷயம்!

- பாலகுமாரன்

# கலைஞர் - 75



எழுபத்தைந்து வயதில் ஓர் இளைஞர். முழு நேரப் படைப்பாளியாகவும், முழு நேர அரசியல் வாதியாகவும் இயங்க, ஒரே சமயத்தில் இவருக்கு எப்படி சாத்தியப்படுகிறது என்ற கேள்விக்கு எவரிடமும் விடையில்லை.

– பாலு மகேந்திரா



அரசியல், கலை, இலக்கியம், பொருளாதாரம், பத்திரிகைத்துறை இப்படி அனைத்துத் துறைகளிலும் பாடநூலாய், தாமே ஒரு பல்கலைக் கழகமாய்த் திகழ்பவர் முதல்வர் கலைஞர். பவள விழாக்காணும் இவ்வயதிலும் அவரது சுறுசுறுப்பும் நினைவாற்றலும் சமயோசித அறிவும் வியந்து பாராட்டுதலுக்குரியவை.

– எஸ். திருநாவுக்கரசு



ஆறு வருடங்களுக்கு முன்பு சிதம்பரம் மைதானத்தில் என்னைப் பார்த்தபோது, "நிச்சயம், நீ இந்தியாவிற்கு ஆடுவாய்" என தட்டிக் கொடுத்துப் பாராட்டினார்! பின்னர் இந்தியாவிற்கு ஆடினேன். இது அவருக்கு கிரிக்கெட்டின் மீதுள்ள ஆர்வத்தையும் என் மீது வைத்துள்ள நம்பிக்கையையும் வெளிப்படுத்துகிறது.

– ஆசிஷ் கபூர் (கிரிக்கெட் வீரர்)



கலைஞர் என்றாலே தமிழ் என்பதும் உடனே தோன்றக் கூடியது. அப்படி ஒரு உணர்வு வேறு எந்த ஒரு தலைவரின் பெயரைச் சொன்னாலும் தோன்றக்கூட மாட்டேங்குது.

– தங்கர்பச்சான் (ஒளிப்பதிவாளர்)



தமிழால் தொண்டர்களை வசியப்படுத்தி வைத்திருப்பது. தோல்வியால் துவளாத நெஞ்சுரம். நெஞ்சில் பசுமரத்தாணியாகப் பழம் பெரும் நிகழ்ச்சிகளையும் பலரது பேச்சுக்களையும் பதிய வைத்துக் கொண்டு எதிர்ப்பாளர்களின் கேள்விக்கு சுடச்சுட பதிலளிப்பது. கலைஞரிடம் எனக்குப் பிடித்த அம்சங்கள் இவை.

– கே. பாக்யராஜ்



'சுபமங்களா'வுக்காகக் கலைஞரைப் படமெடுக்கப் போயிருந்தேன். முற்றிலும் மாறுபட்ட படமாக அது அமைய வேண்டும் என விரும்பி, "சற்றுக் கீழே அமருகிறீர்களா?" என்று கேட்டேன். முதலில் தயங்கினாலும் பிறகு சம்மதித்து, கீழே, தரையில் அமர்ந்து பேட்டியாளரிடம் பேசினார். படங்கள் மிகச் சிறப்பாக அமைந்து கலைஞரைக் கவர்ந்தன. என்னைக் கூப்பிட்டுப் பாராட்டினார்! "இப்படி யாரும் என்னைக் கேட்டதில்லை. நீங்கள்தான் முதன் முதலாகக் கேட்டீர்கள். படமும் பிரமாதம்!" என்றார். மறக்க முடியுமா இதை?

– ரவிசங்கரன்

தித்திக்கும் முத்தமிழ்க் கனிகளைப் பிழிந்து பேசும் நாவாற்றல்; எத்திக்கும் புகழ் மணக்க நற்கருத்தை எடுத்தாளும் எழுத்தாற்றல்; எழுபத்தைந்து காண்பது போல – இன்னும் இருபத்தைந்தாண்டுக்கு மேல் காண எமக்கெல்லாம் ஆவல். ஏனெனில் நீர் செந்தமிழுக்கொரு இன்னலென்றால் சிறகு புடைத்துச் சிலிர்த்தெழும் சேவல்!

– குமரி அனந்தன்



கலைஞரை வாழ்த்த மட்டும் அல்ல, ஆசி கூறவும் எனக்கு வயது உண்டு. பவள விழாக் காணும் சந்தடி சாக்கில் ஒரு கோரிக்கை: சமீபத்தில் மறைந்த நண்பர் வி. கோபாலகிருஷ்ணனுக்கு 'தினசரி நாடகம்' என்பது ஒரு வெறியாகவே இருந்தது. அவரது கனவு நனவாக அரசு ஒரு நாடக அரங்கைக் கட்டணமின்றி தினசரி நாடகங்கள் நடத்த ஒதுக்கித் தர வேண்டும்.

– பூர்ணம் விஸ்வநாதன்

விளையாட்டில், கலைஞர் காட்டும் ஆர்வத்தை வர்ணிக்க இயலாது. நான் எப்பொழுது இந்தியாவிற்கு விளையாடி, ஜெயித்து வந்தாலும் உடனே என்னை அழைத்துப் பாராட்டும் அதே சமயம், தோற்கும் சமயங்களிலும் போன் மூலம் ஆறுதல் கூறுவார். இது அவரின் பெருந்தன்மையைக் காட்டு



கிறது!

– ரமேஷ் கிருஷ்ணன் (டென்னிஸ்)

சாதாரண மக்களும் எளிதில் அணுகக்கூடிய முதல் அமைச்சர் என்பதே அவரின் பெருமை! அவர் வாழும் கால கட்டத்தில் நானும் வாழ்வதைப் பெருமையாகவே நான் நினைக்கிறேன்!

– எஸ்.வி. சேகர்

நான் கலைஞரின் சொந்தப்பட நிறுவனத்தில் அவரது செந்தமிழ் வசனம் பேசி நடித்து இருக்கிறேன். ஆனாலும் எனக்கொரு குறை. நான் பல சரித்திர நாடகங்கள் போட்டு இருக்கிறேன். ஆனாலும் இந்த நூற்றாண்டின் மிகப் பெரிய இலக்கியவாதியும், சரித்திரப் பேராசிரியராகவும் திகழ்கிற கலைஞரின் சரித்திர வசனங்கள் பேசி நடிக்கிற வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லையே என்பது தான் அது!

– ஆர்.எஸ். மனோகர்

'பொது வாழ்க்கையில் நடிப்புக் கலை கூடாது. ஆனால் கலை வாழ்க்கை மூலம், சமுதாயத்திற்கு விழிப்புணர்ச்சி ஊட்ட வேண்டும்' என்று உணர்த்திய கலைத்துறைச் சிற்பி.

– சீர்காழி சிவசிதம்பரம்

தந்தை பெரியார், அண்ணா இவர்கள் வரிசையில் திராவிட இயக்கத்தின் ஓர் உறுதியான தூண் கலைஞர். தீர்க்கதரிசி, அரசியல் மேதை, உயர்ந்த நிர்வாகி என்றெல்லாம் தனித் தனியாகச் சொல்லுவதை விட, one of the best Chief Ministers of Tamilnadu என்று சுருக்கமாகச் சொல்லி விடலாம்.

– உன்னி கிருஷ்ணன்

சூரளோவியம் படைத்துப் புகழோவியமாய்க் காட்சி தரும் தமிழோவியமாம் கலைஞர்; தன்னிகரற்று வாழ்கவே!

– குன்னக்குடி வைத்தியநாதன்

நான் இந்திய அணியில் சேர்க்கப்பட்டபோது என்னை அரசு சார்பிலும், தனிப்பட்ட முறையிலும் பாராட்டினார். அதே போல சமீபத்தில் காயம் காரணமாக அணியில் இல்லாதபோது போன் மூலம் தொடர்பு கொண்டு ஆறுதலும் உற்சாகமும் கொடுத்தவர். நான் மறுபடியும் இன்று இந்திய அணியில் இடம் பெற்று ஆடுவதற்குக் கலைஞரும் ஒரு வகையில் காரணம் என்பதைப் பெருமையோடு கூறிக் கொள்கிறேன்.

– ராபின் சிங்

இந்தியாவில் இருக்கிற அரசியல்வாதிகளில், எந்த ஒரு விஷயத்தையும் விரைவில் கிரகித்துக் கொள்ளும் ஆற்றல் மிகுந்தவர் கலைஞர். சுற்றுச் சூழல் இயக்கத்தைச் சேர்ந்தவன் என்ற கோணத்தில் பார்க்கும்போது, பிறந்த நாளில் மரம் நட வேண்டும் என்று முதலில் செயல்படுத்தியவர் கலைஞர் தான். அது மட்டுமல்ல. மாவட்ட வாரியாகச் சுற்றுச் சூழல் ப்ரொஃபைல் பண்ணச் சொன்னவரும் கலைஞர்தான்!

– 'எக்ஸ்நோரா' நிர்மல்

நான் ஒரு காங்கிரஸ்காரன். என்னைப் போல, அவருக்கு எதிரணியில் உள்ளவர்களும் நண்பர்களாக நிறையப் பேர் இருப்பார்கள். காரணம், அவர் தமிழகத்தின் மகத்தான தலைவர்களில் ஒருவர். பாரத ரத்தினங்களில் ஒருவராகக் கருத்தத் தகுதிகள் படைத்தவர்.

– டாக்டர் கே. சொக்கலிங்கம்



# குறையொன்றுமில்லை

விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று சுக்ரீவன் தடையாக நின்ற போது பரமாத்மா சொன்னான்: "நீ யாரடா தடை பண்ணுவதற்கு...?"

அவனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக ரொம்பத் தீவிரமாகப் பேசினான் சுக்ரீவன். "தக்க சமயத்திலே அவன் முத்தண்ணாவைக் கைவிட்டுவிட்டு வந்திருக்கிறான்... அவனைப் போய்ச் சேர்த்துக் கொள்ளலாமா...?" என்று கேட்டான்.

"இந்த தர்மத்தை நீ சொல்லலாமா...?" என்றான் பகவான்! நீ மட்டும் என்ன பண்ணினாய்...? முத்தண்ணாவைக் கைவிட்டு வந்தவன்தானே நீ...? தர்மத்தைச் சொல்வதற்குக் கூட உகந்த அதிகாரிகள் வேண்டாமா...? யார் வேண்டுமானாலும் தர்மத்தைச் சொல்வதா...?" என்று கேட்டான்.

"கிஷ்கிந்தையிலே அந்த ரிஷ்யமுகபர்வத தாழ்வறையிலே நீ எனக்குக் கிடைத்தாய்– சரணாகதி பண்ணினாய்– உன்னை நான் ரக்ஷித்தேன். சமுத்திர தீரத்திலே இவன் வந்து அடி பணிகிறான்... இவனையும் நான் ரக்ஷிக்கப் போகிறேன்..." என்றான்.

பசு இருக்கிறது... ஆசார்யர்கள் அபயப்ரதான சாரத்திலே சுவாமி தேசிகன் இதை விளக்குகிறார்; பெரியவாச்சான் பிள்ளையும் இதை வர்ணிக்கிறார்– ஒரு பசு இருக்கிறது. அதற்கு ஒரு கன்று இருக்கிறது... அந்தக் கன்றுக் குட்டி பெரிதாகி விடுகிறது... பசு இன்னொரு கன்றை ஈனுகிறது. இந்த இரண்டாவது கன்றுக்குட்டி துள்ளி ஓடி வந்து, பசுவினிடத்திலே பாலைச் சாப்பிட வருகிறது. அப்போது அந்த முதல் கன்றுக் குட்டி, இரண்டாவது பால் சாப்பிடத் தடையாக இருந்தால் பசு என்ன பண்ணும்? தன்னுடைய குட்டியே ஆன போதிலும் முதல் கன்றை கொம்பால் முட்டி, தூரத் தள்ளிவிட்டு சின்னக் கன்றுக்கு இடம் கொடுக்கும்.

அந்த மாதிரிதான் பகவானும்– எத்தனை பேர் ஆச்ரயிக்க வந்தாலும் ரக்ஷிக்கிறேன் என்கிறான் அவன். ஒருத்தரைத்தான் அவன் ரக்ஷிப்பான் என்பது இல்லை.

அவனை மாதிரி கல்யாண குணம் படைத்தவர் யார் இருக்கிறார்கள்! 'அவன் திருவடியைப் பிடித்துக் கொண்டுவிட்டால், அது ராக்ஷஸ வர்க்கமாயிருந்தாலும், தாவரமாயிருந்தாலும், பக்ஷி விலங்காயிருந்தாலும் எதுவாக இருந்தாலும் சமநோக்கு கொண்டு அனுக்கிரஹம் பண்ணுகிறான்' என்று பரத்வாஜ சம்ஹிதையிலே பரத்வாஜ மஹரிஷி அழகாக எடுத்துக் காட்டுகிறார்.

அந்த பரமாத்மா, ஆச்ருதாளிடத்திலே வாத்ஸல்யம் உடையவன்–

61





## அருள்வாக்கு

கீதையில் அர்ஜுனன் குறுக்கே குறுக்கே எத்தனை 'கொஸ்ச்சின்' பண்ணுகிறான்? சிஷ்யன் கவனமாக குரு உபதேசத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்பதற்கு இந்தக் குறுக்குக் கேள்வி பெரிய ஸாக்ஷி.

'லெக்சர்' என்று முழுக்க 'ப்ரிபேர்' பண்ணிக் கொண்டு போய் அதை ஒப்பித்துவிட்டு வந்துவிடலாம் என்று ஒரு ப்ரொஃபஸர் இருக்கிறவரையில் அவர் ஸப்ஜெக்டை ஸாங்கோபாங்கமாகப் பார்க்க வேண்டிய கட்டாயமில்லை. தம்முடைய அபூர்ண ஞானத்தைக் கொண்டே எல்லாம் தெரிந்த மாதிரி லெக்சர் கட்டி ஏமாற்றிவிட முடியும். பரிப்ரச்நம் என்று நடுநடுவே தோண்டித் தோண்டிக் கேள்வி கேட்குமாறு மாணவனை விடும்போதுதான் லெக்சரரும் ஸப்ஜெக்டைப் பூர்ணமாகப் பார்த்துப் புரிந்து கொள்ள வேண்டியதாகும். அவர் 'மிஸ்' பண்ணிவிட்ட விஷயம்

ஆச்ருத வர்ஸன் என்பது எப்படித் தெரிகிறது என்று கேட்டால், எல்லா பதார்த்தங்களிலேயும் நிறைந்திருந்து, கூப்பிடுகிறபோதெல்லாம் அவன் ஓடோடி வருவதாலே தெரிகிறது. நம்மைக் காக்க வைக்கக் கூடாது என்பதற்காக ஓடி வரச் சித்தமாயிருக்கிறான் பரமாத்மா. எப்படி கன்றானது பசுவின் பின்னால் ஓடுமோ, கன்றை முன்னால் அழைத்துப் போனால் எப்படிப் பின்தொடருமோ, அப்படியே பரமாத்மா நம்மை விட்டு அகலாமல் இருக்கிறான். அதுதான் அவனுடைய வாத்ஸல்யம் என்கிற குணம். ஒரு கணமும் அவன் நம்மை விட்டுப் பிரிவதில்லை... நாம் என்ன ஆகிவிடுவோமோ என்கிற பயம் அவனுக்கு!

அவனைத் தொலைத்து விட்டுக் கஷ்டப்படுகிறவர்கள் நாம்தான்! இதற்கு ஒரு கதையை ஞாபகப்படுத்துகிறேன்– ஆசார்யர்கள் சமத்காரமாய்ச் சொல்லும் கதை... முன்பு ஒரு முறை இதைச் சொல்லியிருக்கிறேன்: கல்யாண காலத்திலே போட்ட ஒரு பவுன் மோதிரத்தைத் தொலைத்து விட்டார் ஒருத்தர். 'போயிடுத்தே போயிடுத்தே' என்று ஏகமாக வியசனப் படுகிறார். நழுவி நடுத் தெருவிலே விழுந்ததே மோதிரம்... அது எங்கேயாவது வியசனப்படுகிறதா? 'இவர் கையிலே இத்தனை நாளாக இருந்தேனே! இப்படிப் பிரியும்படியாயிற்றே...' என்று வருத்தப்படுகிறதா? இல்லவே இல்லை!

நாமெல்லாம் யாரு...? மோதிரம் மாதிரி! தொலைத்தவன் யாரு...? பரமாத்மா! நம்மைத் தொலைத்துவிட்டு அவன் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கிறான். நாமோ, ஒரு விசாரம் இல்லாமல் அசித் பதார்த்தம் மாதிரி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நம் நினைவு இல்லாமல் ஒரு க்ஷணமேனும் அவன் இருக்கிறானா...? இல்லை; கூடவே இருக்கிறான் அவன். அப்படிப்பட்டவனை தியானிக்காமல் ஒரு க்ஷணமாவது நாம் இருக்கலாமோ!

சந்ததாரையைப் போல, அக்னியிலே நிறுத்தாமல் தாரை விடுவது போல, அவன் நினைவு அறுபடாமல் நாம் இருக்க வேண்டும். ஒரு கணம் அந்த நினைவு அகன்றாலும் எதுவுமே செய்யத் தோன்றாமல் போய் விடுகிற நிலையை நாம் அடைய வேண்டும்.

அப்படி பகவத் ஸ்மரணையோடு நாம் வாழும் காலம்தான் இருந்த காலம் ஆகிறது. அவன் எப்போதும் நம்முடைய ஸ்மரணையோடு இருக்கிறான்... நாமும் அவனை ஸ்மரித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

இந்த மாதிரி இடைவிடாத ஸ்மரணம் யாரிடத்திலே இருந்தது என்று கேட்டால், பிரஹ்லாதனிடத்திலே இருந்தது. பாம்பு கடித்தாலும் சரி, விஷத்தைக் கொடுத்தாலும் சரி, மலையிலேயிருந்து உருட்டினாலும் சரி... அறுபடாத ஸ்மரணம். காற்றில்லாத இடத்திலே 'ஏற்றி வைத்த விளக்கு போல' என்று பிரும்ம சூத்ரம் சொல்கிறது இதை.

கடைசி பிரயாணம் என்று ஒரு இருக்கிறதல்லவா நமக்கு... திரும்பியே வராத பிரயாணம்! அந்தப் பிரயாணம் வரையில் அவனை நினைக்க வேண்டும். அப்படி எம்பெருமான் ஸ்மரணையுடன் கடைசி வரை வாழ்ந்தவர்கள்தான் வாழ்ந்தவர்களாக ஆவார்கள்.

நாரதீயத்தில் ஒரு அழகான விஷயம் வருகிறது: கங்கா நதி தீரத்திலே பல முனிவர்கள் அமர்ந்திருக்கிறார்கள். வசிஷ்டர் உட்கார்ந்திருக்கிறார். வசிஷ்டருடைய பிள்ளை சக்தி. சக்தியுடைய பிள்ளை பராசர மஹரிஷி. விஷ்ணு புராணம் எழுதியவர் இவர். ஸ்ம்ருதி கர்த்தா இவர். தர்ம சாஸ்திரத்தையும் எழுதியிருக்கிறார். சின்ன பிள்ளையாக இந்த கங்கா நதி தீரத்திலே அவர் இருக்கிறார். ஏழு வயதே நிரம்பிய பிள்ளை. வசிஷ்டருக்குப் பேரன். அப்பா சக்தி இல்லாமல் போனதால் தாத்தா வசிஷ்டர்தான் பராசரரை வளர்த்தார்.

இப்படி பராசரர் நின்று கொண்டிருந்த போது இன்னும் பல மஹரிஷிகள் அங்கே

ஏதாவது இருந்தால் அது சிஷ்யனின் பரிப்ரச்நத்தில் வெளிப்பட்டு விடும். அவர் அதற்கு மேலே அதற்கான புஸ்தகங்களைப் பார்க்க இடமேற்படும்.

குரு-சிஷ்யாள் இரண்டு பேருமே விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ள 'பரிப்ரச்நம்' பெரிய தூண்டுகோல். வாத்யார் ஸ்டூடன்டைக் கேட்கிறாற் போலவே இவனும் அவரைக் கேட்கணும். இதிலேதான் புதுசு புதுசாக, இன்ட்ரெஸ்டிங்காக விஷயங்கள் வரும். (ஜே) க்ருஷ்ணமூர்த்தி இப்படித்தான் கேள்வி கேட்டு பதில் சொல்கிற ஸெஷன்ஸ் நடத்துகிறார், ஸ்வாரஸ்ய மாயிருக்கிறது என்கிறார்கள். நாங்களும் பாஷ்ய பாடம், வாக்யார்த்தம் என்று நடத்தும்போது, கேட்கிறவர்கள் புத்திசாலித்தனமாகக் கேள்வி கேட்கிறபோதுதான் ரஸம் கூடுகிறது. 'அடடா, இது நமக்குத் தெரியலையே! இப்படி நமக்குத் தோணலையே! இதுக்கு பதில் தெரிஞ்சுக்கணும்' என்ற ஆர்வம் பிறக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

வந்தார்கள். விச்வாமித்ராதி மஹரிஷிகள் வந்தார்கள். யாக்ஞவல்கியாதி மஹரிஷிகள் வந்தார்கள்... அவர்களுள் ஒருவராக மார்க்கண்டேய மஹரிஷியும் வந்தார். வரும்போதே சுற்றிப் பார்த்தார்... தான் வணங்கும்படியான தகுதியுள்ளவர்கள் யாராவது இருக்கிறார்களா என்று பார்த்தார். வசிஷ்டர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். வசிஷ்டரைக் காட்டிலும் உயர்ந்தவர் யாராவது உண்டா என்று பார்த்தார்... பார்த்தவர், வசிஷ்டரை வணங்கவேயில்லை. எல்லாரையும் விட்டுவிட்டு இந்த ஏழு வயது பிள்ளை பராசரரை விழுந்து விழுந்து வணங்குகிறார் மார்க்கண்டேயர்!

நடுங்கிப் போய்விட்டார் பராசரர். அவர் கையைப் பிடித்துக் கொண்டு, "இது என்ன விபரீதமான அனுஷ்டானம்!" என்று கேட்டார்.

"ஏழு கல்பத்தை வாழ்ந்த முனிவரான தாங்கள் எங்கே? ஏழே வயதான குழந்தையான நானெங்கே! என்னைத் தாங்கள் வணங்குவதா...!"

அதற்கு மார்க்கண்டேயர் அன்று சொன்ன பதில் என்னவென்றால், "ஒருவருடைய வயதை, அவர் வாழ்ந்த காலத்தைக் கொண்டு நிர்ணயம் பண்ணக்கூடாது. எதை வைத்து வயதை நிர்ணயிப்பது என்று கேட்டால்... ஒரு உதாரணம்:

– விவசாயி ஒருவன் இருக்கிறான்... தன்னுடைய நிலத்தைப் பயிரிட்டு, அறுவடை செய்து, நெல்லைக் கொண்டு வந்து களத்திலே அடித்து, அம்பாரமாகக் குவித்து வைத்திருக்கிறான். குவித்து வைத்த நெல்லை அவன் அப்படியே அளப்பதில்லை... குவித்து வைத்த பிற்பாடு ஒரு காரியம் நடக்கிறது. குவித்த நெல்லை முறத்திலே எடுத்து; நூற்றுதல் என்று ஒரு காரியம். நீளமாக நூற்றுதல்! நூற்றி, இப்படியும் அப்படியும் விசிற வேண்டும். விசிறினால் பதர், தும்பு, தூசு எல்லாம் அகன்று போய் விடும். நெல் மணிகள் இடையிலே தேறி நிற்கும். அதை மறுபடியும் சேர்த்து, அம்பாரமாகக் குவித்து, அளந்து எடுப்பார்கள்.

இதைப் போலத்தான்... ஒருவன் எத்தனை நாள் வாழ்ந்தான் என்பது முக்கியமல்ல... பகவத் ஸ்மரணையோடு அவன் வாழ்ந்தானா என்பதுதான் முக்கியம்! மீதி நாளெல்லாம் தூசியை மாதிரித் தள்ள வேண்டியதுதான்! அது வாழ்ந்த நாளாகவே ஆகாது.

அதனால்தான் மார்க்கண்டேயர் பராசரரைப் பார்த்துச் சொன்னார்:

"ஏழு ஜன்மங்கள் வாழ்ந்தாலும் பகவத் ஸ்மரணையோடு நான் வாழ்ந்த காலம் ஐந்து வருடம் தான்... ஏழு வயதே வாழ்ந்த நீ - ஏழாவது வயது நடந்து கொண்டிருக்கிறது - இந்த ஏழு வயதும் பகவத் ஸ்மரணையோடு இருந்து கொண்டிருப்பதனாலே, என்னைக் காட்டிலும் இரண்டு வயதுப் பெரியவனாகிறாய். அதனாலே உன்னை வணங்குகிறேன்..." என்றார்.

ஆகையினாலே, வயோ நிர்ணயம் என்பது பகவத் ஸ்மரணையை வைத்து ஏற்படுகிறதேயொழிய, பெரியவராயிருப்பதனாலே அல்ல. மகானாயிருந்தால், அவர் வயதில் சிறுவனானாலும் வணங்க வேண்டியவரே யாவார்.

இரண்டு பாகவதோத்தமர்கள் ஒருத்தரையொருத்தர் சேவிக்கிறபோது அந்த சேவை யாருக்குப் போகிறது என்று கேட்டால், அவர்கள் இருவருக்கும் நடுவிலே விஷ்ணு நிற்கிறான்; பகவான் நிற்கிறான்... அது அவருக்குத்தான் போகிறது. அந்த வணக்கத்தை அவன் ஏற்றுக் கொள்வதனாலே தோஷம் சம்பவிக்காது; அந்த பாகவதோத்தமர்களுக்கு ஏற்றம்தான் அதிகரிக்கும்.

அப்படிப்பட்ட உத்தமனான பரமாத்மா நம்மிடத்திலே நினைவு உடையவன். வாத்ஸல்யம் உடையவன்... நாமும் அவனிடத்திலே நினைவு உடையவர்களாய் இருத்தல் வேண்டாமோ!...

(தொடரும்)

**கலைஞர் - 75**



தமிழே உலக மானவர். உலகமே தமிழானவர். தமிழரைச் சிரிக்க வைப்பவர். தரணிக்கே தமிழைத் தருபவர்.

— நா. காமராசன்

# டோப் டெஸ்ட்!

பிரான்சில் ஜூன் 10-ம் தேதி முதல் ஜூலை 13-ம் தேதி வரை, உலக கால் பந்துப் போட்டி நடை பெற உள்ளது. இதில் விளையாடும் அணிகளுக்கு டோப் டெஸ்ட் செய்யப்படும். அதாவது அசாதாரணமான உடல் வலிமை பெற மருந்து உட்கொண்டிருந்தால் அவர்கள் ஆட்டத்திலிருந்து நீக்கப்படுவார்கள்.

1994-ல், அமெரிக்காவில் நடந்த உலக கால் பந்துப் போட்டியின் போது, பிரபல கால்பந்து வீரர் மாரடோனாவின் டோப் டெஸ்ட் ரிசல்ட் பாசிடிவ் என வர, அவர் குழுவிலிருந்தும், மொத்த போட்டியிலிருந்தும் நீக்கப்பட்டார்.

இந்த டோப் டெஸ்ட் எப்படி நடக்கிறது?

● போட்டி நடக்கும்போது இடைவெளியில் இரு அணிகளின் 22 வீரர்களின் பெயர்களும் தனித்தனிக் காகிதத்தில் எழுதப்பட்டு குழு வாரியாக, இரு பைகளில் போடப்படும்.



• மாரடோனா

ஒவ்வொரு பையிலிருந்தும் இரண்டு காகிதங்களை மட்டும், குலுக்கல் முறையில் எடுத்து தனித்தனி கவர்களில் சர்வதேச கால்பந்தாட்டக் கழகங்களின் (FIFA) கூட்டமைப்பு டைரக்டர் போட்டு வைப்பார்.

● ஆட்டம் முடிய 15 நிமிடம் இருக்கும்போது, அதிகாரிகளின் முன் இந்த கவர்கள் திறக்கப்பட்டு, டோப் டெஸ்டுக்கு உள்ளாகிற நான்கு வீரர்களின் பெயர்கள் அறிவிக்கப்படும்.

● இறுதி விசில் அடித்ததும் டோப் டெஸ்ட் செய்யப்பட வேண்டிய நாலு வீரர்கள் மட்டும், டிரஸ்ஸிங் ரூமிற்குள் செல்ல அனுமதிக்கப் படுவதில்லை. தனி இடத்திற்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர்.

● அங்கு ஒவ்வொரு வீரரிடமிருந்தும் தனித்தனி பாட்டில்களில் 200 மி. லிட்டர் சிறுநீர் சேகரிக்கப்படுகின்றது! பிறகு அவை, இரண்டாகப் பிரிக்கப்பட்டு இரு பாட்டில்களில் A, B, என லேபிள் போடப்பட்டு சீல் செய்யப் படுகிறது. சர்வதேச கால்பந்துக் கழகம் அங்கீகரித்துள்ளச் சோதனை சாலைக்கு A பாட்டில்கள் அனுப்பப்படுகின்றன.

● அதன் ரிசல்ட், 'பாசிடிவ்' என வந்தால் உடனே அதனை அதிகாரிகளுக்குத் தெரிவிக்கிறார்கள்.

● விளையாட்டுக் குழுக்களின் மேலாளர்கள் 'B' லேபிள் பாட்டிலையும் சோதிக்க வேண்டும் என்று கூறினால், அதுவும் உடனே சோதனைக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. இதன் முடிவை முதல் டெஸ்ட் எடுத்ததிலிருந்து 12 மணி நேரத்திற்குள் கூறிவிட வேண்டும்.

● இரு டெஸ்டுகள் நடக்கும் போதும் அதிகாரிகள், விளையாடும் இரு குழுக்களின் மேலாளர்கள், சிறுநீரை சோதனைக்குக் கொடுத்துள்ள வீரர்கள் ஆகியோர் அருகிலேயே இருக்கலாம்..!

● லேபிள் பாட்டிலை சோதிக்கும்போது புதிய நபர்களால் சோதிக்கப்படுகிறது. இதன் முடிவும் 'பாசிடிவ்' ஆக இருந்தால், உடனே உலகப் போட்டியை நடத்தும் குழுவிடம் இது தெரிவிக்கப்படுகிறது.

● இதுகுறித்து மேல் விசாரணைக்கு ஒரு கமிஷன் அமைக்கப்படுகிறது.

● இந்த கமிஷன் என்ன முடிவை எடுக்கிறதோ அதுவே இறுதி முடிவாக எடுத்துக் கொள்ளப்படுகிறது.

— வி. ஆர். கிருத்திகா

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623;
Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

